# சூறாவளி நடுவே

விவிலியக் கவிதை நூல் — யோவு ஆகமம்



# சூறாவளி நடுவே

(விவிலியக் கவிதை நூல்—யோவு ஆகமம்)

தமிழாக்கம்:

வை. அ. பொன்னையா

வெளியிடுவோர்:

ஐக்கிய ஆலயம்

67D, சாந்தோம் நெடுஞ்சாலை, சென்னை-600 028

*ஐக்கிய ஆலயம்*
*நூல் வரிசை* ***1***
***1976***

அச்சிடலாம்

(ஒப்பம்) ✠இரா. அருளப்பர்
*சென்னை–மயிலைப் பேராயர்*
*சாந்தோம்*
*2–8–1976*

PRINTED AT
THE DIOCESAN PRESS,
MADRAS—1977. B8539

## PUBLISHER'S NOTE

Aikiya Alayam is proud and happy to bring forth this book which is the first fruit of one of its research groups. It is also in the fitness of things that this very first publication should be the work of Bible Research because the authentic Word of God should be our first concern. True to the ideal of Aikiya Alayam, it is meant for inter-religious dialogue, namely to help non–christians read and appreciate Christian works and vice versa.

This translation is not one that is officially approved by the hierarchy for use in the liturgy, though when the People of God read it and have learnt to understand and appreciate it, it may achieve that status. A variety of translations in modern languages does serve a useful purpose to help readers to probe deeper into the Word of God. This book will help to fulfil this function. We are very grateful, therefore, to His Grace the Archbishop of Madras-Mylapore for his very encouraging foreword.

**IGNATIUS HIRUDAYAM S. J.**
DIRECTOR,
AIKIYA ALAYAM.

இரண்டாம்
வத்திக்கான்
சங்கத்துக்குப்
பல ஆண்டுகளுக்கு முன்பே
திருநூல் மொழிபெயர்ப்பில்
என்னை ஈடுபடுத்திய
அருட்பெருந்தகை
சென்னை — மயிலைப்
பேராயர்
இரா. அருளப்பர்
அவர்களுக்கு
எனது
அன்புக்
காணிக்கை

# அணிந்துரை

எபிரேய இலக்கியம் போற்றத் தக்க வகையில் வளர்ச்சி அடைந்த ஒன்று. தமிழ் இலக்கியமும் உலகம் போற்றும் அளவிற்கு உயர்ந்த ஒன்று. ஆதலின் எபிரேய இலக்கியத்தைத் தமிழிலே பெயர்க்கும் போது, மூல இலக்கியத்தின் அழகு, எளிமை, அணிநயம், ஓசைச் சிறப்பு, இலக்கிய நயம் முதலிய பல பண்புகளும் குன்ற வண்ணம் தமிழிலே செய்தால்தான் தமிழாக்கமும் சிறக்கும்; மூல எபிரேயத் தின் சிறப்பை ஓரளவாவது புரிந்துகொள்ள முடியும். மொழி பெயர்ப்பில் முதலிடம் பெறவேண்டியது மூலஆசிரியரது அனுபவம். அவர் கூற விரும்பும் கருத்தை மட்டும் மொழிபெயர்ப்பது ''எக்ஸ்ரே'' எடுப்பது போன்றது; இலக்கிய நயங்களும் விளங்கு மாறு மொழிபெயர்ப்பது நிழற்படம் எடுப்பது போன்றது. ''எக்ஸ்ரே'' படம் மருத்துவத்திற்குத்தான் பயன்படும். நிழற்படத் தையோ பல்லாற்ருனும் பாராட்டுவோம். ஆதலின் நிழற்படம் போன்ற மொழியாக்கங்கள் பல தோன்றிஞல்தான் நமது திருமறை நூலின் அருமை பெருமைகளை நாம் முழுமையாக உணர்ந்து பாராட்ட இயலும். இத்தகையதொரு அரிய மொழி பெயர்ப்பாக அமைந்துள்ளது திரு. வை. அ. பொன்னையா அவர் களது யோவு ஆகம மொழிபெயர்ப்பு எனின் மிகையாகாது.

இம்மொழி ஆக்க நூலில் சிறப்புக்கள் பல உள்ளன. அவற்றுள் சிலவற்றைச் சுட்டிக்காட்டிஞல் மூல நூலின் அருமை பெருமைகள் நன்கு புலப்படும். முதலாவது, இத்தகைய ஒரு தமிழாக்கத்திற்கு யோவு ஆகமத்தைத் தேர்ந்துகொண்டதே சிறப்பு; பாராட்டிற்கும் உரியது. ஏனெனில், இது பழைய ஏற்பாட்டு நூல்களிலே மிகத் தொன்மையான ஒன்று; விவிலியத்தில் மிகக் கடினமானதெனக் கருதப்படுவது. இந்நூல் மக்கள் யாவரது மனத்திலும் எழும் அடிப் படையான ஒரு கேள்விக்கு விடைகாணும் நூல். கடவுள் நம்பிக்கை உள்ளவஞயினும் இல்லாதவஞயினும் உலகிலே தீமையைக் கண்டு சிந்திக்கத் தொடங்கி விடைகாண முயல்கின்ருன். நன்மையே வடி வான கடவுள் தீமையுள்ள உலகத்தைப் படைப்பானேன்? தீமையை அனுமதிப்பானேன்? ஏன் துன்பதுயரங்கள்? பாவத்திற்குத் தண்டனை துன்பம் என்ருல் புனிதர்களும் துன்பத்திற்கு இலக்காதல் ஏன்? இத்தகைய கேள்விகள் அன்றுமுதல் இன்றுவரை மனிதனை வாட்டி

வரும் கேள்விகள். ஆகவே, தீமையைப் பற்றிப் பேசுகின்ற நூல் என்றுமே கருத்தைக் கவரும். யோவு ஆகமம் இக்கடினமான கேள்விக்குப் பதில் அளிப்பதால் அனைவராலும் வேண்டப்படும் என்று எதிர்பார்ப்பதில் 'தவறென்ன? இத்தகைய சிறப்பான நூல் சீரிய முறையிலே தமிழாக்கம் பெறுவது தமிழ் நாடும் தமிழ்த் திருச்சபையும் பெற்ற பெரும் பேறு எனலாம்.

இந்நூல் கடுமையான ஒரு நூல் என்று மேலே குறிப்பிட்டோம்; அதிலும் மிக அதிகமான அளவில் சிதைவடைந்த ஒன்று. ஆதலின் மொழியாக்கம் தரும் இடர்ப்பாடுகள் பலப்பல. இருந்தும் அதனைச் சீரான முறையில் ஆசிரியர் தமிழாக்கம் செய்துள்ளார். அதிலும் 'பொது நிலையினர்' எனப்படும் ஒருவரால் இப்பணி நிறைவேறி யிருப்பது மிகவும் போற்றத்தக்கது. பொது நிலையினர் இத்தகைய ஆக்க வழிகளில் போற்றத் தக்க பணிபுரிய முன்வந்தால் தமிழ்த் திருச்சபை புதுப் பொலிவும் வளமும் அடையும் என்று உறுதியாகக் கூற முடியுமன்றோ?

யோவு ஆகமம் மூலத்தில் ஒரு செய்யுள் நூல். அதனைத் தமிழிலும் செய்யுளாகவே வடித்திருப்பது அழகுக்கு அழகு செய்வதுபோலுள் ளது. போற்றத் தக்க வகையில் தமிழுக்குக் கிறிஸ்தவர்கள் தொண்டு பல செய்திருந்தாலும் 'கிறிஸ்தவத் தமிழ்' என்று இழித் தும் பழித்தும் கூறும் ஒரு நிலையில் நாம் இன்றும் இருக்கின்றோம். அத்தகைய பழியைத் துடைத்துப் புகழ் பரப்பத் தோன்றிய நூல் களுள் இதுவும் ஒன்று என்று கூறுவது மிகையாகாது.

கருத்தால் கடினமான நூல் யோவு ஆகமம். காலத்தின் சிதைவால் மேலும் கடினமாயிற்று அது. 'கவிதை' என்றதும் கடினம் என்று ஒதுக்கிவிடும் நிலையில் உள்ள பெரும்பாலானோர்க்குக் கவிதை யிலேயே ஆக்கித் தரப் பெரும் நெஞ்சுறுதி வேண்டும். பொழுது போக்கு நூல்களையே விரும்பிப் படிக்கும் இன்றைய மக்கள் இத் தகைய ஒரு படைப்பை வாங்குவார்களா, வாசிப்பார்களா, பயன் பெறுவார்களா என்றெல்லாம் எழும் கேள்விகள் எழுத்தாளனைத் திணறச் செய்யும் கேள்விகள். ஆனால் ஆதாயத்தை நம்பாமல் ஆண்டவன் திருப்பணியே கருத்தாகக்கொண்டு இத்தகைய முயற்சி யில் ஈடுபட்டு வெற்றியும் கண்டிருக்கும் ஆசிரியரைப் பாராட்டா மல் விடுவது எங்ஙனம்?

அதிக அளவில் சிதைவு அடைந்துவிட்ட பகுதிகளை மூலத்தில் உள்ளவாறே மொழிபெயர்ப்பதில் இடர்ப்பாடுகள் தோன்றும். அப் போது ஓரளவு மாற்றிப் பொருள் உரைப்பது மரபு. ஆனால், எபிரேய மூலத்தில் உள்ளதை உள்ளவாறே தமிழாக்கம் செய்யும் போது பொருள் பளிச்செனப் புலப்படும் இடங்கள் பலவற்றை அறிந்து அவ்வாறே மொழிபெயர்த்துச் சிறப்பூட்டியுள்ளார்

மொழிபெயர்ப்பு ஆசிரியர். அறிஞர்களுக்கும் உதவக்கூடிய ஆக்க வேலை இது. உதாரணமாக, ''இருண்டிடும் பகல் என . . .'' (3:5), ''உள்ளதைச் சொன்னால் நொள்ளாப்பு'' (6:25), ''முள்மேல் போட்டுவிட்டு எடுப்பவனானன்'' (5:5) முதலிய பலவற்றைக் குறிப்பிடலாம்.

ஒவ்வோர் அதிகாரத்தையும் ஊன்றிப் படித்து உணரத் தக்க பல குறிப்புக்களையும் மொழிபெயர்ப்பு ஆசிரியர் ஆங்காங்கே தந்துள்ளார். அது சிறப்புக்களுக்குச் சிறப்பு நல்குவதாகும்; நாம் படிப்பதற்கு நற்றுணை புரியும் என்பதில் ஐயமில்லை. ஒவ்வோர் அதிகாரத்தின் துவக்கத்திலும் அவ்வதிகாரத்தின் கருத்தைச் சுருக்கமாகத் தருகின்றார். சில அதிகாரங்களில் உட்பொருள் விளக்க உரைகள் அமைந்துள்ளன. சுவையான பல குறிப்புக்கள் நமது பொது அறிவு விளக்கம் பெறும் வகையில் நிறைந்துள்ளன. புராணக் கதைகள் வரும் இடங்களில் அவற்றுக்கு இணையான தமிழ்ப் புராணங்களைக் குறிப்பிடுகின்றார்.

மொழிபெயர்ப்பு மூல ஆசிரியனின் கருத்தை மட்டும் அன்றி அவனது அனுபவத்தையும் உணர்த்தினால்தான் வெற்றி பெற்றதாகக் கூறமுடியும். புலவன் இலக்கிய நயங்களைக் கையாளும் முறையில்தான் தன் அனுபவத்தை வாசிப்பவருடன் பகிர்ந்துகொள்கின்றான். பேச்சு வழக்கு, மரபு வழக்கு, இலக்கிய முறை முதலியவை மொழிக்கு மொழி மாறும். ஆதலின் மொழிபெயர்ப்பில் நமது பேச்சு வழக்கு, மரபு வழக்கு, அணி வகைகள், இலக்கிய நயங்கள் முதலியவை இடம் பெற்றால்தான் மூல நூலின் அனுபவமும் அழகும் நமக்குக் கிட்டும். இம்மொழியாக்கம் இவ்வுண்மையைப் பெரிதும் போற்றியிருப்பது படித்து இன்புறத் தக்கது. பல இடங்களில் மூலத்திற்குக் குறை ஏற்படா வண்ணம் நமது இலக்கிய வழக்குகளைக் கையாண்டு நமக்கு இலக்கிய விருந்தூட்டுகின்றார் ஆசிரியர். உதாரணமாக, ''தாய் பிள்ளைகள்'', ''சும்மா'', ''சீயக்காய்ப் பொடி'' முதலிய தமிழ்ப் பேச்சு வழக்குகளை ஆங்காங்கே கண்டு மகிழ முடிகின்றது. 11:20இல் அந்தாதித் தொடையைக் கண்டதும் நாம் அடையும் மகிழ்ச்சி பெரு மகிழ்ச்சி.

''கடந்து நடப்பார், காண்கிலேன் அவரை;
நடந்துமேற் செல்வார், நான்உணர் கில்லேன்.
பறிப்பார், அவரை எவன்தடுப் பானும்?
'என்ன செய்கிறீர்?' என்றுகேட் பானும்?'' (9:11,12)

என்றெல்லாம் வரும் கண்ணிகளை வாசிக்கும்போது ஒரு மூல நூலை வாசிப்பது போலவே உள்ளதன்றி ஒரு மொழிபெயர்ப்பு நூலையோ வெளி நாட்டுச் சரக்கையோ வாசிப்பதாக நமக்குத் தோன்றுவதில்லை.

ஆராய்ச்சியாளர்களுக்குத் துணைபுரியக் கூடிய பல குறிப்புக்களும் காணப்படுகின்றன. ஒன்றுக்கு மேற்பட்ட பாட(பேத)ங்கள் இருந்தால், இப்படியும் ஆக்கலாம் என்று மாற்றுத் தருகின்றார். மொழி அடிப்படையில் ஆங்கிலத்தைக் காட்டிலும் தமிழ் எபிரேயத்தோடு நெருங்கிய ஒப்புமையுடையது என்று காட்டுகின்றார் (காண்க 9:25). ஆங்கில மொழிபெயர்ப்புக்கள் பலவற்றை ஒப்பிட்டு அவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளைக் குறிப்பிட்டு ஏற்றம் பெறுவது எது என்றும் ஆங்காங்கே குறித்துச் செல்கின்றார்.

இம் மொழியாக்கத்தின் சிறப்புக்களை எல்லாம் கூறிவிடுவது இவ் அணிந்துரையின் நோக்கம் அன்று. இந்நூலைக் கருத்துடன் படிப்பு வர்கள் இதனை ஓர் இலக்கியக் களஞ்சியமாகவே போற்றுவார்கள் என்பதில் ஐயமில்லை. கவர்ச்சிகரமான தலைப்புக்களை அதிகாரங் களின் பெயராய்ச் சூட்டியும், ஓசை நயம் படைத்த கண்ணிகளை அமைத்தும், இவைபோன்ற பல நலன்களைத் தாங்கியும் வெளிவரும் இந்நூல், கிறிஸ்தவர்க்கு மட்டுமன்றிப் பிற மறையோருக்கும் இலக்கிய விருந்தாக அமையும். இத்தகைய இனிய இலக்கிய நயங்கள் மலிந்த இந்நூலைத் தமிழ்கூறும் நல் உலகம் விரும்பி வர வேற்கும் என்பது எனது நம்பிக்கை.

சிறந்த நலன்கள் பாற்கடலெனப் பொங்கி வழியும் இந்நூலைப் பலரும் படித்து இலக்கிய இன்பமும் ''துன்பம் ஏன்?'' என்ற கேள் விக்கு விடைகாணும் பயனும் பெறுவார்களாக. இத்தகைய பல நூல்களை இன்னும் ஆக்கித் தரத் திரு. பொன்னையா அவர்களுக்கு இறைவன் நீடிய ஆயுளையும் நிரம்பிய நலனையும் நல்குவானாக.

சாந்தோம் (ஒப்பம்) ✠ இரா. அருளப்பர்,
16–6–1976 சென்னை–மயிலைப் பேராயர்.

# முகவுரை

இறைவன் அடியார் இன்னல் படுவது ஏன்? பிறர் நலம் பேணும் பெருந்தகையாளர் கண்ணில் நீர்வார்வது ஏன்? அடுத்தவர் துன்பம் துடைப்பதே தம் இன்பம் என வாழ்வோர் அல்லலுறுவது ஏன்? பிறன்மனை நோக்காத பேராண்மையாளர்க்கு ஏன் கிலியும் நடுக்கமும்? ஏழை பங்காளனுக்கு ஏன் கோழைபோல் ஒடுங்க வேண்டிய நிலை? செல்வமும் செல்வாக்கும் சீரும் சிறப்பும் செம்மையான உள்ளமும் இல்லற நல்வாழ்வும் உடைய சீமான் ஒருவர் செல்வம் போய், செல்வாக்குப் போய், மக்களையெல்லாம் இழந்து, தீராக் கொடும் பிணிக்கு இரையாகி, மனைவியின் மதிகெட்ட சொல்லுக்கு இலக்காகி, தேற்ற வந்த நண்பர்களின் தெரியாத்தனமான தூற்றலுக்கு ஆளாகித் துவள்கின்றார். இவர் தாம் யோவு. இவர் தம் உள்ளக் குகையில் கப்பிய இருளினைப் படம் பிடித்து, அவ்விருளினூடு அவர் கண்ட அருள் ஒளியைச் சுட்டிக் காட்டுவதே யோவு ஆகமம் என விவிலியத்தில் வரும் இந்நூல்.

நூலுக்கு உரைநடையில் முன்னுரை ஒன்றும் முடிவுரை ஒன்றும் உள்ளன. இடையில் மிகப் பெரும்பான்மையும் செய்யுள் நடையிலே செல்கின்றது நூல்.

யோவு என்ற நல்லார் அரேபியாவுக்கும் ஏதோமுக்கும் இடைப் பட்ட எல்லையில் பிதாமகர்கள் காலத்தில் (ஏறக்குறைய கி.மு. 2000) வாழ்ந்த பெயர்பெற்ற பெருமகன்; யூதர் அல்லர்; கடுஞ் சோதனைகள் வந்தபோதும் கடவுள் நம்பிக்கையை இழக்காமல் இருந்த மெய்யான பக்திமான். அவரது வரலாற்றை அடிப்படையாக வைத்து ஆசிரியர் புலவர் பெருமகன் கவிதை நயம்பட இந்நூலை இயற்றியுள்ளார்.

உலகப் பேரிலக்கியங்களுள் ஒன்று என அறிஞர்கள் போற்றும் இந்நூல் கி.மு. 500 வாக்கில் எழுதியதாக வேண்டும் என்பது பொதுவாக அறிஞர்கள் ஒப்புக்கொள்ளும் கருத்து. ஆசிரியர் யூதர். இவர் பாலத்தீனத்தில் வாழ்ந்தவர் என்றாலும் பிற நாடுகளையும், சிறப்பாக எகிப்து நாட்டையும் சென்று கண்டிருப்பார் என்று தெரிகின்றது.

நூலின் கதை என்ன? கதாநாயகர் யோவு சீரும் சிறப்புமாக வாழ்ந்து வருகின்றார். கடுந்துன்பம் உற்றாலும் இவரது பக்தி

அழியாது என்று காட்ட இறைவன் இவரைச் சோதிப்பதற்கு மாற்றானை அனுமதிக்கின்றார். யோவு தம் பத்துப் பிள்ளைகளையும் உடைமைகள் அனைத்தையும் ஒருசேர இழக்கின்றார். ஆயினும், கடவுள் கொடுத்தார் கடவுள் எடுத்தார் என்று கலங்காமல் இருக்கின்றார். அதன்பின் அவருக்கே அருவருப்பான நோய் உண்டாகின்றது. கடவுளை (இடக்காக) வாழ்த்திவிட்டுச் செத்துத் தொலைவதுதானே என்கிறாள் மனைவி, வந்து. 'அவளை யோவு அமைதியாகக் கண்டிக்கின்றார், புத்தி கெட்டவள் என்று. இந் நிலையில் ஏலிப்பாசு, வில்தாது, சோப்பார் என்னும் நண்பர்கள் வருகின்றார்கள். ஆறுதல் கூற வந்த இம் மூவருக்கும் யோவுக்கும் நடக்கும் உரையாடலே நூலின் பெரும் பகுதியாகும்.

ஏலிப்பாசு வயதுசென்றவருக்கு உரிய முறையில் அளவோடு பேசுகின்றார்; என்றாலும் அனுபவத்தால் பெற்ற கண்டிப்பும் உறுதியும் விளங்கக் காண்கின்றோம். சோப்பார் பேச்சில் இளமைத் துடிப்பும் பரபரப்பும் உள்ளன. வில்தாது பேச்சு சாதாரணம்.

வினை விதைத்தவன் வினை அறுப்பான்; துன்பத்துக்குக் காரணம் பாவம்; யோவு தம்மைக் குற்றம் அற்றவராக எண்ணிக்கொள்ளலாம்; ஆனால் யாவும் அறியும் கடவுளுக்குத் தெரியும்; எனவே யோவு வீணாக அலட்டிக்கொள்ள வேண்டாம் — இதுதான் நண்பர்கள் கூறிய ஆறுதல். இதனை மறுத்து யோவு பேசியதும் அவர்கள் வாதம் பிடிவாதமாக மாறுகிறது. தமது வாழ்க்கையைப் பார்த்தாலும் உலக அனுபவத்தை நோக்கினாலும் அவர்களுடைய வாதம் செல்லாது என்று யோவு எவ்வளவோ எடுத்துச்சொல்கிறார். தம் மனம் தமக்குத் தெரியும் என்று சுட்டிக்காட்டி, நீதி தவறாத கடவுளுடைய படைப்பில் நல்லார் அல்லற்படும் மர்மம் யாதோ என விடை தெரியாமல் மயங்குகின்றார். உடம்பின் நோவோடு உள்ளத்தின் வேதனை. உடம்பு வலியால் துடித்து அடங்குவது போல, உள்ளமும் குமுறி எழுவதும் அடங்குவதுமாக அலைக்கழிக்கப்பட்ட துரும்பெனத் தத்தளிக்கின்றது. இந்நிலையில் யோவு உள்ளத்தில் பளிச்சிடும் மகா விசுவாசத்தை 19ஆம் அதிகாரத்திலும், கொடுமை செய்தறியாதவர் என அவருக்கு இருக்கும் உறுதியை 31ஆம் அதிகாரத்திலும் காணலாம்.

இப்போது எலியூ என்னும் ஒருவர் புதிதாகப் பேச்செடுக்கிறார். யோவு சொல்வதும் தவறு, நண்பர்கள் சொல்வதும் பிழை என்று கூறி, கடவுளுடைய வழி சரி என்று காட்டச் சொற்பெருக்கு ஆற்றுகின்றார். கடவுளே அவரது பேச்சை நிறுத்தி, கடவுளுடைய காட்சிக்கு ஏற்றதாகப் பழைய மரபு கூறும் சூறாவளி நடுவணிருந்து அருளி யோவினுடைய வினாவுக்கு விடையளிக்கின்றார். அதனை விடை என்று நமது தருக்க முறைப்படி சொல்வது பொருந்தாது. எனினும்

கடவுள் உணர்த்த உணர்ந்த யோவு—தமது "சிந்தையும் மொழியும் செல்லா" அந் நிலைமையை இறைவனருளால் கண்ட யோவு—தமது பேச்சின் அறியாமையை ஒப்புக்கொண்டு அமைவுறுகின்றார். கடவுள் யோவின் நண்பர் மூவரையும் உண்மை பேசாதவர்கள் எனக் கடிந்து கொள்கின்றார்; யோவுக்கு மீண்டும் மக்கட்பேறு வழங்கி அவருடைய உடைமைகளை முன்னிலும் இரு மடங்காக மீட்டுத் தருகின்றார். இதுதான் கதை.

நூலின் சில பகுதிகள் முதல் நூல் ஆசிரியரின் எழுத்தாக இருக்க முடியாது என்ற ஐயம் தோன்றியுள்ளது. ஞானம் எங்கே என வினவும் 28ஆம் அதிகாரம் யோவின் வாய்மொழியாக வருவது பொருத்தமாக இல்லை என்பர். ஏனெனில் கடவுள் கூறவிருக்கும் விடையை இதுவே எதிர்பார்ப்பதாக உள்ளது. எனினும், ஐயமாக எதிர்பார்ப்பது வேறு, நேரில் பட்டறிவதுபோன்று உள்ளூரக் கடவுளே உணர்த்த உணர்வது வேறு என்று, அந்தத் தடைக்கு விடை கூறி விடுக்கலாம். அஃது எப்படியிருப்பினும், 28ஆம் அதிகாரமும் இந்நூலின் கருத்துக்கு இசைந்ததேயாகும். "இடைச் செருகல்" என்று சொன்னாலும் நூலாசிரியரின் அடி ஒற்றிச் சென்ற புலவர் ஒருவரது படைப்பாகவே அது விளங்குகின்றது. கடவுளுடைய மறுமொழியாக உள்ள 38–41 அதிகாரங்களையும் "இடைச் செருகல்" என்பார் உளர். நூலின் உட்கருத்தை உணராத அறியாமையினால் உண்டாகும் ஐயம் இது. 38–41 அதிகாரங்கள் முந்தி நடந்த வாதங்களையெல்லாம் புறக்கணித்து ஒதுக்கிவிட்டுச் செல்கின்றனவே என்றால், ஆம் அதுவே ஆசிரியரின் கருத்து என்க. மனிதனுடைய நிலையிலிருந்து விடை காண முயன்றால் வாராது, இறைவனுடைய நிலையிலிருந்துதான் விடை கிட்ட வேண்டும் என்பதே நுண் பொருள்.

24,26,27ஆம் அதிகாரங்களின் கண்ணிகள் தாறுமாறாகக் கிடப்பது உண்மை என்று ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். படி எடுத்தவர்களின் பிசகாக இருக்க வேண்டும் என்பர்.

எலியூவின் பேச்சும் (32–37 அதிகாரங்கள்) இடைச் செருகல் என்பார்கள். இவரைப் பற்றிய குறிப்பு முன்னும் இல்லை, பின்னும் இல்லை. எப்படி வந்தார் இவர் இங்கு? விடை இல்லை. பின்னர் என்ன ஆனார்? தெரியவில்லை. மேலும், கடவுள் கூறப்போகும் உண்மைகள் பல இவர் வாயிலாக வருகின்றன. இந்த ஆறு அதிகாரங்களில் காணும் சொல்லும் நடையும் வேறுபடுகின்றன என்றும் சுட்டிக் காட்டுவர். எனினும், இந்த அதிகாரங்களும் இறைவனருளால் இயற்றப் பெற்ற முழு நூலின் ஒரு பகுதியே; நூலின் அருள்வாக்குக்குத் துணை செய்பவையே.

இன்னொரு முறையில் பார்த்தால், இடைச் செருகல் பற்றிய இந்த விவாதங்களெல்லாம் அர்த்தமற்றவையாகும். எப்படி? விவிலியத்தின் நூல்கள் பலவும் தனித் தனியே ஆசிரியர் ஒருவர் இயற்றியவை அல்ல; பலர் சேர்ந்து இயற்றியவையாகும். பண்டைய மத்திய கிழக்கு இலக்கியங்களின் படைப்பும் இப்படியே. யோவாகமும் இதற்கு விதி விலக்கு அன்று என்பது அறிஞர்கள் கருத்து. எனினும், உரையாடற் பகுதியாகச் செய்யுள் நடையில் செல்லும் பகுதி முழுவதும் (3–31 அதிகாரங்கள்) கவிஞர் ஒருவரின் கைத்திறனே என்பது அனைவரும் ஒப்புக்கொள்ளும் ஒன்று.

ஆகவே, ஒருவர் இயற்றியதாயினும் பலர்தம் படைப்புக்களின் தொகுப்பு ஆயினும் நூல் ஒருமைப்பாடு உடையது என்பதே முக்கியம். நூல் முழுவதையும் ஒருசேர நோக்கிக் கணிக்கவேண்டும். அப்படிப் பார்க்கும்போது, அது ஒரு நாடகக் காட்சி நல்குகின்றது. முதலில் திரை மேலெழுந்ததும் யோபும் அவர்தம் வசதியான வாழ்வும் பளிச்சிடக் காண்கின்றோம். திடுமென அடுத்த காட்சி நம்மை விண்ணகத்துக்குக் கொண்டுசெல்கிறது. மனிதனைக் கெடுக்க முயலும் தீய சக்தி எப்படியும் யோபைத் தொலைத்திட முடியும் என்று இறைவனோடு பந்தயம் வைத்து அதற்கு அனுமதியும் வாங்கி விடுகிறது. அடுத்து மூன்றாவது காட்சி; யோபின் வாழ்வில் இடி விழுகிறது. பார்த்துத் தேற்றிப் போக வந்த நண்பர்கள் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவோராக மாறுகின்றனர் நாலாவது காட்சியில். இதுவே நம் கருத்தை ஈர்க்கும் நீண்ட உரையாடற் காட்சி. யோபு தம்முடைய நண்பர்களுக்குத் தெரிந்தது தமக்கும் தெரியும் எனினும் தமக்கு வந்திருக்கும் வேதனைக்கு இந்த அறிவினால் விளக்கம் இல்லையே என்று மறுகக் காண்கின்றோம். அவர் தமது மாசின்மையை இறைவன் திருமுன்னும் எடுத்துரைக்க முடியும், அதற்குக் கடவுள் என்ன பதில் சொல்வார் என்கின்றார். நமக்கும் அந்தப் பதிலைக் கேட்க வேண்டுமென்ற ஆர்வம் உண்டாகின்றது. இதற்கு முன்னேற்பாடு செய்வதாக வருகின்றது அடுத்த காட்சி; காட்சி என்பதைவிட இடைவேளைப் பாட்டு என்று சொல்லலாம். அது ஞானத்தின் மேன்மையை எடுத்துப் பேசும் ஞானப் பாமாலை. கடவுள் பதில் சொல்லப்போவது எளிதான கேள்வி அன்று என்பதை நம் மனத்தில் ஆழமாகப் பதிக்க அமைந்துள்ளது அடுத்த காட்சி. இக்காட்சியில் யோபு தமது முன்னைய உயர்வையும் இன்றைய இழிவையும் கல்லும் கரையுமாறு எடுத்துரைக்கின்றார். அருமையான காட்சி. நாமும் உருகுகின்றோம். நிலை கலங்கும்படி உருகிவிட வேண்டாம் என்பதுபோல் வருகின்றது அடுத்த காட்சி. இதுதான் எலியூ பேசும் காட்சி. இது பின்னர்க் கடவுளுடைய விடையாக வரப்போகும் இரத்தினச் சுருக்கமான மணிமொழி வருணனைகளுக்கு ஒரு முன் விளக்கம்போல் அமைந்துள்ளது; ஆழ்ந்து

கருத்தும் பழக்கமும் பக்குவமும் இல்லாதவர்களுக்கு ஆர்வாரப் பேச்சோடு எடுத்துக்காட்டி உணர்த்துவதுபோல் அமைந்துள்ளது. இறுதியாகக் கடவுள் காட்சி. உள்ளக் குகையிலே வேதனை என்னும் சூறுவளி நடுவே மனித வாழ்க்கையின் மர்மத்தை யோவு உணர் கின்ருர். தம் அறிவாலும் பிறர் விளக்கங்களாலும் உய்த்தறி வதைவிட உள்ளத்தின் உள்ளே உயிருக்கு உயிரான இறைவனிட மிருந்து உணர்ந்தறியும் இந்த அனுபவம் அவருக்கு அமைதி அளிக் கின்றது. பணிந்த பக்குவநிலை அடைகின்ருர். கடைசிக் காட்சி யோவின் விசுவாசத்தைப் பாராட்டிக் கடவுள் அவருக்கு முன் னிலும் இரு மடங்கு நன்மை புரிவதைச் சுட்டும் காட்சி. நிறை வாழ்வு வாழ்ந்து நரைமூதாளராய்ப் பழுத்த பழமாய் யோவு விழத் திரையும் விழுகிறது. எழுகிறோம்.

ஏன் என்று விளங்காதபோதும் கடவுள் நம்பிக்கையைக் கைவிட லாகாது; கடவுளை நம்பினோர் கைவிடப்படார்—என்னும் அருள் வாக்கு உடைய நூல் இது. மனிதனுக்குக் கடவுள் தம்மைப் படிப் படியாக வெளிப்படுத்தியருளிய வரலாற்றின் அந்தக் காலக் கட்டத் தில் நூலாசிரியருக்கு முற்ற முடிந்த கருத்து இதுவே. ஆன்மீக வாழ்க்கையில் கடும் புயலில் சிக்கி மீண்டவரே இந்நூலை எழுதி யிருக்க முடியும்.

இந்நூலினைப் படிக்கும் இந்தியர் ஒருவர் மனத்தில் கருமம், மறு பிறப்பு ஆகிய கொள்கைகள் நினைவுக்கு வராமல் போகா. துன்பம் எல்லாம் பாவத்தின் பயனே என்றால், யோவு தமது துன்பத்துக்கு அது விடை ஆகாதே என்று அழுத்தம் திருத்தமாகக் கூறிவிட் டார். அது மட்டுமன்று. ''குறையா வலிமையும் எல்லா வசதியும் நிறைவாம் உளத்தொடும் இறக்கிறான் ஒருவன் . . . இன்னொருத் தனோ இன்பமே இன்னதென்று அறியான் கசந்த அகத்தொடு மடிகிறான்'' (21:23,25) என்று கூறி ஏன் ஏன் என்கிறார். ''கொள்ளையர் வீட்டார் கொழிப்பார் செல்வம், கடவுளைச் சினந்து எழச் செய்வார் வாழ்வார், அவர்தம் கையில் அடங்கியபடியே. விலங்கினம் வினவுக, படித்துக் கொடுக்கும்; விண்ணின் புள்ளினம் அவையும் சொல்லும். மண்ணொடு பேசுக, கற்றுக்கொடுக்கும்; ஆழியின் மீன்கள் அவையும் சொல்லும். எவைதாம் அறியா இவற்றையெல்லாம் கடவுள் கையின் காரியம் இது என?'' (12:6–9) என்றும் யோவு கூறி மயங்குகின்றார். இறைவனது படைப்பின் இந்த மர்மம் என்னே என்று அங்கலாய்க்கின்றார். அவருக்கு ஆறுதல் கூறச் சென்ற நண்பர்களோடு நமது நாட்டு அறிஞர் ஒருவரும் இருந்திருந்தால் என்ன சொல்லியிருப்பார்? ''தீதும் நன்றும் பிறர்தர வாரா; நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன'' என்ற கொள்கையை யோவின் நண்பர்களைப்போல் அடிப்

பட்டையாகப் பற்றி நின்று ''திறவோர் காட்சியில் தெளிந்த'' மறு பிறப்புக் கொள்கையை எடுத்துக்கூறித் தேற்றியிருப்பார் என்றால் மிகையாமோ?

இதற்கு யோவு என்ன சொல்வார்? மற்ற நண்பர்களுக்குச் சொன்னதையே இவருக்கும் சொல்வார் என்பது திண்ணம். ஏன்? அவரது கேள்வி இந்தக் காரண காரிய வாதங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டது. ஆதலால் அவர் கருமம், மறுபிறப்பு முதலிய கொள்கைகளை மறுத்துரைக்கப் புகாமல், தமது கேள்வி யாருக்கும் புலப்படவில்லையே என்றுதான் மீண்டும் மாழ்குவார். ''உயிர் வாழ் வனவெலாம் அவர்கை யினவே; ஊனவர் அனைவர்தம் மூச்சும் அவ்வாறே . . . ஆற்றலும் செயலும் அவரோடு உள்ளவை; பேதையும் புரட்டனும் அவர்பா லவரே'' (12:10,16). ''மனிதனை எதிர்த்தா மனக்குறை எனக்கு? பின்னை நான் பொறுமை பிழைத்த லாகாதோ?'' (21:4). ''நான்—பரமனோடு உரையாட விரும்பினேன், கடவுளோடு எதிர்வாதம் புரியவே'' (13:3). இத்தகைய அவர் தம் கூற்றுக்கள் அவரது மன உளைச்சல் எப்படிப்பட்டது என்று உணர்த்துகின்றன. இறைவனோடு மல்லுக்கு நின்று வென்ற யாக்கோபு போல (ஆதியாகமம் 32:25—30), யோவு தமது வழக்கு வெல்லும் என்ற உறுதியுடன் விளங்குகின்றார். ''ஆராயலாம் அங்கு அவரொடு நேர்மையான்; சீராய் நீதி வெளிப்படச் செய்கு வேன்'' (23:7) என்பது அவரது உறுதி. ஆதலால் நமது நண்பரது காரண காரிய வாதங்களின் சமாதானத்தைக் கேட்ட பிறகும் அவர் உள்ளம் அமைதி காணாது. இவ்வகையில் யோவு நமது நாட்டு அருளாளர்களைப் போன்றவர். எடுத்துக்காட்டாக, தாயுமான வரைக் குறிப்பிடலாம். தாயுமானவர் முன்னை வினைக் கொள் கையை மறுத்தவர் அல்லர்; அவர்,

> ''என்னைஇன தென்றறியா ஏழைக்கும், ஆகெடுவேன்,
> முன்னைவினை கூடல் முறையோ பராபரமே?''

என்றும்,

> ''நினையும் நினைவும் நினையன்றி யில்லை; நினைத்திடுங்கால்
> வினையென் றொருமுதல் நின்னையல் லாது விளைவ
> துண்டோ?''

என்றும் இறைவனை நோக்கி முறையிடுவது யோவின் புலம்பலை ஒத்ததே. ஆகவே, இந்நூலின் கருப்பொருள் மனிதனது சிற்றறி வின் நுண்மாண் நுழை புலத்துக்கெல்லாம் எட்டாத மேம்பட்ட ஒன்றில் சிக்கித் தவிக்கும் சிறந்த பெரியோர்களின் செய்தியாகும்.

இக்காலத்தில் மனிதன் இயற்கை விதிகள் பலவற்றை உய்த் துணர்ந்து அவற்றைப் பயன்படுத்தி அரிய பெரிய செயல்கள் புரியும் திறன் பெற்றவனாக விளங்குகின்றான். இந்நிலையில் இந்நூலில்

கடவுளுடைய ஆற்றலைச் சுட்டும் கேள்விகள் பல, மேம்போக்காகப் படிப்பவர்களுக்குப் பொருளற்றவையாகப் படும். ஆயின் நுணுகி நோக்கினால் அவை என்றும் பொருத்தமான கேள்விகளே. கடவுளுடைய கரை காணாத ஆற்றலைச் சுட்டும் கேள்விகளே ஒழிய ஆக்கும் கேள்விகள் அல்ல அவை. எனவே, இக்காலத்தில் வேறு கேள்விகளினால் அதனைச் சுட்டிக் காட்ட வேண்டியதாகலாம். ஆனால் விடை ஒன்றே. அதுதான் மனிதனது இறுதிக் கதி. ஆகவே இந் நூலிலுள்ள அக்கேள்விகள் மனிதனது விஞ்ஞான ஆர்வத்தைத் தூண்டுவதற்கான கேள்விகள் அல்ல; மெய்ஞ்ஞானம் உணர்த்தும் கேள்விகளாகும். இந்நூலின் உட்பொருள் இயற்கைக்கும் இவ்வுலகத்துக்கும் அப்பாற்பட்ட இறுதிக் கதி பற்றியதாகும்; அப்பாற்பட்டதாயினும் அது இயற்கையிலும் இவ்வுலகத்திலும் உள்ளூரப் பொதிந்து கிடப்பதே என்பதை நாம் ஒருநாளும் மறந்திடுதல் கூடாது.

யோவு ஆகமத்தின் சிற்சில பகுதிகளிலே மிகச் சிறந்த கருத்துக் கருவூலங்களைக் காண்பதைக் காட்டிலும் நூல் முழுவதும் நுவல்வதென்ன என்று உற்றறிவதே சால்புடையது. இவ்வாறு நோக்கும்பொழுது என்ன பார்க்கின்றோம்? இங்கே முளைக்கின்ற கேள்விகள் மனிதனாய்ப் பிறந்தவன் ஒவ்வொருவனது உள்ளத்தையும் உறுத்தும் கேள்விகளாகும். இவற்றுக்கெல்லாம் அவன் என்ன விடை காண்பான்? நட்பு என்றும் நலம் என்றும், வீடு என்றும் நாடு என்றும், மண் என்றும் பெண் என்றும், பொன் என்றும் புகழ் என்றும் ஒவ்வொருவர் உள்ளக் குகையிலும் சின்னச் சின்ன வண்ண ஓவியங்கள் வீற்றிருக்கின்றன. ஆனால் அவற்றைப் பார்த்து மகிழும் மனிதன் அவற்றின் நிலையாமையையும் உணர்கின்றான். ''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்'' என்றபடி அவ்வளவு இன்றியமையாததாக இருக்கும் உடம்பும் அழிகின்றது. அழியாதது ஒன்றுமில்லை. நேற்று இல்லாதது இன்று தோன்றுகிறது, நிலைப்பதுபோல் அதனை நினைக்குமுன்பே மறைந்துபோகின்றது. தோற்றம், நிலை, மறைவு என்ற இந்த விதிக்கு உட்படாதது ஒன்றுமில்லை. ஆக்கியும் அளித்துக் காத்தும் அழிக்கின்ற இந்த விதி அழுதாலும் போவதில்லை, தொழுதாலும் விடுவதில்லை. எல்லாவற்றுக்கும் ஆதியும் அந்தமுமான இம் முழுமுதற் பரம்பொருளை விடுத்து வேறு எதனையும் பற்றிக்கொள்வதில் பயனில்லை. கடவுள் பற்றே நிலைக்கக் கூடியது; பிற பற்றுக்களெல்லாம் பற்று விட்டுப் போம். அவர்தாம் கொடுப்பவர், அவர்தாம் எடுப்பவர். அவரிடம் வைக்கும் நம்பிக்கை ஒன்றுதான் காலம் என்னும் கரையானுக்குக் கட்டுப்படாததாகும். கொடுத்து எடுக்கும் இவரிடம் பற்றுறுதி கொள்வது எப்படி?

மனிதன் தன்னையும் தன் தலைவனையும் உணர்வதற்கு உண்டாகும் தூண்டுதல்கள் பல. ஆயின் பெரும்பாலும் மனிதன் அதிர்ச்சி

மருத்துவத்துக்கே ஆளாகின்றான். எண்ணியதெல்லாம் இடிந்து நொறுங்கக் கண்டு திகைக்கின்றான். உள்ளக் குகையில் போற்றி வந்த வண்ணச் சிலைகள் உடைபடுகின்றன. அவற்றின்மீது இருந்த அவா விடுபடுகின்றது. 'விட்டேன், துறந்தேன்' என்னும் விரக்தி மேலெழுகின்றது. உள்ளமும் உயிரும் வெறுத்து இனி வாழ்வே இல்லை என ஒடுங்கி வேதனையுறுகின்றான். எதனை நம்பி என்ன பயன் என்ற எண்ணம் காரிருளாக வந்து கப்புகின்றது. அக் காரிருளுக்கும் அப்பால் செல்லும் மனிதன் 'எல்லாம் வல்லவர் திருவுளம்' என அமைகின்றான். அச்சமும் வெறுப்புமாகக்கூடத் தோன்றிய பரம்பொருள் பற்றும் பாசமும் உள்ளவராகக் காட்சியளிக்கின்றார். யோவின் ஆன்மீகப் பயணம் இது மாந்தர் பலரது பயணமுமாகும்.

தனித் தனிச் சமுதாயங்களின் வரலாற்றிலும் இந்த உண்மையைக் காணலாம். யூத மக்களின் கதை இதற்கோர் எடுத்துக் காட்டாகும். தம்மைக் கடவுளின் இனத்தார் என்றும் கடவுளின் கடைக்கண்ணுக்குத் தனி இலக்கான மூத்த பிள்ளை என்றும் கருதியிருந்த அம் மக்கள் வரலாற்றிலே அடைந்துள்ள இன்னல்களுக்கு அளவுண்டோ?

தந்தையின் சித்தம் என்னில் சாவும் பெரிதன்று என்ற அளவுக்குப் பணிவுள்ளவரான மனுமகனின் வாழ்க்கையில் நடந்ததென்ன? கடவுள் மனம் கல்லா என்றுகூடக் கேட்கத் தோன்றும். ஈவிரக்கம் இல்லாமல் எல்லாவற்றையும் அழிப்பவராகத் தோன்றும் அவர் தமது ஆணையை நிறைவேற்றுவதில் இம்மியும் தவறாத, விலகாத மகா விசுவாசம் உடைய தம் அருமை மகனுடைய வாழ்க்கையையும் கொடிய முறையில் முடிக்கின்றார். "என் இறைவா, என் இறைவா, ஏன் என்னைக் கைவிட்டீர்?" என்ற துன்பக் குரல் அவர் விசுவாசத்தால் "தந்தாய், எனது ஆவியை உமது கையில் ஒப்படைக்கின்றேன்" என்ற நம்பிக்கை அமைதியாக மாறுகின்றது. எல்லாம் முடிந்தது என முழுத் தோல்வியாகத் தோன்றியது எல்லாம் நிறைவேறிய இன்ப நிறைவாக மாறுகின்றது.

"சாகும்போது அவர் தீயவர்களோடு இருந்தார்;
ஆயினும் வன்செயல் ஏதும் அவர் செய்தவர் அல்லர்;
அவர் வாயில் பொய்யே வந்ததில்லை.
அவரை வேதனையில் ஆழ்த்தி நொறுக்க
ஆண்டவர் விரும்பினார்.
தம்மையே பாவத்திற்காக அவர் பலியாக்கினால்
பெரியதொரு சந்ததியைக் கண்டு நீடுவாழ்வார்;
ஆண்டவரின் திருவுளம் அவர்கையால் நிறைவேறும்.
தம் ஆன்மா பட்ட வேதனையின் பலனை

அவர் கண்டு நிறைவு கொள்வார்;
நம் ஊழியனாகிய அந்த நீதிமான்
தமது அறிவினால்
பலரை நீதிமான்கள் ஆக்குவார்;
அவர்களுடைய அக்கிரமங்களைத் தாமே சுமந்துகொள்வார்.
. . . . . . . . . . . . . . . . . . . .
பாவிகளுள் ஒருவனாய்க் கருதப்பட்டார்;
ஆயினும் பலருடைய பாவத்தைத் தாமே சுமந்துகொண்டு
பாவிகளுக்காகப் பரிந்து பேசினார்.''

—இசையா 53:9–12.

மற்றவர்களின் பொருட்டுத் தான் துன்புறுதல் என்ற இக் கொள்கை சிலுவைச் செம்மலிடம் வாழ்க்கை மெய்ம்மையாயிற்று. அத்தகைய கொள்கை ஏதும் யோவு அறிவாரா? உரையாடும் யோவின் சொற்களிலே அதனைக் காண்பது அரிது. ஆனால் முடிவுரையில் பார்க்கும் யோவு தம்மைப் புண்படுத்திய நண்பர்களுக்காக வேண்டிக்கொள்ளக் காண்கின்றோம்.

''யோவின் மனஉறுதியைப்பற்றி அறிந்திருக்கிறீர்கள்'' (யாகப். 5:11) என்ற சொல் இங்கு உரையாடலில் வரும் யோவுக்குப் பொருந்துமா என்று தோன்றும். 'நல்லார் பொல்லார் எல்லாரையும் கடவுள் ஒன்றுபோல் அழிக்கின்றார். நல்லார் துன்பப்படுவதைப் பார்த்து அவர் நகைக்கின்றார்' என்பன போன்ற வார்த்தைகள் யோவின் வாயால் வருகின்றன, உரையாடற் பகுதியில். இப்படிப்பட்டவரை எப்படிப் பொறுமைசாலி, மனஉறுதியுடையவர் என்பது? சிக்கலான கேள்வியே. அறிவு நிலையிலே தம் மனத்தில் அறுபடாத சிக்கலைக் குறித்து மருண்டு வாயடைத்து வாளாவிருக்காமல் வாய்மையோடு பேசுகின்றார் யோவு என்பது திண்ணம். இதனைக் கடவுளும் மெச்சுவதை முடிவுரையில் (42:7,8) காண்கின்றோம். ஆனால் அறிவுநிலைக் கேள்வி அட்டகாசம் புரிந்தபோதும் யோவு கடவுளின் நேர்மையில் நம்பிக்கை இழக்கவில்லை (23:5–7). அவரது மகா விசுவாசமும் மனத்தின் இருளினூடே ஒளிவீசக் காண்கின்றோம் (19:23–27). இறுதியில் கடவுளும் தம் அடியானின் அறியாமை மூப்பைக் கடிந்துகொள்கின்றாரே தவிர, அன்பனின் வாய்மையைக் குறைகூறவில்லை. உய்த்துணர முடியாதபோதும் பற்றுறுதி விடாத பாசமுள்ள மனம், சிற்றறிவுக்குள் சிறைப்படாத அன்பு உள்ளம், இதுவே இறைவன் தம் மக்களிடம் வேண்டுவது.

யோவை எவ்வளவு துன்பத்துக்கு இலக்காக்கினாலும் தமது பற்றுறுதி மாற மாட்டார் என்பதுதான் மாற்றானோடு இறைவனுக்கு உண்டான பந்தயம். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால்

இது வீண் விளையாட்டாகத் தோன்றலாம். முக்காலமும் அறியும் இறைவனுக்குத்தான் முடிவு தெரியுமே என்று நாம் மயங்கலாம். ஆனால் அது அன்று உண்மைப் பொருள். கடவுளிடத்தில் மனித னுக்கு உள்ள பற்றுறுதியை மட்டுமன்றி மனிதனிடத்தில் கடவு ளுக்கு இருக்கும் பற்றுறுதியையும் மனிதனது வையத்து வாழ்க்கை யிலே மெய்ப்பித்துக் காட்டும் ஒரு பெரும் நிகழ்ச்சி இது.

யோவின் நண்பர்களுடைய வாதம் தொன்மையான ஒன்று. இசுரவேல் இனம் வரலாற்றில் முளைப்பதற்குப் பல நூற்றாண்டு களுக்கு முன்பே இக்கொள்கை மேற்கு ஆசியாவிலே பழமையும் வழமையுமாக விளங்கிற்று என்பதை ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்துள்ள பண்டைய மெசபொத்தேமிய, எகிப்திய ஞான நூல்கள் தெரிவிக்கின்றன. ''தீதும் நன்றும் பிறர்தர வாரா'' என்னும் கொள்கை மிகப் பழமையானது என்பதற்கு ஐயமில்லை. விவிலியத்தின் பழைய ஏற்பாடும் இதனைப் பலவிடங்களில் வலி யுறுத்திச் செல்கிறது. ஆயின் அதற்கு மாறுபாடாக உள்ள பல நிகழ்ச்சிகளையும் அது மறைக்கவில்லை. ஆபேல், நாபோத்து, உரியா முதலானோரின் சோகக் கதையைக் காண்க. ஒரு பாவமும் அறி யாமல் பிறர் பாவத்துக்குப் பலியானவர்கள் இவர்கள். அவனவன் பழிக்கு அவனவன் பொறுப்பு என்பதைச் செம்மையாக எடுத் துரைத்த இறைவாக்கினர்களில் எரெமியா ஒருவர். ஆயின் தம் காரியத்தில் அது விதிவிலக்காக இருப்பது கண்டு அங்கலாய்க்க நேர்ந்தது அவருக்கு. அக்கொள்கைக்குள் எல்லாம் அடங்கி விட்டதுபோல் பிடித்துக்கொண்டு சாதிக்க வேண்டாம் என்பதை யோவு நூல் தெளிவாக்குகின்றது. ஆயின் பிடிவாதத்துக்கு மருந்து உண்டா? இயேசு பெருமான் காலத்திலும் இசுரவேல் மக்களிடம் அது மடியவில்லை. அவரோ, பகைவனுக்கு இரங்கச் சொன்னார்; நமக்குத் தீமை செய்பவர்களுக்காகவும் இறைவனிடம் மன்றாடச் சொன்னார். நல்லாருக்கும் பொல்லாருக்கும் மழை பொழிவிப்ப வரும் ஒளி கொடுப்பவருமாகிய விண்ணகத் தந்தைக்கு மக்களாக வாழும் வழி ஈது என்றார்.

ஒருவனுக்கு எவ்வளவுதான் துன்பம் வந்தாலும், அவ்வளவுக்கும் அவன் ஒரு பாவமும் செய்யவில்லை என்பது மெய்யேயாயினும், கடவுளுடைய நீதியை மறுப்பதற்கு நியாயம் இல்லை. அவ்வா றின்றி ஐயுற்றுப் புலம்புதல் அறியாமையே. இந்த அறியாமைக்குத் தான் யோவு மனம் வருந்தி இறைவனிடம் மன்னிப்பு வேண்டு கின்றார். கடவுளும் யோவு இன்னின்ன பாவம் புரிந்ததனால் இப் படியெல்லாம் அனுபவித்தார் என்று கூறவில்லை. அப்படியானால், பாவம் செய்யாதவன் இப்படியெல்லாம் பாடுகள் படுவதேன்? முடிவுரையில் இந்தக் கேள்வி பற்றிப் பேச்சு மூச்சு இல்லை. இது ஆழ்ந்த பொருள் பொதிந்த ஒரு மோனமே ஆகும். மெய்யியல்

அறிஞனுக்கும் மறையியல் அறிஞனுக்கும் வேண்டுமானால் இக் கேள்வி இன்னும் அறுபடாததாக இருக்கலாம். பக்தன், கடவுளிடம் உண்மையான பற்றுறுதி வைத்தவன், அதைக் கடந்து மேலே போய்விட்டான்.

வானமும் வையமும் கடவுளின் ஆற்றலையும் அளியையும் காட்டு கின்றன. காற்றும் மழையும் கதிரவனும் விண்மீன்களும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் அருமை. ஆடு மாடு மான் கழுதை குதிரை காக்கை கழுகு முதலிய உயிரினங்களும் விதம் விதமான வியப்புக்குரியவை. மடமையாகத் தோன்றும் தீக் கோழியும் இறைவனது பராமரிப்பையும் ஞானத்தையும் எடுத்துக் காட்டுகின்றது. உலகம் தோன்றுமுன்னே இறைவனால் அடக்கி வைக்கப்பட்டவையாகப் பண்டைய புராணங்களிலே வரும் வெகி மோத்து, லெவியத்தான் என்னும் தீய சக்திகளும்கூடக் கடவுளு டைய அளப்பரிய ஆற்றலையும் இரக்கத்தையும் காட்டுகின்றன. எதையும் கடவுள் மனிதனைக் கேட்டுச் செய்யவில்லை. இறை வனின் இரக்கத்தையும் மாட்சியையும் ஆற்றலையும் யோவு எள்ளள வேனும் உணர்ந்ததும் தம் அறியாமையை எண்ணி வருந்துகின்றார்; மனம் நொந்து மன்னிப்பு வேண்டுகின்றார். அவரது குமுறல் அடங்குகின்றது; கொதிப்பு தணிகின்றது; உள்ளம் அமைதி அடை கின்றது.

''பதிஇ ழந்தனம், பாலனை இழந்தனம், பெற்ற
நிதிஇ ழந்தனம், இனிஎமக் குளதென நினைக்கும்
கதிஇ ழக்கினும் கட்டுரை இழக்கிலேம்'' என்ற

அரிச்சந்திரன் போன்று மனஉறுதி மிக்கவராக விளங்கிய யோவு தமது மனத்தை அரித்த கேள்விக்கு முற்றும் விடை கண்டாரா? குற்றமற்றவர் படும் துன்பத்திற்குப் பொருள் காணும் ஆராய்ச்சி யில் அன்றைய காலக் கட்டத்தில் அதற்குமேல் விடை காண்பது அரிது. யோவின் வினாவுக்குப் புனிதர் சின்னப்பருடைய இரண்டு வாக்கியங்கள் விடையளிக்கும்: ஒன்று, ''இம்மைக் காலத்தில் நாம் படும் துன்பங்கள் நம்மிடம் வெளிப்படப் போகிற மகிமை யோடு ஒப்பிடவும் தகுதியற்றவை'' (உரோ. 8:18); மற்றொன்று, ''திருச்சபையாகிய தம் உடலின் பொருட்டுக் கிறிஸ்து பட வேண்டிய வேதனைகளில் இன்னும் குறைவாய் இருப்பதை என் உடலில் நிறைவாக்குகிறேன்'' (கொலோ. 1:24).

* * *

மொழிபெயர்ப்பாளனின் முட்டுப்பாடுகளைச் சொல்லப் போனால் யோவினுடைய துன்ப துயரங்களைப்போல் வளரும். மூலத் தின் சொற்செட்டு மொழிபெயர்ப்பில் இல்லை என்பார் சிலர். முதல்

நூலின் சொற்கள் சில இந்நூலில் காணேம் என்பார் வேறு சிலர். முதல் பாடம் எபிரேயத்தில் உள்ளது. அதன் ஆங்கில மொழி பெயர்ப்புகளை வைத்துத்தான் தமிழாக்கியுள்ளேன். படிப்பவர்கள் இரு மொழிகளும் தெரிந்தவர்களாக இருந்தால், ஆங்கிலத்தின் சுவை தமிழில் இல்லை எனலாம்; ஆங்கிலத்தில் இல்லாததைத் தமிழில் சேர்த்துவிட்டார் எனலாம். ஆங்கிலத்தில் உள்ள சொல் மரபு தமிழிலும் அப்படியே சில உண்டு; இதைக் கருதாமல், 'இந்த வழக்கு தமிழ் அன்று, ஆங்கிலம்' என்று நினைத்தாலும் நினைக்க லாம். தமிழில் கவிஞர்களாக உள்ளவர்கள் வேறு வகையாகக் குறைப்படக் கூடும். இந்தச் சொல்லை, இந்த அடியை இப்படி மாற்றினுல் எவ்வளவு நன்றுக இருக்கும் என்று அவர்கள் கூறலாம். முதல் நூல் ஆசிரியன் நாணு, அவ்வாறு மாற்ற? மூல நூலின் கருத்தை விட்டுப் புறம்பே போனுல் தப்பான மொழிபெயர்ப்பாகி விடும். சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தால் அது விளங்கா மல் வழங்காமல் போய்விடும். மூலத்தின் சுவை, அழகு குன்ற ஆக்கினுல் குறையுள்ளதாகிவிடும். அங்கு இல்லாத அழகையும் சுவையையும் சேர்த்தாலும் தப்பு. ஆக, மொழிபெயர்ப்பாளன் செல்லும் வழி கல்லும் முள்ளும் கரடும் முரடுமானது. யோவைப் போல் அவனும் ''வைத்தார் எனது வழியில் இருளே'' என்று முறையிட்டால் தவறுமோ?

ஒரு மொழியின் ஒரு சொல்லுக்கு இன்னெரு மொழியின் இன்னெரு சொல் இணை என்று சொல்ல முடியாது. முதல் மொழி யின் சொல்லுக்குப் பல பொருள்களும் பொருட் செறிவுகளும் இருக் கும்; அடிப்படையில் அதனை ஒத்த வழிமொழியின் சொல்லுக்கு அத்தனை பொருட்செறிவுகளும் இல்லாமல் வேறு வகை அழகுகள் இருக்கும். எனவே மூலத்தின் ஒரு சொல்லுக்கு மொழிபெயர்ப்பில் எப்போதும் ஒரே சொல்லைத்தான் கையாளவேண்டும் என்பது தவருகும். சொல்லுக்குச் சொல் இட்டு மொழிபெயர்ப்பதன் இடர்ப்பாடு இதுவே. இதனுல்தான் ஃபிரெஞ்சு—ஆங்கில மொழி பெயர்ப்பாளர் ஒருவர் சொன்னுர்: நாலு சொற்களுக்கு மேற்பட்ட எந்த வாக்கியமும், பொருளும் நயமும் குன்றுமல், முழுமையாக அப்படியே மொழிபெயர்க்கப்பட்டது இதுவரையும் இல்லை, இனியும் இருக்கப் போவதில்லை என்று.

அதனுல் ஒரு நூலின் பொருட் செறிவும் அழகும் ஒரு மொழி பெயர்ப்பில் குறைபட்டால் இன்னெரு மொழிபெயர்ப்பு அதனை ஈடு செய்ய உதவுகின்றது. இக்காலத்தில் ஆங்கிலம், ஃபிரெஞ்சு முதலிய மொழிகளில் திருநூலுக்குப் பல மொழிபெயர்ப்புக் கள் வழங்கிவருவது இச்சிறப்பினை எடுத்துக்காட்டும். வாசகர்களின் கல்வியறிவுக்கும் பக்குவத்திற்கும் ஏற்பவும் வெவ்வேறு மொழி பெயர்ப்புக்கள் தேவைப்படலாம்.

யோவு நூலின் மூலபாடம் எபிரேயத்தில் உள்ளது. அதன் ஆங்கில மொழிபெயர்ப்புகள் பற்பல. பழைய கிரேக்க, இலத்தீன் மொழிபெயர்ப்புகளைத் தழுவி ஆங்கிலத்தில் ஆக்கியவை அன்றியும் நேரே எபிரேய மொழியிலிருந்து பெயர்த்தவையும் பல. கூடிய வரை சொல்லுக்குச் சொல் பிசகாமல் பெயர்க்கும் முறையைப் பின்பற்றியவை முதலாகச் சொற்களைப் பற்றிச் சிறிதும் கவலைப் படாமல் மூலத்தின் கருத்தினை விளக்கமாய் எடுத்துரைக்கும் முறையில் உருவானவை ஈறாக இவை பலவகை.

இவற்றுள் Jerusalem Bible என்பது ஒன்று. இதனைப் படித்த போதுதான் எனக்கு யோவின் சிறப்பு விளங்கிற்று. உரையாடு வோரின் உள்ளக் கிடக்கையை அவர்தம் உரைகளிலே காணமுடிந் தது. கவிதையாக உள்ள இந்நூலைத் தமிழிலும் செய்யுள் நடையில் மொழிபெயர்க்கலானேன். செய்துமுடித்தும் மன நிறைவு இல்லை. அதுபோது, சென்னை ஐக்கிய ஆலய இயக்குநர் அருள்திரு. இக்னேஷியஸ் இருதயம் சே. ச. அடிகளார் Anchor Bible வரிசையில் உள்ள யோவாகமத்தை எடுத்துப் பார்க்கச் சொன்னார்கள். ஒரு புதையலைக் கண்டவனானேன். அதன் மொழிபெயர்ப்பையும்விட அதிலுள்ள விளக்கக் குறிப்புக்கள் பெரிதும் உதவின. இக்குறிப்புக் கள் நெருடான கண்ணிகளின் இடர்ப்பாடுகள் என்னென்ன என்று விளக்குகின்றன; ஆங்காங்கு மூலச் சொல்லையும் அதன் பல்வேறு பொருள்களையும் குறிப்பிடுகின்றன. ஆகவே சொற்சுருக்கமாக மொழிபெயர்ப்பை அமைக்க முடிந்தது. மூலத்தில் ஒவ்வொரு கண்ணியும் பெரும்பாலும் ஈரடிச் செய்யுளாக உள்ளது; தமிழிலும் அவ்வாறே அமைக்க முயன்று பெரிதும் வெற்றி கண்டேன். எபிரேய மொழி மரபுக்கும் தமிழ் மொழி மரபுக்கும் உள்ள சில ஒற்றுமை களையும் கண்டேன். தமிழில் இல், இன் ஆகிய ஐந்தாம் வேற்றுமை உருபுகள் நீங்கல், ஒப்பிடல் ஆகிய பொருள்களில் வருவது போல எபிரேயத்தில் 'மின்' என்ற உருபு அதே இரு பொருளில் வருவது அறிந்தேன். செய்வினை செயப்பாட்டு வினைப் பொருளில் வருவது இன்னொரு ஒற்றுமை. எழுவாய் தொக்கி நிற்க யாப்பது மற்றுமொரு ஒற்றுமை. இவற்றையெல்லாம் பார்க்கும் பொழுது, நேரே எபிரேயத்திலிருந்தே மொழிபெயர்த்தால் எவ் வளவு செம்மையாக அமையும் என்னும் எண்ணம் உண்டாகின்றது. எபிரேய மொழி அறிவும் தமிழ்ப் புலமையும் வாய்க்கப்பெற்ற ஒருவர் அந்தச் சீரிய பணியை மேற்கொள்ள வேண்டும். அந்நாள் எந்நாளோ?

முதல் நூலில் செய்யுள் வடிவிலுள்ள பகுதிகளையெல்லாம் ஆசிரியப் பாவாக அமைத்துள்ளேன். மூலத்தின் செய்யுள் மரபு வழக்கொழிந்ததாக உள்ளதால் அதனைச் சரிவர அறிவது கடினம் என்பர். ஆயினும் சிற்சில அடிகளை AB அப்படியே தந்துள்ளதைக்

காணும்பொழுது நமது கொன்றை வேந்தன், முதுமொழிக் காஞ்சி நினைவுக்கு வருகின்றன. ஈரடிச் செய்யுளில் ஒவ்வோரடியும் ஒவ்வொரு கருத்தோடு முற்றுப்பெறுகின்றது; முதலடியில் சொன்னதை இரண்டாமடியில் வேறு வகையாகச் சொல்லிச் செல்வது எபிரேயச் செய்யுள் வழக்காகப் பெரும்பாலான இடங்களில் காணப்படுகின்றது. எடுத்துக்காட்டாக,

''நீதிமானுக்கு ஒளி எழுகின்றது;
நேரிய உள்ளத்தவர்க்கு மகிழ்ச்சி பிறக்கின்றது.''
(சங்கீதம் 96:11)

''வல்லவனைவிடப் பொறுமைசாலி உத்தமன்;
நகரங்களை முற்றுகை யிட்டவனைவிடத் தன் மனத்தை
ஆள்பவன் உத்தமன்.'' (பழமொழி. 16:32)

தமிழ் மரபுக்கு இது முற்றும் புதியது அன்று:

''கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.'' (திருக்குறள் 393)

''பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.'' (நாலடியார்)

எபிரேயச் செய்யுள்களில் இத்தகைய இணைக் கருத்து ஈரடிகள் வருவது பரவலாக உள்ளது என்றாலும் அதற்குப் புறம்பான யாப்பும் நிரம்ப உண்டு என்பதையும் நினைவில் கொள்வது நன்று. இணைக் கருத்துக்களைத் தொகுப்பதிலும் கவிஞன் எத்தனையோ வகையான உத்திகளைக் கையாளுகின்றான். அவற்றையெல்லாம் நூலினுள் கண்டுகொள்ளலாம்.

நண்பர்களின் உரையாடலில் முன்னுள்ளவரைப் பார்த்துப் பேசும்போது ''நீங்கள்,'' ''என்பீர்கள்'' என்று இவ்வாறு இன்றைய பேச்சு வழக்கின்படி மரியாதைப் பன்மையைக் கையாண்டுள்ளேன். கடவுளை ''நீர்'' என்று முன்னிலையில் குறித்துள்ளேன். யோவு நண்பர்களைப் பார்த்துப் பேசுபவர், திடீரென்று பலவிடங்களில் கடவுளை முன்னிலைப்படுத்திப் பேசத் தொடங்கிவிடுகின்றார். அதை அறிய இந்தப் பாகுபாடு நன்கு உதவும்.

ஒவ்வோர் அதிகாரத்தின் முன்னும் அதன் கருத்தைச் சுருக்கி அடைப்புக் குறிகளுள் தொகுத்து வைத்துள்ளேன். இது நூலின் பொருள் தொடர்ச்சியை நினைவில் கொள்வதற்கும், அடுத்துவரும் கருத்துக்களைப் பொருத்தமாக அறிந்துகொள்வதற்கும் உதவும் என்று நம்புகின்றேன்.

பெரும்பாலும் சொற்களைப் பிரித்தே எழுதியுள்ளேன்; ஆனால் சேர்த்தே படிக்க வேண்டும்—செய்யுளின் ஓசை அப்பொழுதுதான் தெரியும். ''இன்பம் வெய்யோர்க்குத் துன்பம் எளிது; உண்டி வெய்யோர்க்கு உறுபிணி எளிது'' என்னும் முதுமொழிக் காஞ்சியில் முதலடி முடிவும் (எளிது) இரண்டாம் அடி முதலும் (உண்டி) சேர்ந்து இசைப்பதில்லை; இதே போல, அடி மாறும்போது விட்டு இசைக்கும்படியும் சிற்சில இடங்களில் இயற்றியுள்ளேன்.

ஆங்கிலத்தில் verse என்ற சொல் விவிலிய நூல்களில் அதிகாரங்களின் எண் அடையாளமிட்ட உட்பிரிவுகளைச் சுட்டப் பயன்படுகின்றது. அந்த உட்பிரிவுகளைத் தமிழில் இதுவரை வசனங்கள் என்றே குறித்து வருகின்றோம். வசனம் என்பதற்கு மாறாகக் கண்ணி என்ற சொல் சிறப்பாகப் பொருந்தும் என்று கருதுகின்றேன். கிளிக் கண்ணி, பராபரக் கண்ணி முதலியவை பல கண்ணிகள் சேர்த்துத் தொடுத்த பாமாலைகளைக் குறிக்கின்றன. கண்ணி என்பது ஒரு பாமாலையில் ஒரு கருத்துடைய ஒரு சிறு பகுதியைக் குறிக்கின்றது. இவ்வகையில் verse என்பது numbered sub-division of a Bible chapter என்று Oxford Dictionary பொருள் விரிப்பதற்கு ஒத்தவாறு கண்ணி என்பதற்கு இயல்பாகப் பொருள் கொள்வது பொருந்தி வரும்.

மொழிபெயர்ப்பாளனின் மறையியல் நோக்கு அவனது மொழிபெயர்ப்பில் சிறிதும் நுழைந்திராதபடி தடுக்க முடியுமா? முடியாது என்பது எக்காலத்து மொழிபெயர்ப்புகளுக்கும் பொருந்தும் என்பர். நான் இங்கு என் மொழிபெயர்ப்புக்கு அடிப்படையாகக் கொண்டவை Anchor Bible, Revised Standard Version, Jerusalem Bible ஆகியவை. பழைய தமிழ் மொழிபெயர்ப்புகள், புதுச்சேரி மொழிபெயர்ப்பின் திருத்திய பதிப்பு, வேறு ஆங்கில மொழிபெயர்ப்புகள் இவையும் ஒப்புநோக்க உதவின.

எவ்வளவுதான் நுணுகி ஆராய்ந்து பார்த்தாலும் திட்பமாக இதுதான் முதல் நூல் கருத்து என்று கண்டுகொள்ள இயலாத கடினமான கண்ணிகள் இந் நூலில் நிரம்ப உள்ளன என்று அறிஞர்களெல்லாம் ஒப்புக்கொள்கின்றார்கள். இவ்வகையில் யோவு, ஓசே ஆகமங்களை மிஞ்சக் கூடியது விவிலியம் முழுவதிலும் வேறு இல்லை என்பர். தற்கால விவிலிய ஆராய்ச்சியின் பயனாக எவ்வளவோ முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது என்றாலும் பல இடங்களில் மூலச் சொல்லை மாற்றாமல் திருத்தாமல் பொருள் காண்பதும் மொழிபெயர்ப்பதும் அரிது. இத்தகைய இடங்கள் சிலவற்றில் மூலத்தின் சொற்றொடர்களைச் சொல் சொல்லாக அப்படியே கொடுத்திருக்கக் கண்டேன். அச் சொற்களை மாற்றாமலே பொருளை உய்த்துணர இது சிற்சில இடங்களில் வகை செய்தது. ஆங்கிலத்தில் சொல்ல

வகையின்றி இருக்கும் சில மூல பாடங்கள் இங்ஙனம் தமிழில் புதிதாக மொழிபெயர்த்துப் பொருள் உணர்த்தக் கூடியனவாக எனக்குப் பட்டது. அப்படி அமைந்த இடங்களை எனது குறிப்பில் சுட்டிக்காட்டி என் பொருள்கோளுக்கு, மொழிபெயர்ப்புக்கு என்ன காரணம் என்பதையும் விளக்கியுள்ளேன். வல்லவர்கள் தீர்ப்புக் கூறுவார்களாக.

இந் நூலில் வரும் வெகிமோத்து, லெவியத்தான் ஆகியவை பண்டைய செமித்திய மக்களுடைய புராணங்களின் வழி வந்தவை என்பர். அவை புராணப் புனைவுகளே யாயினும் மனிதனின் உள்ளார்ந்த அனுபவங்களில் கண்ட மெய்ம்மைகளைச் சுட்ட வந்தவையே ஆகும். வெகிமோத்தின் முன்னோடிகளை உகாரித், கில்கெமிஷ் புராணங்களில் காணலாம். கில்கெமிஷ் புராணத்தில் வரும் விண்ணக எருதும் வெகிமோத்தும் ஒன்றுக்கொன்று ஒப்பு நோக்கக் கூடியவை. கடவுளை எதிர்த்து எழும் பகைமைச் சக்தியை இப் புராணங்கள் இவ்வாறு உருவகித்துப் போயின என்பது தெளிவு. நமது நாட்டுப் புராணங்களில் வரும் மகிஷம் வெகிமோத்தோடு ஒப்புநோக்கக் கூடியதாகத் தோன்றுகின்றது. இதேபோல் லெவி யத்தானுக்கும் பண்டைய மேற்கு ஆசியப் புராணப் படைப்புக் களான பறவை நாகம், லோத்தன் முதலியவற்றுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பர். லெவியத்தான் பாம்பு, ஏழு தலைகளை உடையது, நாவன்மை படைத்தது, உலகின் அடியில் உள்ளது. இது ஆதிசேஷனை நினைவுப்படுத்துகின்றது.

இவ்வாறு ஒப்பிடுவதன் நோக்கம் மகிஷமும் ஆதிசேஷனும் மேற்கேயிருந்து நமது நாட்டுக்கு வந்தன என்றோ, இங்கேயிருந்து அங்கே போயின என்றோ சொல்வது அன்று. மிக மிகத் தொன்மை யான காலத்திலேயே பல்வேறு இன மக்களுக்கிடையே பொதுவான தோர் ஆன்மீக அனுபவம் இருந்திருக்கின்றது, அது உருவகக் கதை களாக வடிவெடுத்து உலவிக் காலப் போக்கில் பல வேறு நாட்டின ரிடையே பல வேறு வகையாகக் கிளைத்துப் பிரிந்து வளர்ந்திருக் கின்றது என்பதே ஊகம்.

திருநூல் விளையினில் விளையாடுவோம் என்று புனிதர் எரோணி முஸ் அழைத்தார். இது ஒரு விளையாட்டா என்று கடிந்துகொண்ட புனிதர் அகுஸ்தீனர் திக்குமுக்காடி ஏறிப் பார்க்க வேண்டிய மாமலை ஆயிற்றே திருநூல் என்றார். இந்த மொழிபெயர்ப்பு வேலை இருவர் தம் கருத்தையும் மெய்ப்பித்தது எனக்கு.

யோனா கடவுளோடு கோபித்துக்கொண்டுபோய் அமர்ந்திருந்த இடத்தில் வளர்ந்து நிழல் தந்த செடி என்ன செடி? சுரைக் கொடி என்பதாக மொழிபெயர்த்திருந்தனர் ஆதியில் இலத்தீனில். புனிதர் எரோணிமுஸ் தமது மொழிபெயர்ப்பில் இன்னொரு படர்கொடி

வகையைச் சொல்லி வைத்தார். இதைக் கோயிலில் வாசிக்கக் கேட்ட மக்கள், வேதத்தைப் புரட்டும் வேலை இது என்று சினந்து, அம் மொழிபெயர்ப்பை அனுமதித்த ஆயர்மேல் பாய்ந்தார்களாம்! புதிய மொழிபெயர்ப்புக்கு இசைவு தரும் ஆயர்களுக்கு எந்தக் காலத்திலுமே இடைஞ்சல் உண்டு போலும்!

*　　　*　　　*

**Anchor Bible** வரிசையில் யோவு நூலை மொழிபெயர்த்த பேராசிரியர் மார்வின் எச். போப் அவர்கள் தம் முகவுரையிலும் குறிப்புக்களிலும் வழங்கியுள்ள கருத்துக்களும் விளக்கங்களும் இத் தமிழாக்கத்திற்குப் பெரிதும் உதவியாக அமைந்தன. அவற்றை என் விருப்பப்படி பயன்படுத்திக்கொள்வதற்கு இசைந்து தமது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்த பேராசிரியர் அவர்களுக்கு எனது நன்றி.

தமது பணிகள் பலவற்றினிடையே எனது மொழிபெயர்ப்பை ஆய்ந்து பார்க்கும் வேலையையும் மனம் உவந்து ஏற்று ஆங்கில மொழிபெயர்ப்புக்களோடு ஒப்பு நோக்கியும் குறை களைந்து நிறை காண வழிகாட்டியும் மிக்க துணைபுரிந்த கவிஞர் சேசு சபை அடிகளார் அருள்திரு. அ. தனராசு அவர்களுக்குப் பெரிதும் கடப்பாடு உடையேன். நூலுக்கு அழகிய வண்ணப் படம் வரைந்தளித்த அருள்திரு. அ. ஜே. தம்புராஜ் சே. ச. அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி.

நான் சென்று கண்டு வாசிக்கக் கேட்டு மகிழ்ந்து பாராட்டித் தம் அருள் மொழிகளால் ஊக்கம் ஊட்டி அணிந்துரை வழங்கிய சென்னை—மயிலைப் பேராயர் அருட்பெருந்தகை இரா. அருளப்பர் அவர்களுக்கு எனது நன்றி என்றும் உரித்தாகும். இம் மொழிபெயர்ப்பு நூலையும் அவர்களுக்கே எனது அன்புக் காணிக்கை ஆக்கியுள்ளேன்.

இம் முயற்சியில் என்னை ஊக்குவித்த நண்பர்கள் மற்றும் பலர்; அவர்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றி.

இந்நூலை ஐக்கிய ஆலயத்து ஆதரவில் வெளியிட முன்வந்த அதன் இயக்குநர் பெருந்தகை அவர்களைத்தான் மறக்கமுடியுமா?

இந்நூலைச் செம்மையாக அச்சிட்டுத் தர ஆர்வத்தோடு ஒத்துழைத்த டயோசீசன் அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகும். என் விளக்கக் குறிப்புகளில் ஆங்காங்கு எபிரேயச் சொற்களை எடுத்தாள வேண்டியதிருந்தது; அதற்குத் தேவையான தனிக் குறிகளுடன் அமைந்த ரோமன் எழுத்துக்கள் அவர்கள் எவ்வளவோ முயன்றும் முழுமையாகக் கிடைக்காததால் பொதுவான ஆங்கில எழுத்துக்களையே பலவிடங்களில் பயன்படுத்த வேண்டியவனானேன். அறிஞர்கள் பொறுத்தருள வேண்டும்.

**வை. அ. பொன்னையா**

## குறிகளின் விளக்கம்

திி.ப. — வேதாகமம் பழைய ஏற்பாடு திருத்திய பதிப்பு, தமிழ் இலக்கியக் கழக வெளியீடு.

AB — Anchor Bible.

JB — Jerusalem Bible.

RSV — Revised Standard Version.

NEB — New English Bible.

LXX — The Septuagint.

MT — Mesoretic Text.

KJ — The King James Version of 1611.

CCD — The Confraternity of Christian Doctrine Edition.

JPS — Jewish Publication Society of America: The Holy Scriptures, 1917.

## பொருளடக்கம்


| | | | |
|---|---|---|---|
| அணிந்துரை | .. | .. | vi |
| முகவுரை | .. | .. | x |
| குறிகளின் விளக்கம் | .. | .. | xxvii |

சூறுவளி நடுவே (யோவு ஆகமம்)

I முன்னுரை

| | | அதிகாரம் | கண்ணிகள் | பக்கம் |
|---|---|---|---|---|
| 1. மாசு மறுவற்ற நேர்மையாளர் | .. | 1 | 1–22 | 1 |
| 2. கடுஞ்சோதனை | .. | 2 | 1–13 | 5 |

II உரையாடல்

| | | அதிகாரம் | கண்ணிகள் | பக்கம் |
|---|---|---|---|---|
| 3. ஏன் பிறந்தேன்?: யோவு | .. | 3 | 1–26 | 8 |
| 4. வினை விதைத்தவன் வினை அறுப்பான்: ஏலிப்பாசு | .. | 4 | 1–21 | 12 |
| 5. திருவே கடவுள் திருத்துதல்: ஏலிப்பாசு | .. | 5 | 1–27 | 15 |
| 6. தளரும் ஒருவனைத் தள்ளார் நண்பர்: யோவு | .. | 6 | 1–30 | 19 |
| 7. உமக்கு நானோ இலக்கு?: யோவு | .. | 7 | 1–21 | 24 |
| 8. கடவுளே அறநெறி பிறழச் செய்வரா?: வில்தாது | .. | 8 | 1–22 | 27 |
| 9. எப்படிப் பேசுவேன் இந்தக் கதியில்?: யோவு | .. | 9 | 1–35 | 30 |
| 10. சும்மா விடக்கூடாதா?: யோவு | .. | 10 | 1–22 | 35 |
| 11. வழவழ என்பது வாயடைத்திடுமோ?: சோப்பார் | .. | 11 | 1–20 | 39 |
| 12. கடவுள் கையின் காரியம் இது: யோவு | .. | 12 | 1–25 | 42 |
| 13. என்னைப் பகைவனாய் எண்ணுவதேன்?: யோவு | .. | 13 | 1–27 | 46 |
| 14. இறந்த மனிதன் இனி வாழ்வானோ?: யோவு | .. | 13<br>14 | 28<br>1–22 | 50 |
| 15. எங்கே போயிற்று உங்கள் புத்தி?: ஏலிப்பாசு | .. | 15 | 1–35 | 54 |

| | | | |
|---|---|---|---|
| 16. புண்ணுய்ப் படுத்தும் தேற்றர் வாளர்காள்!: யோவு .. | 16 | 1–22 | 59 |
| 17. உடைந்தது என் உள்ளம்: யோவு .. | 17 | 1–16 | 63 |
| 18. வார்த்தைக் கண்ணிகள் வேண்டாம்: வில்தாது .. | 18 | 1–21 | 66 |
| 19. என்னை மீட்பவன் வாழ்கிருன்: யோவு .. | 19 | 1–29 | 70 |
| 20. தொன்றுதொட்டு வரும்இது தெரியுமா?: சோப்பார் .. | 20 | 1–29 | 76 |
| 21. நினைத்தாலே மேலெல்லாம் நடுங்குகின்றது: யோவு .. | 21 | 1–34 | 81 |
| 22. இனந்தெரிகின்றதா, இருண்ட வழிஇது?: ஏலிப்பாசு .. | 22 | 1–30 | 87 |
| 23. இருட்டில் திடுக்கென மறைந்து போகேனு?: யோவு .. | 23 | 1–17 | 92 |
| 24. கடவுளோ எதுவுமே வகை யெனக் கருதார்: யோவு .. | 24 | 1–17; 21 | 95 |
| 25. மனிதன் எம் மாத்திரம்?: வில்தாது .. | 25<br>26 | 1–6<br>5–14 | 99 |
| 26. வாய்மை கைவிடேன்: யோவு .. | 26<br>27 | 1–4<br>1–7 | 102 |
| 27. (கடவுளிடம் தீயவனின் உரிமை: சோப்பார்) .. | 27<br>24 | 8–23<br>18–20; 22–25 | |
| 28. ஞானப் புகழ் மாலை .. | 28 | 1–28 | 108 |
| 29. காண்பேனு இனி அந்த நாள்?: யோவு .. | 29 | 1–25 | 113 |
| 30. இன்று நான் கேலியாய்ப் போனேன்: யோவு .. | 30 | 1–31 | 117 |
| 31. இனி மேலோன் பேசட்டும்: யோவு .. | 31 | 1–40 | 123 |


**III.** எலியூவின் உரை


| | | | |
|---|---|---|---|
| 32. பேசினலன்றி என் நெஞ்சு ஆருது .. | 32 | 1–22 | 129 |
| 33. எவ்வழியேனும் கடவுள் உணர்த்தலாம் .. | 33 | 1–33 | 133 |
| 34. மனிதர் செயல்களைக் கடவுள் அறிவார் .. | 34 | 1–37 | 138 |

| | | | |
|---|---|---|---|
| 35. கள்ளக் கூக்குரல் கடவுள் கேளார் .. | 35 | 1–16 | 144 |
| 36. அல்லலுற்றோரை அல்லலால் காப்பார் .. | 36 | 1–33 | 147 |
| 37. உயரிய நீதியர்; ஒடுக்குவார் அல்லர் .. | 37 | 1–24 | 153 |

**IV. கடவுள் காட்சியும் யோபின் பணிவும்**

| | | | |
|---|---|---|---|
| 38. சில கேள்விகள் .. | 38 | 1–41 | 157 |
| 39. மேலும் சில கேள்விகள் .. | 39 | 1–30 | 163 |
| 40. வெகிமோத்து .. | 40 | 1–24 | 168 |
| 41. லெவியத்தான் .. | 41 | 1–34 | 172 |

**V. முடிவுரை**

| | | | |
|---|---|---|---|
| 42. யோபின் தவமும் வாழ்வும் .. | 42 | 1–17 | 177 |

# சூறுவளி நடுவே

## (யோவு நூல்)

## I முன்னுரை

## 1

## மாசு மறுவற்ற நேர்மையாளர்

**1:** [யோவு பக்திமான்; செல்வமும் செல்வாக்கும் உள்ளவர்; தம் மக்கள் பேரில் கருத்தும் பொறுப்பான கவலையும் உடையவர் (1–5). கடவுள் மன்று கூட்டியிருக்கும் நாளில் வானவர்கள் நடுவே மாற்றானும் வந்து தோன்றுகிறான். யோவினுடைய பக்தியையும் நல்லாண்மையையும் கடவுள் அவனுக்குச் சுத்திக் காட்டுகிறார்: ஆனால் மாற்றான், 'அவ்வளவும் ஆதாயமாகத்தான். யோவு தன் செல்வமும் சீரும் இழந்தால் கடவுளை வாழ்த்துவானா, பழிப்பான்' என்று அறைகூவுகிறான். சரி என்று அறைகூவலை ஏற்றுக் கடவுள் யோவினுடைய உடைமையெல்லாம் அழிய விடுகின்றார் (6–12). அதன்படி மாற்றான் யோவை ஓட்டாண்டி ஆக்கி அவருடைய மக்களையும் அழித்துவிடுகிறான். ஆனால் யோவு கடவுளைப் பழிக்கவில்லை, வாழ்த்தினார் (13–22).]

*1.* ஊசு என்னும் நாட்டில் ஒருவர் இருந்தார்; யோவு என்பது அவர் பெயர். மாசு மறுவற்ற மனிதர், நேர்மையாளர். கடவுளுக்கு அஞ்சித் தீமையை விலக்கி வாழ்ந்தவர். *2.* அவருக்கு ஏழு ஆண்மக்களும் மூன்று பெண்மக்களும் பிறந்தனர். *3.* ஏழாயிரம்

---

*1. யோவு—யோபு என்பது இதுவரை வழங்கிவருவது.* Hebrew form is 'Iyyôb, German Hiob. *இயோவு என்பது எபிரேய வழக்கிற்கு இசைவாக இருக்கும். பகைக்கு இலக்கானவன், மனம் நொந்து வந்தடைந்தவன்/மீண்டவன் என்ற பொருள்களை இச்சொல்லுக்கு ஏற்றுவர். ஆனால் இவ்விளக்கங்கள் சொல் இலக்கணத்தின்படி தோன்றியவை அல்ல. கி. மு. 2000 ஆண்டு வாக்கில் செமித்திய இனத்து மக்களிடையே பெரிதும் வழங்கிவந்த ஒரு பெயர் இது என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.* 'Ayya-'abu(m) *[யாங்கு-என் அப்பா?] என்பதன் குறுக்கமே யோவு என்பர்.*

*ஊசு—ஆராம் மக்கள் நால்வரில் ஒருவர் பெயர் ஊசு; இவரது பெயர் இவரது நாட்டுக்கு வந்தது. இது ஏதோம் நாட்டிற்குத் தெற்கே என்பது பொதுவான கருத்து. ஆபிரகாமின் அரெமேயா சகோதரர் நாக்கோரின் மூத்த மகன் பெயரும் ஊசு. (ஆதி. 10:22,23; 1 நாளா. 1:17; ஆதி. 22:20,21 காண்க.)*

*ஒருவர் இருந்தார்—நூலின் தொடக்கம் கதை சொல்வதுபோல் அமைந்துள்ளது.* "A man there was," AB notes, is different from the regular formula ("There was a man") for historical narrative.

ஆடுகளும் மூவாயிரம் ஒட்டகங்களும் ஐந்நூறு இணை எருதுகளும் ஐந்நூறு பெட்டைக் கழுதைகளும் அவருக்கு இருந்தன; அவருடைய வேலைக்காரர்களும் பலர். ஆக அவர் கீழ்த்திசை மக்கள் எல்லாரி லும் பெரிய மனிதராக விளங்கினார். 4. அவருடைய புதல்வர்கள் ஒருவர் மாற்றி ஒருவராகத் தத்தம் வீடுகளில் விருந்து வைத்துத் தங்கள் மூன்று சகோதரிகளையும் விருந்துக்கு ஆள்விடுத்து அழைப்பது வழக்கம். 5. விருந்து நாள்கள் முடிந்ததும் யோவு அவர்களை ஆள்விடுத்து வரவழைத்துச் சுத்திகரிப்பார்; காலம்பெற எழுந்து அவர்கள் ஒவ்வொருவருக்காகவும் பலி செலுத்துவார்: 'ஒருவேளை என் புதல்வர்கள் பாவம் செய்து தங்கள் உள்ளத்துள் கடவுளைப் பழிச்சியிருக்கக்கூடும்' என்பார் யோவு. ஒவ்வொரு முறையும் அவர் இவ்வாறு செய்து வந்தார்.

6. தேவர்கள் வந்து கடவுள்முன் பணிந்து நிற்கும் நாள் வந்தது; அவர்களோடு மாற்றானும் வந்தான். 7. கடவுள் மாற்றானை நோக்கி ''எங்கேயிருந்து வந்தாய்?'' என்றார். மாற்றான் கடவு ளுக்கு மறுமொழியாக, ''உலகத்தைச் சுற்றித் திரிந்துவிட்டு'' என்றான். 8. கடவுள் மாற்றானை நோக்கி, ''கண்டாயா என் அடியவன் யோவை? மண்ணுலகில் அவன்போல் ஒருவனும் இல்லை; மாசு மறுவற்ற நேர்மையாளன்; கடவுளுக்கு அஞ்சித் தீமையை விலக்கி வாழ்பவன்'' என்றார். 9. ''சும்மாவா யோவு கடவுளுக்கு அஞ்சுகிறான்?'' என்று மாற்றான் கடவுளுக்கு மறுமொழியாகச் சொல்லுவான்: 10. ''அவனையும் அவன் வீட்டாரையும்

---

1. கடவுளுக்கு அஞ்சி—பக்தி உள்ளவராக. கடவுளுக்கு அஞ்சுதல் ஞானத்தின் தொடக்கம்; தீமையை விலக்கத் தக்க அறிவூட்டுவது அதுவே (பழ. 3:7, 14:16, 16:6 காண்க.)

4. விருந்துக்கு (அழைப்பது): மூலம், உண்ணவும் குடிக்கவும்.

5. சுத்திகரிப்பார்—கடவுள் வழிபாட்டுக்கு இடையூறானவற்றை விலக்கும் சடங்கு களைச் செய்வார் (JB).

காலம்பெற—பொழுது விடியுமுன் (எழுந்து) என்பது பொதுவான மொழி பெயர்ப்பு. இங்கு எழுந்து (சுறுசுறுப்பாகி) என்பதுதான் முக்கியம், காலம் முக்கிய மன்று என்று AB குறிக்கிறது.

பழிச்சு = வாழ்த்து; பழித்திருக்கக்கூடும் என்பதை வாயாலும் சொல்லாமல் வாழ்த்தியிருக்கக்கூடும் என்று (இடக்கர் அடக்கலாக) மொழிவது எபிரேயர் மரபு.

6. தேவர்கள்—தெய்வப் புதல்வர்கள், sons of the gods என்பது மூலம். வானவர் கள், சம்மனசுக்கள் என்று யூத, கிறிஸ்தவ மரபில் வழங்கப்படுவோர்.

பணிந்து—தெளிவுக்காகச் சேர்த்தது.

மாற்றான்—எதிரி. சாத்தான் என்று வழங்கப்படுபவன். (சங். 108:6; சக். 3:1,2; 1 நாள். 21:1; ஓசி. 10:18; திருவெளி. 12:9, 20:2; ஆதி. 3:1 காண்க.)

7. சுற்றித் திரிந்து—1 இராயப். 5:8 காண்க.

அவனுக்கு உள்ளவை அத்தனையையும் சுற்றி வேலி வளைத்து அடைத்திருக்கின்றீர் அன்றோ? அவன் எடுத்த காரியங்களை வாழ்த்தியுள்ளீர்; அவனது உடைமை நாடு நிரம்பி வழிகிறது. 11. நீர் கைநீட்டும், அவனது உடைமைமேல் கை வையும்; அவன் உம் முகத்தெதிரே உம்மைப் பழிப்பான்.'' 12. கடவுள் மாற்றானை நோக்கி, ''இதோ, அவன் உடைமைகளெல்லாம் உன் கையில். அவன்மேல் மட்டும் கை வையாதே'' என்றார். மாற்றானும் கடவுள் திருமுன் விட்டு நீங்கினான்.

13. ஒருநாள் யோவின் மக்கள் எல்லாரும் அவருடைய மூத்த மகன் வீட்டில் விருந்து அயர்ந்துகொண்டிருந்தனர். 14. வேலை யாள் ஒருவன் யோவிடம் ஓடி வந்து, ''மாடுகள் உழுதுகொண் டிருந்தன; பக்கத்தில் கழுதைகள் மேய்ந்துகொண்டிருந்தன. 15. அப்போது சபேயர் பாய்ந்து வந்து அவற்றைப் பற்றிக்கொண் டார்கள்; ஊழியர்களை வாள்வாய்ப் படுத்திவிட்டார்கள். நான் ஒருவன்தான் தப்பினேன், உங்களிடம் சொல்ல'' என்றான். 16. என்றவன் சொல்லி வாய்மூடவில்லை, இன்னொருவன் வந்து, ''வானத்திலிருந்து இடி விழுந்து ஆடுகளையும் ஆடு மேய்த்தவர் களையும் பொசுக்கித் தின்றுவிட்டது. நான் ஒருவன்தான் தப்பினேன், உங்களிடம் சொல்ல'' என்றான். 17. என்றவன் சொல்லி வாய்மூடவில்லை, இன்னொருவன் வந்து, ''கல்தேயர்கள் மூன்று முனையாக வந்து தாக்கி, ஒட்டகங்களைப் பற்றிக்கொண் டார்கள். ஊழியர்களை வாள்வாய்ப் படுத்திவிட்டார்கள். நான் ஒருவன்தான் தப்பினேன், உங்களிடம் சொல்ல'' என்றான். 18. என்றவன் சொல்லி வாய்மூடவில்லை, இன்னொருவன் வந்து, ''உங்கள் புதல்வர்களும் உங்கள் புதல்வியர்களும் தங்கள் மூத்த அண்ணன் வீட்டில் விருந்து சாப்பிட்டுக்கொண்டிருந்தார்கள். 19. அப்போது திடீரென்று பாலைவனத்திலிருந்து பெருங்காற்று வந்து வீட்டின் நான்கு மூலைகளிலும் அடிக்கவே வீடு பிள்ளைகள்மேல் விழுந்துவிட்டது; செத்துப்போனார்கள். நான் ஒருவன்தான் தப்பினேன், உங்களிடம் சொல்ல'' என்றான்.

---

13. மக்கள் எல்லாரும்—மூலம், புதல்வர்களும் புதல்வியர்களும்.
விருந்து அயர்ந்து—மூலம், உண்டும் குடித்தும்.

15. வாள்வாய்ப் படுத்தி—வாளால் வெட்டி; வாள்வாய் என்பது மூலத்தில் உள்ள படி. வாளின் வாய் என்றது வெறும் உருவகம் மட்டும் அன்று எனத் தோன்றுகிறது. வாளின் கைப்பிடியைச் சிங்கத்தின் தலை போலவும் அதன் அலகைச் சிங்கத்தின் நாக்குப் போலவும் செய்யும் வழக்கம் உண்டு என்கிறது AB.

16. இடி—மூலம், கடவுளுடைய நெருப்பு.

17. கல்தேயரும், சபேயரும் (15) நாடோடிகளைக் குறிக்க வந்த பெயர்ச்சொற்கள்.

*20.* யோவு எழுந்தார், தமது மேலாடையைக் கிழித்தார், தலையை மழித்தார்; தரையில் விழுந்து வணங்கியவராய்ச்
*21.* சொன்னார்:

"என் தாய் வயிற்றிலிருந்துநான்
வந்தபோது ஒன்றும் கொண்டு வரவில்லை,
திரும்பிப் போம்போதும்
ஒன்றும் கொண்டுபோகப் போவதில்லை.
கடவுள் கொடுத்தார்,
கடவுள் எடுத்துக் கொண்டார்.
கடவுள் திருப்பெயர் போற்றி."

*22.* இவ்வளவு துன்பத்திலும் யோவு ஒரு பாவமும் செய்யவில்லை, கடவுளுக்கு வசை சொல்லவும் இல்லை.

---

20. மேலாடையைக் கிழித்தலும் தலையை மொட்டையடித்தலும் துக்கத்தின் அறிகுறி.

தரையில் விழுந்து வணங்கி—நெடுஞ்சாண் கிடையாக விழுந்து முகம் தரையைத் தொட வணங்கும் முறையை அக்கால மக்கள் மன்னரின் முன்னும் சில வேளைகளில் சமமானவர் முன்னும் செய்தனர் (AB).

21. மூலம்—"என்தாய் வயிற்றிலிருந்து நிர்வாணமாய் வந்தேன், நிர்வாணமாய்த் திரும்பிப் போவேன்."

"வெறுங்கையாய்/ வெறுமையாய் வந்தேன், வெறுங்கையாய்/ வெறுமையாய்த் திரும்பிப் போவேன்" என்று மொழிபெயர்க்கலாமா?

திரும்பிப் போவது அன்னை வயிற்றுக்கு அன்று; நிலமகள் என்னும் தாயின் வயிற்றுக்கு (சீராக் ஆகமம் 40:1 காண்க).

இன்றும் பெடுவின் இனத்தாரில் ஒருவன் இறந்தால் அவனுக்கு அடுத்த உறவினன் "அவன் ஆண்டவர் அவனைக் கொடுத்தார், அவன் ஆண்டவர் அவனை எடுத்துக்கொண்டார்" என்று சொல்லும் வழக்கம் இருக்கிறதாம்.

22. வசை—AB விளக்கத்தின்படி, மூலச்சொல் tiplāh என்பது kābōd (=புகழ், நிறை, இசை) என்ற எபிரேயச் சொல்லுக்குக் கிட்டத்தட்ட எதிர்ச் சொல்லாகும். "கடவுளை இகழவும் இல்லை" என்றாலும் ஒன்றே. காண்க 24:12 குறிப்பு. Kābōd என்பதை நிறை (பூரணம்) என்று கொண்டால் tiplāh என்பதைக் குறை என்று கொள்ளலாம். அப்பொழுது "கடவுளைக் குறைசொல்லவும் இல்லை" என்றாகும். ஆயினும் வசை என்பதே இங்கு அழுத்தமுடையதாக அமைகின்றது (வசை × இசை).

# 2

# கடுஞ் சோதனை

**2:** [யோவை இன்னும் உண்மையாகச் சோதித்துப் பார்க்கவில்லையே, அவர் ஆளுக்கு ஒன்றும் தீங்கு இல்லையே என்று மாற்றான் கடவுளிடம் தூண்டுகின்றான். 'சரி, ஆனால் யோவினுடைய உயிரை மட்டும் எடுக்காதே' என்று கடவுள் விடைகொடுக்கின்றார் (1–6). மாற்றான் யோவுக்குப் பொல்லாத புண்கள் வரச்செய்து வாட்டுகின்றான். யோவு தம் உடம்பைச் சொறிய ஓட்டுச் சல்லியை எடுத்துக்கொண்டு போய் எருக்குழிச் சாம்பல்மேல் அமர்கின்றார். அவர் மனைவியும் அலுத்துப்போய் அவரைப் பார்த்துக் கடவுளைப் பழித்துவிட்டுச் சாகச் சொல்கின்றாள். அவரோ அவளைக் கண்டிக்கின்றார் (7–10). ஏலிப்பாசு, வில்தாது, சோப்பார் என்னும் நண்பர்கள் மூவர் யோவைக் கண்டு ஆறுதல் சொல்ல வருகின்றார்கள். வந்தவர்கள் அவரது நிலைமை கண்டு அதிர்ந்துபோய் அப்படியே ஏழுநாளளவும் ஒன்றும் பேசாமல் அவரோடு அமர்ந்திருக்கின்றனர் (11–13).]

*1. தேவர்கள் வந்து கடவுள் திருமுன் பணிந்து நிற்கும் நாள் வந்தது; அவர்களோடு மாற்றானும் வந்து கடவுள் திருமுன் பணிந்து நின்றான். 2. கடவுள் மாற்றானை நோக்கி, ''எங்கேயிருந்து*

---

*1. கடவுள்—இந்த அதிகாரத்திலும் முந்திய அதிகாரத்திலும் 38ஆம் அதிகாரத்திலிருந்து முடிவுரை வரைக்கும் கடவுளுக்கு யாவே என்ற பெயரே வழங்கப்பட்டுள்ளது. இசுரவேல் மக்கள் அடிமைகளாக நாடு கடத்திச் செல்லப்பட்ட காலங்களுக்குப் பிறகு, தங்கள் கடவுளின் திருப்பெயர் மிக மிகத் தூயது ஆகையால் அதை மனிதர் நாவால் உச்சரித்தல் கூடாது என்ற கொள்கை பூண்டனர்; அதற்குப் பதில் ''என் ஆண்டவர்'' என்று பொருள்படும் 'அடொனய்' என்ற சொல்லை வழங்கி வந்தனர். அப்பாலுக்கு அப்பாலாய், காண்பவை காணாதவை யாவற்றையும் கடந்த முழுமுதற்பொருள் தூய தூய தூய பரம்பொருள் என்பதைக் குறிக்க இவ்வாறு விரதம் பூண்டு ஒழுகினர். ஆகவே கடவுளின் சொல்லற்கு அரிய திருநாமம் ''ய்ஹ்வ்ஹ்'' என்று மெய்யெழுத்துக்களோடு மட்டும் இருந்தது: இதனை உச்சரிக்க முடியாது. பின்னர் அவர்கள் தங்கள் மறைநூல்களில் மெய்யெழுத்துக்களோடு அவற்றுக்கு உரிய உயிரெழுத்துக்களையும் சேர்த்து எழுதிய காலத்தில் இறைவன் திருநாமத்தின் மெய்யெழுத்துக்களோடு அடொனய் என்பதிலுள்ள உயிரெழுத்துக்களை இணைத்தனர்: ய்அஹ்ஒவ்ஆஹ் (=யஹொவா'). இணைத்தாராயினும் அதை உச்சரிக்கக்கூடாது, அடொனய் என்றே சொல்லவேண்டும் என்பது எல்லா யூதருக்கும் தெரியும். ஆகவே யஹோவா என்று சொல்வது அறியாமையாகும். ஹல்லேலூ-யா (=இறைவனே, போற்றி) என்பதில் யா என்ற சொல் கடவுளைக் குறிக்கிறது. யாஹூ, யெஹோ, யோ என்பனவும் அவ்வாறே. சமாரியர்கள் கடவுளை இயாவே என்று குறிப்பிட்டனர். அலக்சாந்திரியா நகரின் கிளமெந்து கிரேக்கத்தில் எடுத்து எழுதும்போது Iaove என்று எழுதினர். யாவே என்பதுதான் ஆதி உச்சரிப்பாக இருந்திருக்கவேண்டும் என்று கி. பி. 16ஆம் நூற்றாண்டில் மெர்சருஸ் என்பார் கூறினார் (AB).*

வந்தாய்?'' என்றார். மாற்றான் கடவுளுக்கு மறுமொழியாக, ''உலகத்தைச் சுற்றித் திரிந்துவிட்டு'' என்றான். 3. கடவுள் மாற்றானை நோக்கி, ''கண்டாயா என் அடியவன் யோபை? மண்ணுலகில் அவன்போல் ஒருவனும் இல்லை, மாசு மறுவற்ற நேர்மையாளன், கடவுளுக்கு அஞ்சித் தீமையை விலக்கி வாழ்பவன். காரணமின்றி அவனை விழுங்கிவிடும்படி அவனுக்கு எதிராய் நீ என்னைத் தூண்டிவிட்ட போதிலும், அவன் தன் வாய்மையை இன்னும் உறுதியாகப் பற்றி நிற்கின்றான், பார்'' என்றார். 4. மாற்றான் கடவுளுக்கு மறுமொழியாகச் சொல்லுவான்: ''தோலுக்குத் தோல். ஒருவன் தன் உயிருக்காகத் தன் உடைமையெல்லாம் கொடுப்பான். 5. நீர் கை நீட்டும், அவன் மேல் கை வையும், அவன் எலும்பையும் சதையையும் தொடும். அவன் உம் முகத்தெதிரே உம்மைப் பழிப்பான்.'' 6. கடவுள் மாற்றானை நோக்கி, ''இதோ, அவன் உன் கையில். அவன் உயிரை மட்டும் விட்டுவிடு'' என்றார்.

7. மாற்றான் கடவுள் திருமுன் விட்டு நீங்கி யோபை உச்சி முதல் உள்ளங்கால் வரை பொல்லாத புண்களால் வாட்டினான். 8. யோபு தம் உடம்பைச் சொறிவதற்கு ஓட்டுச் சல்லி ஒன்றை எடுத்துக்கொண்டு போய் எருக்குழியில் உட்கார்ந்தார். 9. அவர் மனைவி அவரிடம், ''இன்னுமா உங்களுக்கு வாய்மை? கடவுளைப்

---

3. விழுங்கிவிடும்படி—மூலத்தில் உள்ள சொல்; ''அழித்துவிடும்படி'' என்றும் பெயர்க்கலாம். எனினும், ஆளை விழுங்கிவிடுவான் என்னும் தமிழ் வழக்கை நோக்குக.

4. தோலுக்குத் தோல்—பண்டமாற்று வழக்கத்திலிருந்து தோன்றிய பழமொழியாக இருக்கலாம். அது அதற்கு உரிய விலையைக் கொடுத்தாலன்றி விரும்பியது கிட்டாது என்பது கருத்து. இதுவரை யோபு தமக்குப் புறம்பே இருந்த உடைமைகளைத்தான் இழந்திருக்கிறார், ஆளையே ஓர் உலுக்கு உலுக்கி வாட்டி வதைத்தால் அசைந்திடுவார் என்பது மாற்றானுடைய திட்டம். தோலுக்குள் தோல் என AB மொழிபெயர்க்கிறது; உடம்பைக் காக்கத் தோல் பல அடுக்குகளாக, அரண்களாக, அமைந்துள்ளது என்பது காரணம்.

8. ஓட்டுச் சல்லி—சொறியல் எடுக்கும்போது சொறிவதற்கா, துக்கத்தின் அடையாளமாக உடம்பைப் புண்ணுக்கவா என்று AB வினவுகிறது; பின்னதே நோக்கமாக இருக்கலாம் என்று லேவி. 19:28, 21:5; உபா. 14:1; எரே. 16:6, 41:5, 47:5, 48:37 மேற்கோள்களைச் சுட்டுகின்றது.

''ஓட்டுச் சல்லிகளின் இடம்/மேடு'' என்பது அக்காடிய மொழியில் இறந்தோரிடத்தைக் குறிப்பதாகத் தெரிகிறது என்பதும் AB.

எருக்குழி—எருக்குழித் திரடு ஊருக்கு வெளியே இருக்கும். சாம்பலைக் கொட்டும் இடம். 'சாம்பலில்' என்பதே AB. கிரேக்க மொழிபெயர்ப்பில் ''dunghill outside the city.''

பழிச்சிவிட்டுச் செத்துத் தொலைவதுதானே'' என்றாள். 10. யோவு அவளிடம், ''அறிவில்லாத பெண்களைப் போல் பேசுகிறாயே. கடவுளிடமிருந்து நல்லதைப் பெறும் நாம் அல்லதைப் பெறக் கூடாதோ?'' என்றார். இவ்வளவெல்லாம் நேர்ந்தும், யோவு தம் நாவால் ஒரு பாவமும் செய்யவில்லை.

11. யோவுக்கு நேர்ந்த கொடுமைகள் எல்லாவற்றையும் பற்றி அவருடைய நண்பர்கள் மூவர் கேள்விப் பட்டதும், அவர்கள்—தேமா ஊரார் ஏலிப்பாசு, சுவா ஊரார் வில்தாது, நாமா ஊரார் சோப்பார்—மூவரும் தத்தம் ஊரிலிருந்து கிளம்பி ஒன்று சேர்ந்து சென்று அவரைக் கண்டு துக்கம் கேட்டு அவருக்கு ஆறுதல் சொல்ல வேண்டுமென்று தங்களுக்குள் ஏற்பாடு செய்துகொண்டு புறப்பட்டு வந்தார்கள். 12. அவரை அவர்கள் தொலைவிலிருந்து பார்த்த பொழுது, அடையாளமே தெரியவில்லை. அவர்கள் கதறி அழுது தங்கள் மேலாடைகளைக் கிழித்துக் கொண்டார்கள்; வானத்தை அண்ணாந்து பார்த்துப் புழுதியை வாரித் தலைமேல் தூவிக்கொண்டார்கள். 13. அவர்கள் அவரோடு தரையில் அமர்ந்து இரவும் பகலுமாக ஏழு நாள்கள் அப்படியே இருந்தார்கள்; ஒருவரும் அவரிடம் ஒரு வார்த்தை பேசவில்லை. அவரைப் பார்க்க அவ்வளவு வருத்தமாக இருந்தது.

---

10. அல்லதை = நல்லது அல்லாததை, தீமையை.

11. தேமா (=தென்னாடு), சுவா/சுகு, நாமா இம்மூன்று ஊர்களும் இடுமேயர்; அரேபியர் இடங்களில் உள்ளவை. ஏதோமும் கீழ்த்திசையும் ஞானியர் தேசம் என இசுரவேலர் மதித்தனர் (காண்க 1 அரச. 10:1–3; எரே. 49:7; அப்தி. 8; பாரூ. 3:22,23).

ஏலிப்பாசு என்ற பெயரின் சொற்பொருள் ''கடவுள் செம்பொன்'' (செம்பொனிறை). வில்தாது = அதாதின் பிள்ளை. சோப்பார் = இளம் பறவை (?); பார்ப்பு.

துக்கம் கேட்டு—மூலம், ''தலையை அலைத்து.'' 42:11இல் இதே வினைச்சொல் ஆறுதல் சொல்வதற்கு இணையான பொருளில் வழங்கப்பட்டுள்ளது (AB).

12. மேலாடை, உயர்குடி மக்களுக்கு அடையாளம். ஆடைகளைக் கிழித்துக் கொள்வதும் தலைமேல் தூசியைத் தூவிக் கொள்வதும் பெருந் துக்கத்துக்கு அறிகுறி.

வானத்தை அண்ணாந்து பார்த்து—இது கிரேக்கத்தில் இல்லை. ''அதிர்ச்சி அடைந்து'' என்ற சொல் எழுத்துப் பிழை காரணமாக இவ்வாறு மாறியிருக்கலாம் (AB).

13. இறந்தோர்க்கு ஏழு நாள்கள் துக்கம் கொண்டாடுவது வழக்கம்.

## II உரையாடல்

# 3

# ஏன் பிறந்தேன்? : யோவு

**3:** [யோவு வாய் திறந்து, தாம் பிறந்தது ஏன் என்று கதறுகின்ருர். தாம் பிறந்த நாளையும் அன்னை வயிற்றில் தோன்றிய இரவையும் பழிக்கின்ருர் (1–10). உயிரோடு பிறவாமலிருந்தால் நலமாயிருக்குமே என்று புலம்பு கின்ருர் (11–19). உளம் கசந்தவனுக்கு உயிர் எதற்கு என்று மறுகு கின்ருர் (20–26).]

*3:1.* *கடைசியில் யோவு வாய் திறந்து, தாம் பிறந்த நாளைப் பழிக்கலாஞர்.*

*2.* *யோவு வாய்விட்டு உரைத்ததாவது:*

*3.* *''இறந்ததாய் ஒழிகநான் பிறந்த நாளே,*
*கருவில்ஓர் ஆண்எனக் கழறிய இரவே.*
*4.* *இருண்டுபோய்த் தொலேக அந்நாள்; அதனை*
*மறந்துபோய் விடுக வான்உறை கடவுள்;*
*விடிந்ததாய் வேண்டாம் வெளிச்சமும் அதன்மேல்.*

---

*1.* *கடைசியில்—அதன்பின்* (RSV, AB); *ஏழு நாள் மௌனமாக இருந்த பிறகு.*

*துக்கம் கேட்க வந்தவர்கள் முதலில் வாய் திறப்பது முறை அன்று; துக்கம் அடைந்தவரே முதலில் பேச வேண்டும் என்பது அன்றைய வழக்கம் (*AB *காண்க).*

*வாய்திறந்து—சொல்லப்போகிறதைக் கூர்ந்து கேட்க வேண்டும் என்ற குறிப்பில் எபிரேயப் புலவர்கள் கையாளும் சொற்ருெடர்.*

*தாம் பிறந்த நாளை—மூலம், தமது நாளை. நாள் என்பதற்கு விதி என்ற பொருளும் உண்டு. (காண்க 30:25இல் விதியற்ருேர்,* hard of day.) *எனினும் பின்வரும் 3ஆம் கண்ணியினுல் இங்கு குறிக்கப்படுவது பிறந்தநாள் என்பது தெளிவு. இறைவாக்கினர் எரெமியாவைப் போல யோவு இங்கு தாம் பிறந்த நாளைப் பழிக் கின்ருர் (எரெ. 20:14–18 காண்க).*

*3.* *கழறிய—பேசிய, சொல்லிய. (கவிதையில் அஃறிணைப் பொருள் பேசுவதற்குத் தடை இல்லை). இரண்டாவது அடியின் கிரேக்கம்* (LXX): *''பையன் காண் எனப் பகர்ந்த இரவே.''*

*4.* *மறந்துபோய் விடுக—*RSV, *''தேடவேண்டாம்;'' பிள்ளை அப்பாவைத் தேடு கிறது என்ற வழக்கும் காண்க.*

5. காரிருளும் பேயிருட்டும் கவர்ந்து கொள்க,
கவிந்து கார்முகில் கப்புக, அந்நாள்
இருண்டிடும் பகல்என அரண்டு போக.
6. அந்த இரவது கும்மிருட் டாக;
ஆண்டுநாட் கணக்கில் அதுவிடு படுக;
திங்கட் கணக்கிலும் சேராது ஒழிக.
7. பாழாய்ப் போக அவ்விரா; அதன்அயல்
நாடாது ஒழிக களிப்புஆர்ப் பரிப்பு.
8. பழிக்க அதனை கடலைப் பழிப்போர்,
பறவை நாகம் எழுப்பிடப் பயின்றோர்.
9. அதன்—வைகறை வெள்ளிகள் மையிருட் டாக;
விடியும் விடியுமென்று வீணே இருக்க,
விடியல்கண் விழிப்பதைக் காணவே வேண்டாம்.
10. எனக்குஅது வயிற்றின் கதவடைத் திலதே,
இடுக்கண்என் கண்ணுக்கு ஒளித்திடு மாறே.

11. ஏன்யான் செத்துப் பிறந்தே னில்லை,
பிறந்ததும் செத்துத் தொலைந்தே னில்லை.

---

5. இருண்டிடும் பகல் என—(அந்நாளைக்) கிரகணம் பிடிக்க என்பதுதான் வழக்க மான மொழிபெயர்ப்பு. ஆனால் மூலத்திலுள்ள சொற்றொடர்க்கு நேர்ச் சொல்லாக்கம் like bitternesses of the day. Bitternesses of the day என்பது கிரகணம் என்று பொருள்பட்டுள்ளது (ஆமோஸ் 8:10 காண்க). AB omits "like" and translates "Eclipse terrify it." AB also notes that the original phrase here is synonymous with 'dark day' in 15:23,(24). Hence the present translation இருண்டிடும் பகல்; and the added advantage is that the sense of "like" (என) is not omitted.

7. அதனயல் நாடாது—JB. அதனில் கேட்காது—AB, RSV.

8. கடலை—AB. பறவை நாகம்—லெவியத்தான்; கடலில் வாழ்வதாகக் கருதப் பட்ட ஒரு புராணக் கற்பனை. பழைய செமித்திய மக்களின் புராணங்கள் இங்கு குறிப்பு என்பர் ஆராய்ச்சியாளர். கொந்தளிப்பான கடலினை வென்றபோது கடவு ளுக்கு மந்திர சக்தி வாய்ந்த ஆயுதங்கள் உதவின என்பது உகாரித் புராணம் (AB Notes). "பகலைப் பழிப்போர்" என்பது மூலம். கால நிலைமையைக் கடுமை யாகச் சபித்தால், அது தன் வேலையைக் காட்டக் கிளம்பலாம் என்ற மூட நம்பிக்கை இருந்தது (JB Notes). மாற்று: "பழிக்க அதனை பகலைப் பழிப்போர், பறவை நாகம் எழுப்பிடப் பயின்றோர்." சூரியனை நாகம் (ராகு, கேது?) மறைத்தலால் கிரகணம் (இருண்டிடும் பகல்) ஏற்படும் என்ற நம்பிக்கையும் இருந்தது. அது இங்கு குறிக்கப் படுவதாயின், பகலை இருண்டிடும்படி சாபம் போடுவோர் எனக் கொள்க.

9. விடியல் கண் விழிப்பதை—AB குறிப்பைப் பயன்படுத்திய மொழிபெயர்ப்பு; "eyelids of the morning" (RSV).

16\. காய்விழுந்து அழிந்த கருவாய் மறைந்திலேன்,
நாள்விழித்து அறியாக் குழவியாய் ஒழிந்திலேன்?
12\. இருந்ததேன் முழங்கால் என்னை ஏந்த,
அருந்தநான் பாலினை அன்னை மார்பு?
13\. இல்லா திருந்தால் இதற்குள் அமைதியாய்ச்
சும்மா கிடந்து துயின்றிருப் பேனே,
14\. தமக்கெனப் பெரிய பாழிடம் புதுக்கும்
அமைச்சர் களோடும் அரசர் களோடும்,
15\. வெள்ளி வெள்ளியாய் வீடு நிரப்பும்
பொன்மிகப் படைத்த கோமக் களோடும்.
17\. ஆங்கே கயவரின் ஆட்டம் இல்லை,
களைப்புற் றோர்களும் இளைப்பா றுவரே.
18\. சிறைப்பட் டோர்எலாம் அமைவுற் றோர்அவண்,
காவ லாளியின் அதட்டல் கேளார்.
19\. உயர்ந்தோர் தாழ்ந்தோர் ஒன்றுபோல் ஆங்குளர்,
அடிமைதன் ஆண்டான் பிடியிலும் இல்லை.

20\. உறுதுயர் உழல்வார்க்கு ஒளிகொடுப் பான்ஏன்?
உளம்கசந் தவர்களுக்கு உயிர்கொடுப் பான்ஏன்?—
21\. சாக ஏங்குவர், சாவோ வராது;
புதையலே போலத் தேடுவர் அதனை;

---

16\. இக்கண்ணியை 11ஐ அடுத்து AB போல இங்கு வைத்தது பொருத்தம் கருதி.
நாள்விழித்து அறியா—மூலம், 'வெளிச்சத்தைப் பாராத.'

12\. அன்னை—மொழிபெயர்ப்பில் சேர்த்த சொல்.

14\. பாழிடம்—பாழடைந்த நகர்களை மீண்டும் சீர்படக் கட்டுவது பண்டைய மன்னர்களின் சிறப்பு; காண்க இசை. 58:12; 61:4.

இரண்டாவது அடியில் 'அரசர்' முன்னுகவும் 'அமைச்சர்' பின்னுகவும் அமைந்துள்ளது மூலம்.

15\. அடிகளை முன்பின்னுக மாற்றியிருப்பது மொழிபெயர்ப்புக்காக.

17\. ஆங்கே—இறந்தோர் செல்லும் கீழுலகம், பாதலம், sheol.

ஆட்டம்—வேகம், பரபரப்பு, "strife, rather agitation" (AB). 26ஆம் கண்ணியில் 'கலக்கம்' என்று குறித்திருப்பதும் இதே சொல்லே. 14:1 கண்ணியும் காண்க. இங்கு 'ஆட்டம்' (எ.டு.: அவன் ஆடிய ஆட்டம் என்ன?) பொருத்தமாக உள்ளது.

20\. உளம்—மூலம், soul.

கொடுப்பானேன்—எழுவாய், "கடவுள்," மூலத்திலும் தொக்கி நிற்கிறது.

21\. அதனை—சாவை,

22. இடுகாடு அடைய இறும்பூது எய்துவர்,
கல்லறை காணின் களித்துஆர்ப் பரிப்பர்.—
23. மருங்கெலாம் நின்று கடவுள் மறிக்கத்
தன்வழி இருண்ட ஒருவன் தனக்கு?
24. உணவாய் வருவதுஎன் பெருமூச்சு எனக்குப்
புனலாய் வார்ப்பதுஎன் புலம்பல் முனக்கம்.
25. நான்அஞ் சியதே நடந்து விட்டது;
நடுங்கினேன் அதுவே பிடித்துக் கொண்டது.
26. ஒய்வு அமைதி ஒன்றுஎனக்கு இல்லை,
சாய்தல் இல்லை, ஓயாது கலக்கம்.''

---

22. இடுகாடு—JB மொழிபெயர்ப்பை ஒட்டியது. மூலம் சிதைந்துள்ளதாகக் கருதுவர். கல்லறையின் உட்பக்கம் என்பது AB-யின் கருத்து; இடுகுழி (?)

23. மருங்கெலாம் . . . தனக்கு—''ஒளியும் உயிரும் கொடுப்பானேன்?'' என்பது தொக்கி நிற்கிறது.

அடிகளை முன்பின்னாக அமைத்தது மொழிபெயர்ப்பின் பொருட்டு.

24. உணவாக—மூலம், (to the face of) ''உணவு முகத்தான்''(?) [AB].

25. RSV: ''நடந்து விடுவது நான்அஞ் சுவதே,
எதுநடுங் குவனோ அதுநேர்ந் திடுமே.''

JB: ''நான்—அஞ்சுவ தெல்லாம் உண்மையா கின்றது.
நடுங்குவ தெல்லாம் நடக்கின் றதுவே.''

26. ஓயாது கலக்கம்—அதனால் ஓய்வு, அமைதி இல்லை, சாயவும் முடியவில்லை. Agitation comes (and keeps on coming) என்று மூலத்தின் நேர்ச் சொல்லாக்கம் செய்த AB இங்கு வழிகாட்டி.

# 4

# வினை விதைத்தவன் வினை அறுப்பான்: ஏலிப்பாசு

**4:** [ஏலிப்பாசு விடை சொல்லத் துணிகின்றார். அவர் தயக்கத்தோடு பேசத் தொடங்கி, யோவுக்குப் பொறுமை இல்லை என்கின்றார் (1–6). வினை விதைத்தவன் வினை அறுக்கவே செய்வான் என்கின்றார் (7–11). தாம் கனவில் கண்ட காட்சியை எடுத்துரைத்து, கடவுள்முன் வானவர்களும் தூயவர்கள் அல்லரே, மனிதன் எப்படித் தூயவனாக முடியும் என்று இடித்துரைக்கின்றார் (12–21).]

*4:1.* *அதன்பின் தேமாஊர் ஏலிப்பாசு பேசினார்:*

*2.* *''ஒன்றுநான் சொன்னால் உங்களுக்கு அலுக்குமோ?*
*இன்றுசொல் லாமல் இருக்கவும் வல்லவர்ஆர்?*

*3.* *நீங்கள்—பலருக்கு அறிவுரை பகர்ந்துள் ளவர்கள்,*
*விழுந்த கைகளை எழும்பவைத் தவர்கள்.*

*4.* *தளர்ந்தோர்க்கு ஊக்கம் தந்தன உங்கள்சொல்,*
*தள்ளாடு கால்களுக்கு உறுதியும் ஆயின.*

*5.* *இன்று—உங்களுக்கு உற்றதும் உலைகின் றீர்கள்,*
*தனக்கு வந்ததும் மலைத்துவிட் டீர்கள்.*

*6.* *பக்தியே அன்றோ உங்கள் உறுதி?*
*சால்பே அன்றோ உங்கள்நம் பிக்கை?*

---

*2. அலுக்குமோ—மூலத்தை ஒட்டியது* (would you be weary)*;* AB, "bear it"*;* RSV, "endure."

*3. அறிவுரை—கண்டித்தல், திருத்தல், கட்டுப்படுத்தல், எச்சரித்தல் இவை யாவும் அடங்கியது மூலச் சொல்* (AB).

*பலருக்கு—உங்களைவிட மூத்தவர்களுக்கு என்றும் மொழிபெயர்க்கலாம்* (AB). *எனவே, ''மூத்தோர்க் கறிவுரை மொழிந்துள்ளவர்கள்.''*

*எழும்பவைத்தவர்கள்—மூலம், ''பலப்படுத்தியவர்கள்.''*

*6. பக்தி—மூலம், ''அச்சம் (கடவுள் பயம்).''*

JB: *''உங்கள் பக்தியும் உறுதியும் எங்கே?*
*களங்கமிலா வாழ்வின் நம்பிக்கை எங்கே?*

*உங்களுக்கு இப்போது உறுதியும், நம்பிக்கையும் இல்லை ஆதலால் உங்களிடம் உண்மையாகவே பக்தியும் சால்பும் இருக்க முடியாது என்ற ஏலிப்பாசின் வாதத்திற்கு அச்சாரமாக வரும் வார்த்தை இது.*

7. நினைத்துப் பாருங்கள்,
குற்றம் அற்றவன் கெட்டதுஎப் போது?
நல்லவர் நசித்ததும் எங்கே உண்டு?
8. தீமை உழுது தொல்லை விதைப்போர்
அதுவே அறுப்பர், இதுநான் அறிவேன்.
9. அவர்களை ஊதிப் பறத்தி விடுவார்,
கடவுள் சீற்றம் துடைத்தழித் திடுமே.
10. சிங்கம் முழங்கலாம், கிழடும் உறுமலாம்,
சிங்கக் குட்டியின் பற்களோ உடைபடும்.
11. இறந்துபோம் சிங்கம் இரைஅகப் படாமல்,
சிதறிப் போகும் சிங்கக் குட்டிகள்.

12. மறைபொருள் உணரநான் கேட்டதுஒன்று உண்டு,
காதினில் மெல்லவந்து ஓதிய சொல்லது.
13. கொடுங்கனுக் கலக்கம், மெய்ம்மறந்து அயர்நிலை,
ஆழ்ந்த உறக்கம், அந்த வேளை,
14. நடுக்கமும் திகிலும் என்னை ஆட்கொள
எனக்குக் கைகால் எல்லாம் பதறின.
15. முகத்தின் மேலே மூச்சுஒன்று உரசச்
சிலிர்த்தது மெய்யெலாம் மயிர்க்கூச் செறிந்து.

---

7. கெட்டது—நொடித்தது, அழிந்தது.
நல்லவர்—AB, RSV, "நேர்மையோர்."

8. வினை விதைத்தவன் வினை அறுப்பான் என்பது போல.

9. வெறும் சொல்லுக்குக் கட்டுப்பட்டு மொழிபெயர்ப்பதானல், "கடவுள் 'பூ'வென ஊதிடப் பறப்பர், அவர்தம் சீற்றத்து அழிந்து மறைவர்" என அமைக்கலாம்.

10, 11 பழமொழிகள் போலும்.

10. கிழடு—RSV, "fierce lion."

11. சிங்கக் குட்டிகள்—RSV, "பெண் சிங்கத்தின் குட்டிகள்."

12. JB மொழிபெயர்ப்பை ஒட்டியது.

14. AB மொழிபெயர்ப்பு.
JB: "அச்சம் என்னை ஆட்கொளத் திகிலுற்று
எலும்பும் என்னுள் நடுங்க நடுங்கினேன்."
RSV, "என்னுடை எலும்புகளெல்லாம் நடுங்கின."

15. உரச—glided (RSV), passed on (AB).
மூச்சு—காற்று, ஆவி என்றும் மொழிபெயர்க்கலாம். காற்றின் அசைவு கடவுளை முன்னிலைப்படுத்தி உணர்த்தும் என்பர் (AB).

16. ஆடாது நின்றது, தோற்றம் தெளிவிலே,
உருவம் மட்டும் இருந்ததுஎன் கண்முன்;
அமைதி; அதன்பின் கேட்டது ஒருகுரல்:
17. 'மானிடன் நேர்மையா கடவுள் திருமுன்?
ஊனவன் தூயனு உண்டாக் கினூர்க்கு?
18. அடியவர் தம்மையும் அவர்நம் பாரே,
அஞ்சல ரிடத்தும் பிழைகாண் பாரே.
19. எனின்,மண் வீட்டில் இருப்போர் எப்படி,
தூசியில் கால்கொண்டு தோன்றியோர், அந்துப்
பூச்சிக்கு முந்திப் பொடிபடும் இயல்பினர்?
20. விடிந்துஅடை யாமுன் தகர்ந்து விடுவர்,
அழிந்தே போவர் ஆரோ என்று.
21. கூடா ரத்துக் கயிறுகால் பரிய
மாண்டு மடிவர், ஞானமும் கூடார்.'

---

16. ஆவிக்கு (spirit, ruah) உருவம் கற்பிப்பது பழைய ஏற்பாட்டில் இந்த ஓர் இடத்தில்தான் (AB).

JB: "ஆரோ ஒருவர் ஆங்கு நின்றூர்,
அவர்முகம் எனக்குத் தெரிய வில்லே,
உருவம் மட்டும் . . ."

17. மானிடன், ஊனவன் = மனிதன்; முதலடியில் 'mortal', இரண்டாமடியில் 'man' என்பன AB, RSV.

18. அடியவர், அஞ்சலர்—வானதூதர்கள்.

பிழை—error, AB notes, is related to Ethiopian "wander" (=திரிதல், வழி விலகல்). எனவே, "அஞ்சலர் தம்மையும் அலேயக் காண்பார்"(?)

19. மண் வீடு—உடம்பு.

முந்தி—மூலத்தை ஒட்டிய சொல்; (பூச்சியைவிட) விரைவில், எளிதில்.

20. தகர்ந்து—RSV, அழிந்து.

அழிந்தே—ஏகாரம் தேற்றம்; AB குறிப்பின்படி மூலத்திலும் தேற்ற உருபு உளது.

ஆரோ என்று—பேர் விளங்காமல்.

21. கயிறு—AB விளக்கத்தைப் பின்பற்றியது; பிறர் 'முளே' என்று பெயர்ப்பர்.

ஏலிப்பாசு நயமாகப் பேசும் நன்நெஞ்சினர்தாம் எனினும் தமது கருத்தில் அழுத்தம் வாய்ந்தவர் என்பது இந்த முதற்பேச்சின் துவக்கத்திலேயே நன்கு துலங்குகிறது. நயம்பட உரைக்கினும் துணிவு விடாதவர்.

# 5

# திருவே கடவுள் திருத்துதல்: ஏலிப்பாசு

**5:** [ஆகவே தேவர்கள் யாரும் உதவமாட்டார்கள் (1). மூடன் அழிவு திடீரென வரும் (2–5). துன்பம் மனிதனின் கூடப் பிறந்தது (6,7). ஆகையால் கடவுளே கதி என அவர்பால் திரும்ப வேண்டும்; அவர் தீயோரை அழித்து நல்லவர்களைத் திருத்திக் காப்பவர்; யோவு மீண்டும் நல்வாழ்வு காணலாம் (8–27) என்கின்றார் ஏலிப்பாசு.]

*5:1.* ''ஆக முறையிடின் ஆர்வந்து கேட்பார்?
தூயோர் எவரைத் துணைவேண்டு வீர்கள்?
*2* எரிச்சல் படுவது அறிவிலிக்கு இறுதி;
கோபம் பேதையைக் கொல்லும் கருவி.
*3* மூர்க்கன் வேர்க்கொளப் பார்த்திருக் கின்றேன்;
பார்த்ததும் அவன்மனை வீழ்ந்தது பழிப்பு.
*4* நடுத்தெரு நின்றார் அவனுடை மக்கள்,
எடுப்பவர் இன்றி இடிந்தனர் மன்றில்.
*5* அவன்நில விளைவை அவாவினோர் தின்பர்;
முள்மேல் போட்டுவிட்டு எடுப்பவ ஞனன்;
தன்பொருட்கு ஏங்குவார் கண்டு பொறுமுவான்.

---

*1.* தூயோர்—வானவர்கள்.

*2.* கோபம்—Passion (AB); jealousy (RSV).

*3.* பழிப்பு—கிரேக்கத்தை (LXX) ஒட்டி AB கொண்ட கருத்துக்கும், ''நான் சாபமிட்டேன், பழித்தேன்'' என்ற MT, RSV கருத்துக்கும் பொருந்த அமைத்தது.

*4.* மன்றில்—மூலம், வாயிலில். ஊர் வாயிலில் மன்றம்கூடி வழக்குகளைப் பேசித் தீர்ப்பது வழக்கம். செல்வாக்குள்ளவரின் ஆதரவு இல்லாமல் அங்கு நியாயம் கிட்டுவது அரிது. எடுப்பவர்=ஆதரித்து நிற்பவர்.

*5.* இதன் இரண்டாவது, மூன்றாவது அடிகள் மொழிபெயர்ப்புக்கு முட்டுக்கட்டை யாக இருக்கின்றன: "And unto from thorns he takes it"; "And he pants [snares] thirsty ones their wealth" (AB).

ஆத்திரத்தில் துணியை முள்மேல் (முட்செடி/முள்வேலி) போட்டுவிட்டு அறிவு வந்தபின் அதனை மெல்ல எடுப்பவனை நினைவூட்டும் வாக்கியம் எனக் கொண்டு இங்கு மொழிபெயர்த்துள்ளேன். அடுத்த அடியில் their என்பதை, RSV போல, தெளிவு கருதித் ''தன்(னுடைய)'' என்று பெயர்த்துள்ளேன்.

6. மெய்யே, நிலத்தின் முளைப்பது துயரம்;
மண்ணில் தோன்றும் தொல்லை தானே.
7. தொல்லைக் காகவே தோன்றினன் மனிதன்;
வில்லியின் மக்களே விண்ணெனப் பறப்பர்.
8. நானு யிருந்தால் கடவுளை நாடுவேன்,
என்வழக்கு அவர்கை ஒப்படைத் திருப்பேன்.
9. உணர்ந்திட வொண்ணு அரும்பெருஞ் செயல்கள்
கணக்கில் அடங்காப் புதுமைகள் புரிபவர்,
10. மண்ணகந் தனக்கு மழையினைக் கொடுப்பவர்,
வயல்முகந் தனக்குப் புனல்வர விடுப்பவர்.
11. தாழ்ந்தவன் தன்னை வான்புகழ்க்கு ஏற்றுவார்,
ஆதர விலானை அரண்புக உயர்த்துவார்.
12. தந்திர சாலிகள் திட்டம் தகர்ப்பார்,
அன்னர் கைகள் செயல்அறி யாவே.

---

6. ஆதி. 3:17–19 காண்க. மூலத்தில் ''அன்றோ?'' என்ற பொருளில் எதிர்மறை வினைச்சொல் உள்ளது என்பர்.

7. வில்லி—வடமேற்கு செமித்தியர்களின் ஒரு தெய்வம் ரிஷெப்; அது அழிவின் தெய்வம், பாதாளலோகத்தின் தெய்வம்; இப்பெயர்ச்சொல் பன்மை விகுதி ஏற்றுத் தீக்கொழுந்துகளையும், மின்னலையும் (சங். 77:48), காதலையும் குறிப்பதுண்டு. சங். 75:3இல் ''வில்லினுடைய தீக்கொழுந்துகள்'' அம்புகளைக் குறிக்கின்றன. ரிஷெப் உற்பத்திச் செழிப்புக்கும், நல்வாழ்வுக்கும் உரிய தெய்வமாகவும் குறிப்பிடப் படுகிறது; நமது நாட்டுக் காமனுக்கு ஒப்பானவன் போலும்; உகாரித் உரை ஒன்றில் ரிஷெப் ''அம்புகளுக்கு இறைவன்'' (Lord of the arrows) என்று வழங்கப் படுகிறன். ஆகவே ரிஷெப் என்று இங்கு வந்துள்ள மூலச் சொல்லுக்கு 'வில்லி' என்பது பொருத்தமாகப் பட்டது. பாதாள வில்லி, நலம் பொழியும் வில்லி, இவ னுடைய மக்களே ஆங்கு பாதாளத்தில் அமையாமல் விண்நோக்கிப் பறக்கின்றனர் என்றால், மண்ணகத்து மனிதனுக்கு இம்மண்ணிலே இன்பம் இல்லை, துன்பமே என்பது பெறப்படும். ஏலிப்பாசின் வாதத்துக்கு இவ்விளக்கம் ஒத்ததாகத் தெரிகிறது. AB: ''Resheph's sons . . .'' RSV: ''நெருப்புப் பொறிகள் உயரப் பறப்பபோல்.''

8. அவர் கை—கடவுள் கையில். மூலத்தில் ''கடவுள்'' இரண்டாவது அடியிலும் திரும்ப வருகிறது. யாப்பு கருதி இங்கு அவர் எனப் பெயர்த்துள்ளேன்.

9. அரும்—பொருத்தமும் தெளிவும் கருதிச் சேர்த்தது. காண்க 9:10.

10. வயல்முகம்—AB, "face of the field."

11. அரண் புக=பாதுகாப்பு அடைய.
ஆதரவிலானை—AB; ''அழுவானை'' (RSV).

12. செயல்—Original word (tûshîyyāh) generally means "sound wisdom" and "effective action." The word is used in the Ugaritic myth of 'Anat; the general connotation of the word is apparently "success, victory" without regard to moral quality (AB). AB uses "gain" in its trs. But all the above three connotations appear in செயல் அறி; அவன் நல்ல செயலாக (=வலிமை யுடையவனுக) இருக்கிறன் என்ற வழக்கு காண்க. அறிதலில் மேற்படி effectiveness, wisdom ஆகியவை அடங்கும்.

13. கெட்டிக் காரர்தம் சூழ்ச்சியில் சிக்குவர்;
புரட்டனின் குயுக்தி தலைகீ ழாகும்.
14. பட்டப் பகலில் இருட்டினை முட்டுவர்,
தட்டழி வார்கள் இரவுபோல் நண்பகல்.
15. வலியார் கையின் வாயின் வாளின்
நலியாது ஏழையைக் காப்பார் இங்ஙன்.
16. ஆக,—தாழ்ந்தவர் தமக்கு நம்பிக்கை உண்டு;
தீமை தனது வாயடைக் கும்மே.
17. திருவே கடவுள் திருத்துதல் ஒருவற்கு;
வெறுக்க வேண்டாம் மேலோன் கண்டிப்பு.
18. காயப் படுத்துவார் கட்டும் கட்டுவார்;
அடிக்கும் அவர்கை ஆற்றவும் செய்யும்.
19. ஆறு முறைஅவர் அல்லலிற் காப்பார்,
ஏழு முறையும் இன்னல்வந் தணுகா.
20. பஞ்சகா லத்தில் துஞ்சமாட் டீர்கள்;
வெஞ்சமர் நாளில்வாள் வெட்டுவீ ழாது.

---

13. சிக்குவர்—மூலம், ''கடவுள் சிக்க வைப்பார்.'' காண்க 1 கொரிந். 3:19.

புரட்டன் . . . தலை கீழாகும்—"And the counsel of the twisted one is carried headlong" என்ற எபிரேய மூலத்துக்கு இசைந்தது.

15. மூலத்தில் முதலடி: "He saves from the(ir) sword from their mouth" (AB). இது சிதைவு என்று கொள்கின்றனர். அவ்வாறு கொள்ளாது உள்ளபடி மொழிபெயர்க்க முயன்றுள்ளேன். ''வாயிலிருந்து வெளிவரும் வாளாகிய தீய ஆணைகளினின்று'' எனக் கொள்க.

AB: ''வாள்வாய்ப் படாது வறியாரைக் காப்பார்,
எளியாரை வலியார் பிடியினின் றிங்ஙன்.''

RSV: ''. . . வலியார் கையினின்று . . .''

நலியாது—சேர்த்த சொல்.

இங்ஙன்—எங்ஙனம் என்பது 12–14இல் கூறப்பட்டது.

17. மேலோன்—மூலம், ஷடாய்; கடவுள் திருப்பெயர்களுள் ஒன்று. இச்சொல்லின் பிறப்பு யாது என ஆராய்ச்சியாளர்கள் அறுதியிடவில்லை. ''எல்லாம் வல்லவர்'' என்று மொழிபெயர்ப்பது வழக்கம். ஆனால் அச்சொல் ''மலைமேல் அவன்'' என்று பொருள் படலாம் என்பது பலருடைய கருத்து. ஆகவே, மேலோன், உயர்வற உயர்ந்தவன், பரமன், ஐயன், தலைவன், இணையிலி, வரம்பிலான், தனக்குவமை இல்லான் முதலிய பல சொற்களால் மொழிபெயர்த்துள்ளதை இத்தமிழாக்கத்தில் நெடுகிலும் காணலாம்.

18. அடிக்கும் கையே அணைக்கும் கையுமாம் என்பது போல.

19. ஆறு . . . ஏழு—இங்ஙனம் எண்களை அடுக்குவது எபிரேய மரபு. இங்கு ''முடிவின்றி'' என்பது பொருளாகக் கொள்ளலாம்.

20. வெம்—மொழிபெயர்ப்பில் சேர்த்தது.

21. நாவின் சொடுக்கடி நண்ணுது உங்களை,
அலகையே வரினும் அஞ்சமாட் டீர்கள்.
22. கொள்ளையா, பஞ்சமா, எள்ளி நகைக்கலாம்;
காட்டு விலங்குஎனக் கலங்கவும் வராது.
23. விளைநிலக் கற்கள் கொளும்உடன் படிக்கை;
கடிய விலங்குகள் நட்புடன் சூழும்.
24. உங்கள்கூ டார உறுதிகாண் பீர்கள்,
மந்தையும் குறையா வந்து பார்க்கையில்.
25. கான்முளை பலர்பலர் காணு வீர்கள்,
பிள்ளைகள் நிலத்துப் புல்லெனத் தழைப்பர்.
26. பழுத்த வயதில் கல்லறை சேரலாம்
பருவம் முற்றிய பயிரின் கதிர்போல்.
27. ஈதுயாம் ஆய்ந்துமெய் யாகக் கண்டது;
காது கொடுங்கள், கண்டுகொள் வீர்களே.''

---

21. மூலம்: நாவின் சொடுக்கடிக்கு உங்களை மறைப்பார் (AB), (RSV).
அலகை—AB; அழிவு, RSV; கொள்ளையர், JB.

23. கற்கள்—பாலத்தீனத்தில் கற்களை அகற்றிய பிறகே விளைவிக்க முடியும் (JB); விளைநிலத் தெய்வங்கள், AB.

நட்புடன் சூழும்—at peace with you (RSV), will make peace with you (AB).

22,23. கொள்ளை, பஞ்சம், கொடிய விலங்கினங்கள், விளைநிலத்தின் கற்கள் இவை பற்றிய கவலை யோவுக்கு ஏற்படாது என்கிறார் ஏலிப்பாசு.

26. பழுத்த வயதில்—ripe old age (RSV); AB, "in full vigour" (தெம்பு அழியாமல்).

# 6

# தளரும் ஒருவனைத் தள்ளார் நண்பர்: யோவு

6: [யோவு, தமக்கு வந்திருக்கும் கடுந் துன்பமே தம்மைப் புலம்பி அழச் செய்கிறது என்று கூறி (1–5), எலிப்பாசினுடைய வாதங்கள் சுவை யற்றவை, சத்தற்றவை என்கின்றார் (6,7). மீண்டும், தமக்குச் சாவே விடுதலையாகும் என்கின்றார் (8–13). தம்முடைய நண்பர்களுக்குத் தம்மீது பாசமோ பற்றோ இல்லை என்கிறார் (14–23). தம்மைக் குற்றவாளி என்று மெய்ப்பித்துக் காட்டும்படி கேட்கிறார் (24). நண்பரின் வாதம் பொக்கு என்று மீண்டும் சுட்டித் தாம் பேசுவது வாய்மை என்று வலியுறுத்துகிறார் (25–30).]

6:1. *அதற்கு யோவு உரைத்த மறுமொழி:*

2. *''நான்படும் துயரினை நிறுப்பார் யாரே?*
*என்இடுக் கண்எலாம் எடுப்பார் யாரே?*
3. *கடற்கரை மணலினும் கனக்கும் அவையே;*
*கடுத்துநான் பேசக் காரணம் இதுவே.*
4. *அழுந்தின மேலோன் அம்புகள் என்மேல்,*
*ஆவியுட் புகுந்தது அவற்றுள நஞ்சு;*
*கடவுளின் திகில்கள் மடக்குவ என்னை.*
5. *கழுதை புல்லைக் கண்டும் கனைக்குமா?*
*காளை தீனியைக் கண்டும் கத்துமா?*

---

2. *நிறுப்பார், எடுப்பார் யாரே—நிறுக்க மாட்டார்களா, எடுக்க (=எடை போட) மாட்டார்களா?* (AB, RSV).

3. *கடற்கரை—தி.ப.; மூலம், கடலின்.*

4. *அழுந்தின—மூலம், ''(மேலோன் அம்புகள்) என்னோடு.''*
*உட்புகுந்தது—(என் ஆவி அவற்றின் நஞ்சினை) உறிஞ்சும்* (AB, RSV).
*கடவுளின் திகில்கள்—கடவுளால் வரும் திகில்கள்.*

5. JB: *''மெல்லிய புல்லைத் தன்முன் கண்டும்*
*கனைக்குமா காட்டுக் கழுதை?*
*எட்டும் படிக்குத் தீனி இருக்கக்*
*கத்துமா காளை தானும்?''*

6. சப்பென்ற உணவை உப்பிலாது உண்ணவா?
பாலேட்டு எச்சிலில் தனிச்சுவை உண்டா?
7. அத்தகை யனஎன் ஆன்மா தொடாது,
அவைஎன் ஊனின் பிணியே அனைய.

8. ஆ,என் வேண்டுதல் அருளமாட் டாரா?
நாஅன் விழைவதை நல்கமாட் டாரா?
9. கடவுள் என்னை நசுக்கி யருள வேண்டும்;
ஓங்கிய கைநிலாது என்னைத் தறித்திட வேண்டும்.
10. அதுவே எனக்குஓர் ஆறுதல் ஆகும்;
கொல்லும் வலியிலும் துள்ளிக் குதிப்பேன்,
மறுத்திலேன் தூயோன் வாய்மொழி ஆதலால்.
11. பொறுத்துக் கொண்டுகாத் திருக்க வலுவிலேன்;
இன்னும் வாழ்ந்துதான் என்ன முடிவு?
12. என்வலு என்ன கல்லின் வலுவா?
என்உடம்பு என்ன வெண்கலப் பொருளா?
13. உற்ற துணைஒன்று உண்டா என்னிடம்?
செயல்எலாம் என்னைவிட்டு ஓடிப் போனதே.

---

6. பாலேட்டு எச்சில்—முட்டை வெள்ளை என்று மொழிபெயர்ப்பது வழக்கம். ஆனால் அது சரியான மொழிபெயர்ப்பா என்பது சந்தேகமே என்கிறது AB. Literally "spittle (of)" whatever be the substance, which, for want of a special term, AB renders as "cream cheese." அது பால் போன்றது, பாதி நீரானது, சற்றும் சுவையில்லாதது (AB).

7. AB: ''அவை என் ஊன்போல் அழுகி நாறுவ.'' ஆனால் மூலம் "They are like the sickness of my meat."

ஆன்மா—பசி என்பதற்கு மாற்றாக வந்தது (உபா. 14:26; இசை. 29:8; மிக். 7:1; பழ. 23:2 காண்க). [AB].

JBயின்படி, 7: ''வயிற்றைக் குமட்டும் உணவு வகைகளே
பிணியுற் றிருக்கஎன் பத்திய மாயின.''

ஆனால் யோபு இங்கு இவ் வுணவு வகைகளைக் குறிப்பிடுவது ஏலிப்பாசின் வாதத்தில் உப்புச் சப்பில்லை, அதனைத் தாம் ஏற்க முடியாது என்பதற்காகும் (AB).

9. ஓங்கிய கைநிலாது—சற்று விரிவு எனினும் தெளிவு கருதி அமைத்தது; AB, "loosen his hand."

தறித்திட—மூலத்திலும் நெசவாளர் வழக்கிலுள்ள ஒரு சொல்லே உள்ளது (AB).

11. வலுவிலேன்—மூலம், ''எனக்கு வலு ஏது?''

12. உடம்பு—மூலம், ஊன்.
வெண்கலப் பொருளா—மூலம், ''வெண்கலமா.''

13. செயல்—5:12 விளக்கம் காண்க.

14. பரமனுக்கு அஞ்சும் பண்பிலான் ஆயினும்
தளரும் ஒருவனைத் தள்ளார் நண்பர்கள்.
15. என்றன் நண்பர்கள் வஞ்சித்து விட்டனர்
கரைபுரண்டு ஓடும் காட்டாறு என்ன.
16. ஓடும் கலங்கி உறைபனி கரையக்
கருங்கம் மென்று கரைபுரண்டு ஒழுகும்.
17. ஓட வேண்டிய நாளிலோ உலரும்,
கோடை வந்ததும் மாயமாய் மறையும்.
18. வணிகர் கூட்டம் வழியை மாற்றும்,
அலைந்து பாலையில் தொலைந்து மாயும்.
19. தேமாச் சாத்துகள் விழிக்கும்;
சாபாக் காவல் ஒழுக்குகள் சாம்பும்;
20. நம்பி யிருந்தன மோசம் போகும்,
வந்து பார்க்கவும் குழம்பித் திகைக்கும்.

---

14. JB (கிட்டத்தட்ட RSV போல): ''தளரும் நண்பனுக்கு இரங்க மனமிலான் பரமனுக்கு அஞ்சும் பண்பிழந் தவனும்.''

இங்கு AB மொழிபெயர்ப்பைப் பின்பற்றியுள்ளேன்; அடிகளை மட்டும் முன்பின்னாக மாற்றியுள்ளேன், தெளிவுக்காக.

முதலடி மூலம்: ''தளர்வோனுக்கு அவன் நண்பனிடம் (வேண்டுவது) பற்று/பரிவு'' (AB).

யோவு இங்கு சொல்வது என்னவெனில், ஏலிப்பாசு குத்திக் காட்டியதுபோலத் தாம் கடவுள் பக்தி அற்றுவிட்டாலுங்கூட நண்பர்கள் தம்மிடமுள்ள பற்றினை விட்டு விடக்கூடாது என்பதாகும்.

15. JB,RSV: ''என் உடன் பிறப்புகள், காட்டாறு என்னப்
பருவ வெள்ளம் என்ன மாறிவிட்டனர்.''
AB: ''என்றன் நண்பர்கள் என்னைவஞ் சித்தனர். காட்டாறு என்ன,
காட்டாற்றுப் படுகைபோல் கரைபுரண் டோடுவர்.''

16. கருங்கம்—இங்கும் 38:2, 42:3 ஆகிய இடங்களிலும் 'இருட்டு' எனப் பொருள் படும் ஒரு சொல் பயின்று வருவதாக AB குறிப்பிடுகிறது.

17. ABயை ஒட்டியது. கோடை—'வெம்மை' என்றே AB, RSVயில் காணப் படுகிறது.

19. சாம்பும்=உணர்வு அழியும்.

16–20. JB: ''உறைபனி ஊட்டும் மணிநீர் அவற்றில்
உருகும் பனியால் பெருகும் வெள்ளம்.
வெயில்நாள் வந்ததும் வற்றிப் போகும்,
வேனில் வெம்மையில் மறைந்தே போகும்.
பாலையில்—வணிகர் கூட்டம் வழியின் நீங்கி
அவற்றைத் தேடி அலைந்து தொலையும்.
தேமா ஊரின் வணிகச் சாத்தும்
சாபா ஊரின் காவல் ஒழுக்கும்
திட்டம் இடுவன அவற்றை நம்பி.
நம்பிய ததுவோ கடைசியில்
வீண்போம், அவற்றை அடைந்தும் பயனிலை.''

21. அதுபோ லத்தான் நீங்களும் இன்று;
கண்டதும் கோரம், கலங்கிவிட் டீர்கள்.
22. உங்கள் செல்வம் என்னநான் கேட்டேன்?—
'கையூட்டுக் கொடுத்தெனைக் காப்பாற் றுங்கள்,'
23. 'எதிரியின் பிடியினின்று எனைவிடு வியுங்கள்,'
'கொள்ளையர் கையினின்று எனைமீட் டிடுங்கள்,'—
ஏதுநான் சொன்னேன், எனக்குஒன்று இரந்தேன்?
24. புகட்டுக அறிவு, பொத்திக் கொள்வேன்;
எங்குநான் என்ன தவறுஎனக் காட்டுக.

25. உள்ளதைச் சொன்னால் நொள்ளாப்பு; ஆயினும்,
உங்கள் வாதம் என்னஎண் பித்தது?
26. சொல்லால் என்னைச் சுடநினைப் பீர்களே,
புலம்புவேன் என்சொல் 'பூ'வென் பீர்களோ?

---

22,23. நண்பர்களிடம் யோவு எதிர்பார்த்தது நட்பே அன்றிப் பணம் அன்று.

ஈவிரக்கம் இல்லாத கல்தேயர்கள் யோவினுடைய உடைமைகளையெல்லாம் கைப்பற்றிக்கொண்டார்கள் (1:17).

23ஆம் கண்ணி மூலத்தில் ஈரடிகளே; இங்குள்ள மூன்றாவது அடி, 22இன் முதலடியே, தெளிவுக்காகத் திரும்பவும் சேர்க்கப்பட்டது.

24. பொத்தி—பொத்துதல்=வாய் மூடுதல்.

நண்பர்கள் நல்ல புத்திமதி சொன்னால் ஏற்றுக்கொள்ளலாம்; ஆனால் இவ்வளவு மலைபோன்ற துன்பம் வரத் தாம் செய்த பெரும் பிழை என்ன என்று காட்ட முடியுமா என்று யோவு கேட்கிறார்.

25. உள்ளதை . . . நொள்ளாப்பு—'உண்மைப் பேச்சால் உள்ளம் குளிரும்' என்பது AB; இதற்கு அது nimras (grievous, sore) என்ற மூலச் சொல்லை nimlesu (pleasant, smooth) என மாற்றியுள்ளது. மாற்றாமலே பொருள் அமைவது கண்டு மொழிபெயர்த்துள்ளேன். RSV: "How forceful are honest words!"

JB: "எரிச்சலின்றி ஏற்றுக்கொள்ளலாம் ஞாயம் பேசின்; ஆயின் நீங்கள் கண்டனம் செய்வது எதனை வைத்து?"

நண்பருடைய வாதம் பொக்கு என்னும் உண்மையைச் சொல்ல வந்த யோவு அதற்குப் பீடிகையாக "உள்ளதைச் சொன்னால் நொள்ளாப்பு" என்கிறார்.

26. சுட—கண்டிக்க. JB: "புகல்முட் டிப்போய்ப் புலம்பும் சொற்கள், காற்று வாக்கிலே பறக்கும் வெற்றுரை இவையும் கண்டனம் செய்யத் தகுதி என்று எண்ணுகின்றீர்களோ நீங்கள்?"

'பூ'—'பூ', இவ்வளவுதானா? மூலம், "காற்று." நண்பர்கள் தங்கள் சொல்லால் யோவைக் கண்டிக்கிறார்கள்; ஆனால் அனுபவத்தால் வரும் அவரது சொல்லை வெற்றுரை என்கிறார்கள்.

27. அனுதைக்குச் சீட்டுக் குலுக்கிடு வீர்கள்,
நண்பனைப் பேரம் பேசிடு வீர்கள்!
28. என்னை நேரே நோக்கு வீர்களா?
திண்ணமாய் உங்கள் முகத்தெதிர் பொய்சொலேன்.
29. இங்குபா ருங்கள், விடுங்கள் அநீதியை;
இங்குபா ருங்கள், நீதிஎன் வழக்கு.
30. தீமையா எனது நாவில் இருப்பது?
சொற்பொருள் என்வாய் சுவைத்துஉண ராதா?

---

27. கடன் கொடுத்தவன் கடன்பட்டானின் பிள்ளையை அடிமையாகக் கொள்ளும் வழக்கம் இங்கு குறிப்பிடப்படுகிறது; கடன் கொடுத்தவர்கள் ஒருவர்க்குமேல் இருந்தால் அந்த அனுதை யாருக்கு என்று சீட்டுக் குலுக்கிப் போடுவார்களாம். அத்தகைய ஈவிரக்கமற்ற நண்பர்கள் என்பது குறிப்பு. நண்பனையே விலைபேசி விடுவோர் என்று அடுத்த அடியில் மேலும் ஒரு இடி.

29. AB: "போதும், அநீதியை விட்டொழியுங்கள்
வீம்பினை விடுங்கள், நீதி என் வழக்கு."

ஆயினும், தடித்த எழுத்திலுள்ள இரண்டு இடங்களிலும் மூலத்தில் உள்ள சொல் ஒன்றே (sûbû = return you). இதற்கு 'இங்கு பாருங்கள்' (விலக, மாற வேண்டாம்) என்பது பொருத்தம் எனக் கொண்டேன்.

30. சொற்பொருள்—AB, "சொற்கள்"; Syr. "உண்மை." துயரம், அழிவு எனப் பொருள்கொள்வது தவறு என்கிறது AB. 'வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று சொல்லாதீர்கள்; என் நாவில் தீமை இல்லை, ஆகையால் அது உங்கள் சொற்களின் பொருளை, உண்மையை உணர முடியும்' என்பது குறிப்பு. 'நான் பொய் சொல்லவில்லை; நீங்கள்தான் பிழைபடப் பேசுகிறீர்கள்' என்று யோவு இடித்துரைக்கின்றார்.

# 7

## உமக்கு நாளே இலக்கு?: யோவு

**7:** [உலகில் மனிதனின் வாழ்க்கை கடினமானது, சில நாள்களே இருப்பது (1–6) என்று கூறிய யோவு இறைவனை நோக்கிப் பேசுவாராகித் தம்மைச் சும்மா விடக் கூடாதா என்று அங்கலாய்க்கின்றார் (7–21).]

*7:1. ''வையத்தில்—மனிதன் வாழ்வுபோ ராட்டந் தானே?*
*வாழ்நாள் கூலியாள் நாள்போல் தானே?*
*2. நிழலுக்கு ஏங்கும் அடிமை போலவும்,*
*கூலியே எண்ணும் வேலையாள் போலவும்.*
*3. வாய்த்தவை எனக்கு மாயமாம் திங்கள்கள்;*
*எனக்கு விதித்தவை அலுக்கும் இரவுகள்.*
*4. படுத்தால் எப்போது எழலாம் என்பேன்;*
*இரவோ விடிதலே இல்லாது அலுக்கும்;*
*புரள்வது போதும்நான் வைகறை வரைக்கும்.*
*5. புழுவும் புழுதியும் போர்த்ததுஎன் ஊஉன்;*
*ஒழுகும் வெடித்துமேல் தோலெலாம் சீஇழ்.*
*6. தறிஓ டத்தினும் விரையும்என் நாளே;*
*உற்றநம் பிக்கை அற்றுஅஃது ஓயும்.*

---

1. போராட்டம்—AB, hardship. மூலம், "army/warfare." JB, ''கட்டாய ஊழியம் கடும்படைச் சேவகம் வையத்து மனிதன் வாழ்விது தானே.''

2. ஏங்கும்—longs (RSV); AB, இரைக்கும் (=மூச்சுவாங்கும்).
எண்ணும்—RSV, looks for; AB, (கூலிக்கு) ஏங்கும்.

3. மாயமாம்—ஒன்றுமில்லாமற் போகும்; (of) emptiness (RSV).
அலுக்கும்—weary (AB); RSV, (of) misery (இன்னலாம்).

4. JB: ''படுத்தால் எப்போது விடியும் என்பேன்
விடிந்தெழுந்தபின்
மாலை வரவுக்கு எவ்வளவு நேரம் என்பேன்
ஓயாது நான்
அந்தி வரும்வரை அலுத்துக் கொள்வேன்.''

6. நம்பிக்கை—மூலச் சொல் (tiqwāh) நூல், இழை என்றும் பொருள்படும்; எனவே தறிஓடம் நூல் அற்று ஓயும், வாணாள் நம்பிக்கை அற்று ஓயும், என்று இருபொருள்பட ஆசிரியர் இயற்றியுள்ளார். அற்று என்ற சொல்லில் ஓரளவு இதனைக் காணலாம்.

7. எனதுஉயிர் அதுவெறுங் காற்றே, நினையீர்;
நன்மை இனிஎன் கண்கள் காணு.
8. பார்க்கும் கண்இனி எனைக்கா ணுது;
நோக்கும்உம் கண்எனை, நாடுனு இரேனே.
9. எழிலி ஆவியாய் ஏகி மறையும்;
இழிந்தான் பாதலத்து எழுந்து வாரான்.
10. இனிமேல் அவன்தன் இல்லம் திரும்பான்,
இல்லம் அவனை இனிப்பார்க் காது.
11. ஆகையால் என்வாய் அடக்க மாட்டேன்,
ஆவிசோர் இன்னல் அதனுல் பேசுவேன்,
உள்ளம் வெறுத்து முறையிடு வேனே.
12. கடலா, கடல்வாழ் நாகமா நான்,எனைக்
காவலில் வைத்துக் கண்கா ணிப்பீர்?
13. 'படுத்தால் ஆறுத லாக இருக்கும்,
சாய்ந்தால் வலிசிறிது தணியும்' என்கிலோ,
14. கனவு கனவாய்க் காட்டிக் கலக்குவீர்,
காட்சிக ளால்எனை அரள வைப்பீர்;

---

7. வெறுங்காற்று—நீர்க் குமிழி என்பது போல, காற்று நிலையில்லாததை, சத்தில்லாததை, பொக்கானதைக் குறிக்க வந்தது (சங். 77:39; இசை. 41:29; எரெ. 5:13 காண்க).

''நன்மை'' எனப்பட்டது இங்கு செழிப்பும் இன்பமும் துய்ப்பதை (AB).
JB: ''களிப்பினை இனிஎன் கண்கள் காணு.''

9. JB: ''பெய்த எழிலி கரைந்து மறை வதுபோல் . . . ''
RSV: ''மங்கி மறையும் மேகம் அதுபோல் . . .''

10. இல்லம்—அவன் இல்லம் (AB); இல்லமும் (RSV).

12. நாகம்—பறவை நாகம், லெவியத்தான் (3:8; 40:25 காண்க). பாபிலோனியர் புராணத்தில் கடவுளர் பிறக்கக் கடல் உதவிற்று; அதன்பின் அக்கடவுளரில் ஒருவர் கடலினை வென்று அடக்கினுர். கவிஞர்கள் இக்கதையினைத் தம் கருத்துக்கு ஏற்ற ஒன்றுகப் பயன்படுத்தி, முழுமுதற் பெருமானே படைப்புக் காலக் குழப்பத்தை ஒழித்துக் கடலையும் அதில் வாழும் இராட்சச விலங்குகளையும் அடக்கி வைத்திருக்கின்றுர் என்றனர் (சங். 64:7; 73:13,14; 76:16; 88:9,10; 92:3,4; 103:6,7; 106:29; இசை. 27:1; 51:9 காண்க)—JB Notes.

AB குறிப்பு வேறு வகையாகும்: அதன்படி,

விவிலியத்தில் வரும் புராணக் குறிப்புகள் பாபிலோனியர் கதைகளைக் காட்டிலும் மேற்கு செமித்தியரின் உகாரித் புராணங்களையே சுட்டுவனவாகும். இந்தக் கண்ணி குறிக்கும் உகாரித் புராணக் கதையில் மழைக் கடவுள் பாகால் (Baal) கடற் கடவுள் யம்மை (Yamm) வென்று அடக்கி வைத்திருக்கும் வகை வருணிக்கப்பட்டுள்ளது. கடல் தெய்வம் அழிக்கப்படவில்லை, கண்காணிப்பில் அடக்கி வைக்கப்பட்டுள்ளது. [கந்த புராணத்தில் வரும் சூரபதுமன் மயிலாக அடக்கி வைக்கப்பட்டுள்ளது போல (?)]

15. கடைசியில் குரல்வளை நெரிபடத் துடிக்கும்,
சாதலே மேல்என விரும்பும்என் எலும்புகள்.
16. வெறுத்துப் போயிற்று; என்
வாழ்க்கையும் முடிவிலா வாழ்க்கை அன்றே;
விடுவீர் என்னை;
ஒருசிறு மூச்சே எனது வாழ்நாள்.
17. மனிதனை ஏன்தான் வளர்ப்பீ ரோநீர்?
அவன்மேல் ஏனோ கவலை உமக்கு?
18. நாளும் பொழுது விடிந்ததும் ஆய்வீர்,
சோதிப் பீர்ஒரு நொடிதவ றுமல்.
19. என்மேல் வைத்தகண் எடுக்கமாட் டீரா?
எச்சிலைச் சற்று விழுங்க விடீரா?
20. மனிதர்கா வலரே,
இழைத்தேன் பாவமே எனினும் அதனால்
உமக்குநான் செய்த தென்ன? உமக்கு
நானோ இலக்கா னேனோ? நான்ஏன்
உமக்குஒரு பாரமாய் இருக்க வேண்டும்?
21. பொறுக்கலா காதோ என்றன் குற்றம்,
மறக்கலா காதோ என்றன் தீமை,
மண்ணில் இனிநான் சாயும் வண்ணம்,
என்னைநீர் தேடநான் இல்லா வாறே?''

---

15. மொழிபெயர்க்கக் கடினமான கண்ணிகளுள் ஒன்று என்பர்; இம்மொழிபெயர்ப்பு AB-யை ஒட்டியது. துடிக்கும், விரும்பும்—மூலத்தில் ஒரே சொல், "choose" (AB).
சாதலே—ஏகாரம் தேற்றம், எபிரேயத்தில் உள்ளதே.

16. வெறுத்துப் போயிற்று—JB, ''கரைந்து கரைந்து போகிறேன்''.

17,18. எட்டாவது சங்கீதம் இறைவனுடைய இரக்கப் பெருக்கத்தை நினைந்து வியந்து போற்றுகிறது. அதற்கு நேர்மாறாகக் கிண்டலும் இடக்குமாக வருகிறது யோபின் புலம்பல். மனிதர் காவலரே (20) என்பதும் கிண்டல்தான்.

நாளும் . . . ஆய்வீர்—AB, "inspect him every morning"; RSV, "dost visit him every morning."

20. இழைத்தேன் பாவமே—தேவையில்லை என்று AB இச்சொற்களை விட்டுவிட்டது; அடிநீளம் (மூலத்தில்) இவற்றால் அளவு கடந்துள்ளது என்று அது சுட்டிக் காட்டுகிறது. மூலத்தில் இக்கண்ணி மூவடிகளே.

AB: ''மனிதர் காவலரே, உமக்குநான் இழைத்ததுஎன்?
உமக்கு நானோ இலக்கா னேனோ?
உமக்குநான் பாரமாய் இருப்ப தேனோ?''

21. மறக்கலாகாதோ—AB, மன்னிக்கலாகாதோ;
RSV, எடுக்க(=எடுத்துவீச)லாகாதோ,

# 8

# கடவுளே அறநெறி பிறழச் செய்வரா?: வில்தாது

**8:** [வில்தாது யோபினுடைய பேச்சு வெறும் சக்கை என்று ஒரு போடு போடு கிறார் (1,2). கடவுளிடம் அநீதி என்று யோபு எப்படிக் கூறலாம் (3)? யோபின் மக்கள் பாவம் செய்திருக்க வேண்டும், அதனால்தான் அழிந்தனர் (4). யோபு இனிக் கடவுளை வேண்டினால், தூயவர், நேர்மையானவர் என்றால், இழந்த வாழ்வை மீளப் பெறலாம் (5–7). தீயவர்கள் எப்போதும் அழிவர், நல்லவர்கள் எப்போதும் காப்பாற்றப்படுவர், இதுவே வரலாறு, இதுவே வாழ்க்கை அநுபவம் என்று அடித்துச் சொல்கிறார் வில்தாது. இன்னும் யோபு காப்பாற்றப்படலாம் என்கின்றார் அவர் (8–22).]

*8:1. அதற்கு சுவாகூர் வில்தாது சொன்னார்:*

*2. ''எவ்வளவுதான் இப்படியே பிதற்றியவாறு இருப்பீர்கள்?*
*உங்கள்பேச்சு அவ்வளவும் ஒன்றுமிலா வெறுங்காற்று.*
*3. கடவுளே அறநெறி பிறழச் செய்வரா?*
*பரமனே நீதியைப் புரட்டு வானா?*
*4. உங்கள் மக்கள் அவரை எதிர்த்துப்*
*பாவம் செய்தனர், பரிசும் பெற்றனர்.*
*5. நீங்கள் மட்டும் கடவுளை நாடினால்,*
*இணையிலி அவரை இரந்துமன் றாடினால்,*
*6. நீங்களும் தூயவர் நேர்மையர் என்னில்,*
*உங்கள் பொருட்டுஅவர் எழுந்து வருவார்,*
*நேர்மையின் உறையுளை மீட்டுத் தருவார்.*
*7. முன்னைய நிலையெலாம் எற்றே என்னப்*
*பின்னைய நாள்கள் பெரிது கொழிக்கும்.*

---

*3. பிறழ, புரட்டு—மூலத்தில் ஒரே சொல் இரண்டு அடிகளிலும் வந்துள்ளது. கிரேக்க, லத்தீன் மொழிபெயர்ப்புக்களில் வெவ்வேறு வினைச்சொற்கள் காணப்படு கின்றன. மூலத்திலும் இவ்வாறே ஒரு பொருள் இரு சொற்கள் இருந்திருக்கலாம் என்று கருதுவார் உளர்.*

*4. முன்னுரைப் பகுதியைச் சுட்டிக்காட்டும் கண்ணி. எனவே உரையாடற் பகுதியும் முன்னுரையும் இரு வேறு தனி நூல்கள் அல்ல என்பது துலங்கும்.*

*பரிசு—அவர்கள் பாவத்துக்கு உரிய தண்டனை.*

8. முன்னோர் தலைமுறை மொழியக் கேட்க,
அன்னோர் தாதையர் ஆய்ந்ததும் கருதுக.
9. நேற்றுப் பிறந்தவர் நாமொன்று அறியோம்;
நிழலைப் போன்றது நிலத்தில்நம் வாணுள்.
10. உணர்த்து வார்களே உங்களுக்கு அவர்கள்
மனத்தில் உள்ளதை வாய்மலர் வார்களே:
11. சேற்றில் அன்றித் தாட்புல் வளருமா?
தண்ணீர் இன்றி நாணல் தழைக்குமா?
12. வெட்டாது பசுமையாய் விட்ட போதிலும்
புற்களுக் கெல்லாம் முன்னே வாடிடும்.
13. கடவுளை மறப்பார் கதியும் அதுவே;
பக்தியில் லாதவன் நம்புதல் பாழாம்.
14. அவன்தன் உறுதி நூலாம் படையே,
அவன்நம் பிக்கை சிலந்திக் கூடே.
15. தன்வீடு அதன்மேல் சாய்வான், நில்லாது;
பற்றிப் பிடிப்பான் அதுபிடி படாது.
16. பகல்ஒளி தன்னில் பசையா யுள்ளனன்,
அவன்கிளை தோட்டம் அளந்து பரந்தன.
17. கற்களின் குவியலைச் சுற்றின வேர்கள்,
கல்வீடு ஒன்றைக் கண்டன ஞமே.

---

8. ஆய்ந்தது—AB, அனுபவம்; ஆனுல் மூலத்தில் உள்ளது 'searching out'.

9. நேற்றுப் பிறந்தவர்—இதுவும் மூலத்தில் உள்ளபடியே (of yesterday) சொல்லும் பொருளும் இசைந்து வருகிறது. AB, ephemeral.

11. தாட்புல்—எழுதுவதற்குத் தாளாக உதவும் புல்வகை, papyrus.

12. புற்களுக்கெல்லாம் முன்னே—மூலத்தில் உள்ள சொல்லும் பொருளும் அப்படியே தமிழிலும் இசைந்து வந்துள்ளது (before all grass) (cf. AB). AB, quicker than grass. RSV, before any other plant.

13. கடவுளை . . . அதுவே—LXX, AB, JB: "கடவுளை மறப்பார் அனைவர் கதியும் அதுவே."
MT, RSV: "கடவுளை மறப்பார் எல்லாம் (போம்) வழி அதுவே."

14. நூலாம் படை—ABயைப் பின்பற்றியது. ஆனுல் RSV, "அவன்தன் உறுதி அறுந்து துண்டாகும்." With all the plausible explanations and reasoning for emending the MT text given by AB, RSV's above rendering may still be the correct one. For it keeps the pun on the Heb. word tiqwāh (13b, hope) which also means 'thread'.

16. கிளை—AB, "வேர்கள்"; RSV, "தழைகுழை."

17. வேர்கள்—RSV; AB, "tendrils."
கண்டனன்—MT, "he sees"; LXX "he lives;" AB, "(they) grasp."

18. தன்இடத் திருந்துஅவன் எடுபட, அவ்விடம்
'உன்னைநான் பார்த்ததே இல்லை' என்று உதறும்.
19. காண்க, அவன்வழி கண்ட இன்பம்!
அந்த மண்ணில் பிறர்முளைப் பார்கள்.
20. கறையிலா தவனைக் கடவுள் தள்ளார்,
காதகர் தம்மையும் கைப்பிடி யாரே.
21. இன்னமும் உங்கள் வாயெலாம் சிரிக்கவும்
பண்ணுவார் நாவெலாம் மகிழ்ந்துஆர்ப் பரிக்கவும்.
22. உங்கள் பகைவர் உடுத்துவர் வெட்கம்;
தீயோர் உறையுள் தீர்ந்து போமே.''

---

18. முதல் அடியின் மூலம்: ''When he/it swallows him from his place.''

இங்குள்ள வினைச்சொல் செயப்பாட்டுப் பொருளில் உள்ளதாக JB கொண்டுள்ளது. செய்வினை வடிவில் செயப்பாட்டுப் பொருளில் வினைச்சொல் பயின்று வருவதைப் பல இடங்களில் AB சுட்டியுள்ளது. அவ்வாறே இங்கும் கொண்டு மொழிபெயர்த்துள்ளேன். மூலத்திலும் இத்தகைய இடங்களில் எழுவாய் மறைந்திருப்பதை ஏனைய இடங்களில் AB குறிப்பிட்டுள்ளது. இங்கும் மறைந்திருக்கலாம், அதனால்தான்போலும் he/it என்ற ஐயம்.

எனவே, தோட்டம் நிறையத் தழைகுழை பரப்பக் கிளைகளும் வேர்களும் விட்டுப் பகலொளியில் பசையாக வளர்ந்து விளங்கும் மரம்/பெரிய செடி கண்முன்னே தோன்றுகிறது; அதனுடைய வேர்களோ கற்குவியலில் பின்னியுள்ளன; உறுதியாக, கல்வீட்டில் வாழ்வதுபோல் நினைக்கத் தோன்றுகிறது. ஆனால் ஒருநாள் வரும், அந்த இடத்திலிருந்து அவன் எடுபடுவான்—மரம்/செடி வேரோடும் பிடுங்கி எறியப் படுவதுபோல. இனி அந்த மண்ணில் அதற்கு/அவனுக்கு இடமில்லை—என்று உவமைப் பொருத்தம் கண்டுகொள்க.

19. பிறர் முளைப்பார்கள்—மூலத்தில் எழுவாய் ஒருமையாகவும் வினைச்சொல் பன்மையாகவும் உள்ளதென்று AB குறிப்பிடுகிறது; இரண்டையும் ஒருமையாக்கியுள்ளது. RSV இரண்டையும் பன்மையாக்கியுள்ளது.

20. கறையிலாதவனை—RSV; ''நேர்மையானவனை'', AB.

22. உறையுள்—மூலம், ''கூடாரம்.''

# 9

# எப்படிப் பேசுவேன் இந்தக் கதியில்?: யோவு

**9:** [யோவு தூயவர் என்றால் அவரை மீண்டும் கடவுள் வாழவைப்பார் என்று வில்தாது கூறினார் அல்லவா? ஆனால் களங்கம் இல்லை என்று கடவுள்முன் *மனிதன் விடுதலை பெறுவது எப்படி?* என்று யோவு எதிர் வினா விடுக்கிறார் (1,2). வழக்காட வந்தால் அதனைக் கடவுள் ஓர் ஆற்றல் போட்டி ஆக்கிவிடுகிறார் என்று யோவு குறைப்படுகின்றார் (3–21). நல்லவர் கெட்டவர் யாவரையுமே கடவுள் ஒன்றுபோல் அழித்துவிடுகிறார் என்றும், உலகத்தில் தீயோர் கை ஓங்கி நிற்கிறது என்றும், நீதி கண் குருடாகிவிட்டது என்றும், இதற்கெல்லாம் கடவுள்தான் பொறுப்பு என்றும் யோவு குமுறுகின்றார் (22–24). வாழ்க்கை நிலையற்றுப் பறக்கிறது, நம்பிக்கைக்கு இடமில்லாத நிலையில் போராடிப் பயன் என்ன, தாம் களங்கம் இல்லாதவராக இருந்தாலும் தம்மைக் கடவுள் சேற்றில் அமிழ்த்திவிடுவாரே என்று மறுகுகின்றார் யோவு (25–31). தமக்கும் கடவுளுக்குமிடையே நடுவர் ஒருவர் இருந்து, கடவுள் தமது வலிமையைக் காட்டாதபடி அவர் அவரைத் தடுத்து, தாம் தடையின்றிப் பேச இடம் வாய்த்தால் நியாயமாகும் என்று கருதும் யோவு, அதற்குக் கடவுள் இடம் கொடார் என்கின்றார் (32–35).]

*9:1. அதற்கு யோவு உரைத்த மறுமொழி:*
*2. "உங்கள் சொல்இது உண்மைதான், அறிவேன்*
*ஆயின் விடுதலை அடைவது எப்படி,*
*கடவுள்முன் மனிதன் களங்கம் இலான்என?*
*3. அவனோடு அவர்வழக் காட இரங்கினும்*
*அவர்கேட் பதற்குஅவன் விடைசொல முடியுமா*
*ஆயி ரத்தில் ஒன்றே யாயினும்?*
*4. அறிவும் ஆற்றலும் அமைந்தவ ரயினும்*
*அவர்க்குஎதிர் நின்றுகல் லாகிப் பிழைப்பனா?*

---

*2. மூலத்தில் இரண்டு அடிகளில் உள்ளது. ஆகவே,*
*"உங்கள். . . அறிவேன்;*
*ஆயின்—கடவுள் முன் விடுதலை அடைவதெப்படி?" என மாற்றலாம்.*

*3. இதுவும் மூலத்தில் ஈரடிகளே.*
*மாற்று: "அவனோடு . . . இரங்கினும்,*
*அவர்க்கு அவன்—ஆயி ரத்துக் கொருவிடை யிறுப்பனா?"*

*4. AB மொழிபெயர்ப்பை ஒட்டியது.*
*கல்லாகி*—மூலம், "hardened" (the heart/spirit/neck).

5. ஆரும் அறியுமுன் மலைகளை அசைப்பார்,
வெகுண்டால் அவற்றை வீழ்த்திச் சாய்ப்பார்.
6. அசைப்பார் மண்ணகம் அஃதுஇடம் பெயர,
அதிரும் அதனால் அதனடித் தூண்கள்.
7. கட்டளை யிடுவார், கதிரவன் எழாஅன்;
முத்திரை யிடுவார், வெள்ளிகள் முளையா.
8. தாமொரு தனியாய் வானினை விரித்தவர்,
ஆழியின் முதுகினை மிதித்து நடந்தவர்.
9. வடமீன் குழுவும், மார்கழி உடுவும்,
கார்த்திகை வெள்ளி,தென் பாலவும் ஆக்கினார்.
10. உணர்ந்திட வொண்ணா அரும்பெருஞ் செயல்கள்,
கணக்கில் அடங்காப் புதுமைகள் புரிபவர்.
11. கடந்து நடப்பார், காண்கிலேன் அவரை;
நடந்துமேற் செல்வார், நான்உணர் கில்லேன்.

---

3,4. RSV, JB மொழிபெயர்ப்பு வேறு; அது வருமாறு:

''நியாயம்—எங்கே? என அவர்க்கு எதிராய் ஒருவன்
வழக்கா டத் துணி வானே யாகில்
ஆயிரத்துக்கு ஒன்றே கூட
அவனால் விடை சொல முடியா தாகும்.
பேரறி வானது அவர்தம் உள்ளம்,
பெரிதே அவர்தம் ஆற்றல்; பின்னை
ஆரே அவரை எதிர்த்தல் ஆற்றுவார்?''

5. RSV: ''மலைகளைப் பெயர்ப்பார் அஃது அவை அறியா
வெகுண்டு அவர் அவற்றை வீழ்த்திச் சாய்க்கையில்'',
JB: ''மலைகளை அசைப்பார் அஃது அவை அறியா . . .''

8. ஆழியின் முதுகினை மிதித்து நடந்தவர்—கடலினை வென்று அடக்கிய கதை குறிக்கப்படுகிறது. தோற்ற எதிரியின் முதுகின்மேல் மிதித்து நடப்பது வெற்றி வீரனின் போர் மரபு. படைப்புக் காலம் பற்றிய பாபிலோனிய புராணத்தில் வென்ற தெய்வம் மார்தக் தோற்ற தெய்வமாகிய தியாமத்தின் உடம்பின்மேல் மிதித்துச் சவட்டி அப் பிணத்தை இரு கூறுகப் பிளந்து ஒரு கூறு கொண்டு வானத்தைப் படைத்ததாக வருகிறது. வானினை விரித்தார் என்றும் கடலின் முதுகினை மிதித்தார் என்றும் இவ் அடிகளில் இணைந்து வந்திருப்பது கடல் தெய்வத்தின் தோல்வியோடு விண் மண் படைப்பினை இணைக்கும் பண்டைய புராணத்தின் குறிப்பாம் (AB).

முதுகு—அலை என்று (RSV போல) மொழிபெயர்ப்பது பிழை என்கிறது AB.

9. தென்பால—Chambers of the south; இவை எவற்றைக் குறிக்கின்றன என்பது விளங்கவில்லை; நட்சத்திரக் கூட்டம் ஒன்றைச் சுட்டுவதாக அறுதியிட்டுச் சொல்ல இயலாது (AB).

10. இதே வார்த்தைகளை ஏலிப்பாசும் சொன்னார் (5:9 காண்க).

11. கடவுளுடைய செயல்கள் நமது காட்சிக்கும் கருத்துக்கும் அடங்கியவை அல்ல.

12. பறிப்பார், அவரை எவன்தடுப் பானும்?
'என்ன செய்கிறீர்?' என்றுகேட் பானும்?
13. கடவுள் சினந்தபின் கலங்குவா ரல்லர்;
வீழ்ந்தனர் அவரடி ராகாவ் வீரர்கள்.
14. பின்னே எப்படி என்வழக்கு உரைப்பேன்?
அவரோடு எதிர்நின்று என்சொல் தொடுப்பேன்?
15. பிழையிலேன் எனினும் விடையிலேன் அவர்க்கு;
வழக்கில்என் எதிரியைக் கெஞ்சநான் வேண்டும்.
16. நான்அழைத்து அவர்எனக்கு எதிர்மொழி கூறினும்
நம்பேன் என்சொல் கேட்பார் அவர்என.
17. ஒருசிறு மயிரிழை அதற்குளே நொறுக்குவார்,
சும்மா என்றன் புண்களைப் பெருக்குவார்.
18. மூச்சு விடவும் விடாஅர், எனக்குத்
தெவிட்டத் தெவிட்ட வெறுப்பினை ஊட்டுவார்.
19. வலுக்கட் டாயமா? வலியவர், காண்க!
வழக்கிட வா?எவன் அவர்மேல் தொடுப்பான்?

---

13. முதலடி மொழிபெயர்ப்பு JBயைப் பின்பற்றியது. கடவுள்—AB, "a god."
ராகாவ்—கடவுள் கடல் தெய்வத்தை வென்ற அமரில் அவர் கொன்ற கடல் அரக்கர்களில் ஒருவன் ராகாவ். ராகாவுக்குத் துணைவர்கள் இருந்தார்கள் என்பது பாபிலோனியரின் படைப்புப் புராணத்திலும் குறிக்கப்படுகிறது. ராகாவ் என்ற சொல்லை ஆய்வோர் அது "வேகம், பரபரப்பு" என்பதன் அடியாகப் பிறந்தது என்பர். ஆகவே, ராகாவ் = வேகன். எனவே, "வீழ்ந்தனர் அவரடி வேகன் வீரர்கள்." ("வேகம் கெடுத்தாண்ட" என்ற திருவாசகமும் ஒப்பு நோக்குக.)

14. வழக்குரைப்பேன்—AB, RSV, "answer him." But JB notes that the verb is often used as a juridical term.
அவரோடு எதிர் நின்று . . .—AB, "match my words with him"; RSV, "choosing my words with him." 'ஓடு' என்பது நிகர், இணை என்பதைக் குறிக்கும்.

15. JB: "நியாயம் என் பக்கமே நிற்பதென் றாலும்
என் எதிர் வாதம் என்ன பயனும்?
வழக்கில் எதிரியாம் அவரே நடுவரும்."

17. ஒரு சிறு மயிரிழை—AB, JB; RSV, "புயலால் என்னைப் புடைத்து நொறுக்குவார்." "சிறு" வலியுறுத்துவதற்காகச் சேர்த்தது.
புயல்—எபிரேய மூலம்; மயிர்—Syr. and Targ.
சும்மா—மூலம், gratis, without cause; காரணம் இன்றி.

18. தெவிட்டத் தெவிட்ட—அடுக்கியது வலியுறுத்தலுக்காக, AB விளக்கத்தை ஒட்டி.

19. ABயை ஒட்டி மொழிபெயர்த்தது; வலியவர் காண்க = அவர் வலியவர், காண்க; RSV, "காண்க அவரை."
JB: "சரி, நான் வலுக்கட்டாயம் பண்ணிப் பார்க்கலாமா?
ஆனால் அவர் வலு எத்துணைப் பெரிது!"
நீதிமன்றம் ஏறலாமா?
ஆனால் அவரை அங்கு அழைப்பார் யாரே?

20. மறுவிலேன் எனினும்என் வாய்எனைப் பழிக்கும்;
புரையிலேன் எனினும்நான் புரட்டன் என்பார்.
21. நான்அன் குற்றம் அற்றவன்;
என்னைப் பற்றிக் கவலை இல்லை;
வாழ்க்கை வெறுத்தது எனக்கு.
22. யாதும் ஒன்றே, ஆதலால் சொல்வேன்:
தீயோர் போலநல் லோரையும் அழிப்பார்.
23. திடுமெனத் துன்பம் வந்து கொல்கையில்
நல்லான் அலமரக் கண்டு நகைப்பார்.
24. வையம் கொடியோர் கையில் கொடுத்தார்;
அதன்தன் நடுவர்கள் கண்ணைக் கட்டுவார்;
அவர்அலர் என்றால் வேறுயார்?

25. அஞ்சலிற் பறந்து போகும்என் வாணாள்;
பறக்கும்அப் பறப்பில் நன்மைஒன்று இல்லை.
26. தக்கைப் படகுபோல் தத்திப் போய்விடும்,
இரைமேல் பாயும்ஓர் பருந்தாய்ப் பறந்திடும்.
27. 'என்துயர் மறப்பேன், இன்முக மாக
என்முகம் மாற்றி இருப்பேன்' என்கிலோ,

---

20. என் வாய்—AB, RSV; அவர் வாய் (JB).
நான் மாசில்லாதவன் என்றாலும் அவருக்குப் பயந்து வாயளவில் நான் பழி ஏற்றுக்கொள்வேன் என்பது கருத்து (AB).

21. நான் குற்றமற்றவன்—AB, RSV.
JB: ''அப்படியே நான் குற்றமற்றவன்தானா?
எனக்கு அது தெரியாது.''
கவலை இல்லை—சொல்லுக்குச் சொல் ஆக்கினால், ''எனக்கு அது தெரியாது;'' ஆனால் பொருள் 'அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை' என்பதே. (AB காண்க).
யோவு இங்கு சொல்ல வரும் கருத்து, ''நான் குற்றவாளி என்பீர்கள். எனக்கு அது தெரியாது (=அதைப் பற்றிக் கவலை இல்லை)'' என்பதே. அடுத்த கண்ணியைப் பார்க்கும்போது இதுவே அவரது சிந்தனைப் போக்கு என இயைவது காண்க.

22. யாதும் ஒன்றே—குற்றமற்றவனாயினும் குற்றவாளியாயினும் கதி ஒன்றே என்பது கருத்து.

24. கண்ணைக் கட்டுவார்—மூலம், ''முகத்தை மூடுவார்.''

25. அஞ்சலில்—''தபாலைவிட''; மூலம், ''அஞ்சற்காரனைவிட.''
நன்மை—எபிரேயத்திலுள்ளபடி தமிழிலும் ''ஆதாயம், பயன்'' என்ற பொருளில் வருவது. காண்க 7:7.
பாயும் ஓர் பருந்தாய்—மூலம், ''பருந்தின் பாய்ச்சல்போல்.''

27. JB: ''புலம்பலை அடக்கி முகத்தினை மாற்றிப்
புன்னகை பூண்டுநான் பொலிவுற உன்னின்,''

28. என்கொடுந் துன்பம் எண்ணிப் பதைப்பேன்;
தெரியும், என்னைநீர் விடுதலை செய்யீர்.
29. குற்ற வாளி நான்எனக் கண்டீர்;
வீணே ஏன்போ ராட வேண்டும்?
30. சீயக் காய்ப்பொடி தேய்த்துக் குளிப்பினும்,
காரம் தேய்த்துஎன் கைகளைக் கழுவினும்,
31. அளற்றில் என்னை அமிழ்த்தி விடுவீர்,
உடுத்திய துணியும் வெறுத்திடும் என்னை.
32. என்போல் மனிதரோ அவரைநான் கூவி
'வருக வழக்கு மன்றம்'என் பதற்கு?
33. ஒருவர் நடுவர் இல்லையே எங்கள்
இருவர் தம்மையும் தம்கரம் பற்ற.
34. அவர்தம் பிரம்பினை அப்பால் வைக்கட்டும்,
அவர்விடு கிலிஎனை அரட்டா திருக்கட்டும்.
35. அப்போது பேசுவேன் அஞ்சாது அவரிடம்;
அப்படி இல்லையே அவருடன் நானே.

---

30. (RSV), JB—''பனியினால் என்னைக் கழுவி என் பயன்?''
சீயக்காய்ப் பொடி—மூலத்தில் உள்ள சொல் Leontopetalon என்னும் செடியின் வேர்.

31. அளறு—சேறு, பாதாளலோகம். இந்த இடத்தில் அந்தப் பாதாளத்தின் சேற்றுத் தன்மையே குறிப்பிடப்படுகிறது (AB).
உடுத்திய துணியும் வெறுத்திடும் என்னை—சேற்றில் அமிழ்த்தப்பட்டவரின் துணிதானே அவர் உடம்பைவிட அதிக அழுக்காக இருக்கும்; அப்போது அது அவரைப் பார்த்து வெறுப்பது எப்படி? ஒரு வழக்கில் குற்றவாளி அல்லர் என விடுதலை அடைபவருக்கு வெள்ளை உடுப்பு அணிந்து பாராட்டும் மரபு இங்கு குறிக்கப்படுகிறது. யோவு என்ன சொல்கிறார் எனில், தாம் கறையில்லாதவரெனினும் தம்மைக் கடவுள் சேற்றில் அமிழ்த்திவிடுவார் ஆதலால் விடுதலைக்குரிய துணி உடுத்தினாலும் அது தம்மை வெறுக்கும் என்பதாம் (AB).

32. மனிதரோ—''அவர் என்போல் மனிதர் அல்லர்'' என்று உள்ளதை வினாவாக்கியது மொழிபெயர்ப்பில்.

34. பிரம்பு—மூலம், தண்டிக்கும் அதிகாரத்தைக் குறிக்கும் ''கோல்'' என்ற பொதுச் சொல். அது சட்டென்று விளங்காது என்று கருதிப் பிரம்பினை வைத்தோம்.

35. அப்படி . . . நானே—AB; ஆனால் மூலம், ''For I am not so with me.'' இது சிதைவு என்பர். RSV, ''நான் அப்படி (=குற்றவாளியாக) இல்லை.'' JB, ''நான் எனை அப்படி (=குற்றவாளியாக)க் கருதவில்லை.''

இந்த அதிகாரத்தில் யோவின் மனத்தை அரிக்கும் கேள்வி அருள் பற்றிய அடிப்படையானதொரு கேள்வி என்று தோன்றுகிறது. கடவுள்முன் எவனும் களங்கமிலாதவன் அல்லன் என்று ஏலிப்பாசு கூறியதை யோவு ஏற்றுக்கொள்கின்றார். எனினும், இறைவனுக்கு உகந்தவனாவது எப்படி? அதற்கும் அவர் திருவுளமே ஆதிமூலம் அன்றோ? இந்தக் கேள்வியை இறைவனோடு வழக்காடித் தீர்க்கலாம் என்றால், முடிகிறதா? இல்லையே என்று யோவு உளைகின்றார்.

# 10

# சும்மா விடக் கூடாதா?: யோவு

**10:** [வாழ்க்கை அறவே வெறுத்துப்போன யோவு தமது ஆற்றுமை தீரப் பேசி, வாயடக்காமல் தம்மனத்தில் எழும் கேள்விகளையெல்லாம் கடவுளிடம் கேட்டுவிடுவது என்று துதிர்கிறார் (1–3). மனிதனுடைய குறைபாடுகள் கடவுளுக்கு உண்டா? இல்லையே. பின்னை ஏன் அவர் மனிதனைத் துன்புறுத்த வேண்டும் (4–7)? மனிதனைக் கடவுள் மண்ணிலிருந்து உருவாக்குகின்றார்; எலும்பும் தோலும் தசையும் உயிரும் நேசமும் பாசமும் எல்லாம் அவனுக்கு அளித்து வளர்க்கின்றார். எனினும் கடைசியில் அவனைக் குலைக்கவே அவர் திட்டம் தீட்டியிருக்கின்றார் (8–13). யோவுக்குத் தீங்கு செய்யவே கடவுள் காலம் கருதி இருக்கிறார் என்று படுகிறது (14–17). 'ஏன் என்னைப் பிறக்க வைத்தீர்? பிறந்ததே பிறந்தாயிற்று, இறந்துபோக இன்னும் சில நாள்களே உள்ளன, அதுவரை என்னைப் பேசாமல் விட்டால் என்ன?' என்று ஆற்றுமை தீர வினவுகிறார் யோவு (18–22).]

*10:1.* *"அறவே அலுத்தது வாழ்க்கைஎன் ஆவிக்கு;*
*ஆற்று மையெலாம் போற்றுது உரைப்பேன்,*
*உயிரே கசந்துநான் உரைத்திடு வேனே.*
*2.* *கடவுள்பால் கூறுவேன்: கண்டனம் செய்யீர்;*
*எனக்குஎதி ரானதும் வழக்கினைச் சொல்வீர்.*

---

1. *போற்றுது உரைப்பேன்*—*மூலம்* "Let me put (forth) upon me." Similar idioms in Tamil seem to be *(என்மேல்) கொட்டித் தீர்ப்பேன், போட்டு உடைப்பேன்.* The concept of the Hebrew idiom appears to be to cover oneself with (complaint) brought forth from oneself. *எனவே, போற்றுது—உள்ளே அடக்கி வைத்துக் காவாமல் வெளியே கொட்டித் தீர்ப்பேன்.*

*ஆற்றுமை—(என்னால்) தாங்கமுடியாதவை;* (my) complaint.

AB, "I will give vent to my complaint."

RSV, "I will give free utterance to my complaint."

2. *சொல்வீர்*—AB, RSV, *"எனக்குத் தெரியட்டும்." எனவே, "எனக்கெதிரானதும் வழக்கினைத் தெரிப்பீர்" என்றும் அமைக்கலாம்.*

*இரண்டாவது அடியை, "இறைவா, உமது வழக்கினை இயம்பீர்" என்றும் மொழிபெயர்க்கலாம் (காண்க* AB). *அப்படியானால், முதல் கண்ணியின முடிவில் முக்காற்புள்ளி (:) வைத்துவிட்டு இந்தக் கண்ணியைப் பின்வருமாறு இயற்றினால் இசைவாக இருக்கும்:*

*"கடவுளே, என்னைக் கண்டனம் செய்யீர்;*
*இறைவா, உமது வழக்கினை இயம்பீர்."*

3. அழகோ உமக்கு கொடுமைப் படுத்துதல்,
உமதுகைப் படைப்பையே இளப்பம் ஆக்குதல்,
கொடியோர் சூழ்ச்சியைக் குளிர்ந்து நோக்குதல்?
4. ஊனக் கண்களா உம்முடைக் கண்கள்?
மானிடர் பார்வையா மற்றுநும் பார்வை?
5. பொன்றும்எம் வாழ்நாள் போன்றதா உமது?
மனிதர்தம் ஆயுள் அனையதா உமது?
6. எனது தீமை எங்குளன ஆய்வீர்,
எனது பாவம் யாங்குளனக் கிளறுவீர்?
7. என்னிடம் களங்கம் இல்லை, நீர் அறிவீர்;
எனினும்உம் கைக்குத் தப்புவேன் அல்லேன்.

8. உருப்பட வனைந்துஎனை ஆக்கிய உம்கை
திருப்பி என்னைத் தேய்க்கவந் தனவே!
9. நினைத்துப் பாரீர்,
மண்ணுல் என்னை வனைந்தீ ரேநீர்,
புழுதியாய் மீளப் போக்கடிப் பீரோ?
10. பால்போல் என்னைநீர் வார்க்க வில்லையோ?
தயிர்போல் எனைஉறை விக்க வில்லையோ?
11. ஊனும் தோலும் உடுத்த வில்லையோ?
என்பொடு தசைநார் பின்ன வில்லையோ?
12. உயிரும் நேசமும் உவந்து வழங்கினீர்,
ஆதரித்து என்றன் ஆவியைக் காத்தீர்.

---

3. அழகோ உமக்கு—According to AB the meaning is either "Do you like it?" Is it advantageous?" or "Is it proper?" "Can there be any justification for such a state of affairs?"

7. "உம் கையால் அடிபட்டு விடுபட முடியாதிருக்கின்றேன், களங்கமற்றவனு யினும்" என்பது கருத்து. இது AB மொழிபெயர்ப்பைப் பின்பற்றியது. ஆனால், RSV, JB: "நன்கு தெரியுமே உமக்கு நானொரு
களங்கமும் அற்றவன், என்னைநும் கையின்
கடத்தவல் லானும் ஒருத்தன் இலைஎன."
"ஒவ்வொருவன் உள்ளமும் கடவுளுக்குத் தெரியும், ஆகவே குற்றம் அற்றவன் தானு என்று பார்க்க வாட்டி வதைக்க வேண்டியதில்லை" என்பது JB விளக்கம்.

9. கடவுளுடைய முழுமுதல் தலைமையை உணர்த்த மறைநூல் சிறப்பாகக் கையாளும் உவமைகளில் ஒன்று களிமண்ணுல் கலங்கள் பல இயற்றுவான் செயல். காண்க எரெ. 18:5–12; உரோமை. 9:20–25.

10,11. மனிதன் கருவாகித் தாய் வயிற்றில் வளரும் வியக்கத் தக்க இயற்கை நிகழ்ச்சியை வருணிக்கின்றுர்.

ஊனும் தோலும்—தோலும் ஊனும் என்பது மூலத்தில் உள்ள முறை வைப்பு.

12. காத்தீர்—இத்துன்ப துயரம் வருவதற்கு முன்பு கடவுள் காத்துவந்த அருஞ் செயல் அவ்வளவையும் குறிப்பதாகக் கொள்க (AB).

13. எனினும்உம் உளத்துஇவை ஒளித்துவைத் திருந்தீர்;
தெரியும், இதுவே உம்மனத்து இருந்தது.
14. பாவம் செய்வனு, பார்த்தவா றுள்ளீர்;
பழுதிலேன் என்றுஎனை விடுதலை செய்யீர்.
15. கள்ளனேன் என்னில், அந்தோ கெட்டேன்;
கறையிலேன் என்னில் தலைநிமிர் கில்லேன்,
மானம் அழிந்தேன்,
அல்லல் உழந்தேன்.
16. துணிந்த சிங்கம் போன்றுஎனைத் தொடருவீர்,
ஆனஉம் தீரச் செயல்களை அடுக்குவீர்.
17. மாற்றி மாற்றிப் பகைப்பீர் என்னை,
என்மேல் உள்ளநும் எரிச்சலை வளர்ப்பீர்;
அடுத்துஅடுத்து எனக்குக் கடுந்துயர் துன்பமே.
18. வயிற்றி லிருந்துஎனை ஏன்வெளி யாக்கினீர்?
கண்கா ணுமல் இறந்திருப் பேனே,

---

14. செய்வனு—'என்று' தொக்கி நிற்கிறது.

பழுதிலேன் = குற்றம் இல்லேன்.

JB (13,14): "இவ்வள வெல்லாம்
பண்ணிய உம்செயல் பாசாங் காகும்.
காலம் வரட்டுமென்று இருந்தீர், தெரியும்—
பாவம் செய்வனு என்று பார்க்கவும்,
என்றன் குற்றம் ஒன்றையும் விடாது
கண்டிக் கவுமே."

15. தலை நிமிர்கில்லேன்—தலை நிமிர முடியாதவனுக இருக்கிறேன்; ஏனெனில் மானம் அழிந்தேன் (lit., sated/filled with disgrace).

அல்லல் உழந்தேன்—(AB, drenched in misery ; MT, see thou my affliction ; RSV, look upon my affliction—என் துயர் நோக்கீர்.)

AB says 15c, d may be taken as a single line with four stressed words or as two short lines with 2 stressed words each.

16. துணிந்த சிங்கம் போன்று—AB. கிண்டலாக வரும் வார்த்தை; அடக்கி ஒடுக்கப்பட்டவரிடம் இடக்குப் பேச்சு இயற்கை. ஆனுல், JB, RSV—என்தலை நிமிர்ந்ததோ (சிங்கம் போன்று நீர் . . .)

17. மாற்றுதல் renew என்ற பொருளில் வருவது தமிழில் மரபே.

அடுத்தடுத்து . . . துன்பமே—மூலத்தில் உள்ளபடியே (successions and hardships/army, warfare). (AB குறிப்பு காண்க).

RSV, "மாற்றி மாற்றிச் சாட்சிகள் கொணர்வீர்."

JB, "தாக்கு தாக்கெனத் தாக்குவீர் பகைத்து;
அடிஅடி என்றெனை அடிப்பீர் சினந்து;
ஓயாது எனக்கு நும்படை யெடுப்பு."

19. ஒருநாளும் இல்லாத ஒருவ ஞக,
கருவி லிருந்துநேர் கல்லறை சுமக்க.
20. எனக்குள நாள்கள் சிலவே, விடுவீர்;
எட்டி நிற்பீர், சற்றுநான் மகிழ்வேன்,
21. திரும்பி வாராத் திசைநான் செல்லுமுன்,
இருண்டு கறுத்த இடமது போகுமுன்;
22. ஒரேஎ இருள்அடைந்து ஒழுங்கும் இன்றிக்
கப்பிய வருத்தம் கவிந்து சூழ
இருட்டெனப் பளிச்சிடும் இடமது தானே.''

---

20ஆ. JB. ''அப்பால் திருப்பிக் கொள்வீர் முகத்தை,
சற்றே களிப்புற விடுவீர் என்னே.''

22. இருட்டெனப் பளிச்சிடும்—AB. ஆனால் RSV, (JB)—''ஒளியும் இருளெனத் தோன்றுமவ் விடமே/ஒளியும் இருளா யுள்ள இடமதே.''

கப்பிய . . . சூழ—மூலத்தில் சொற் செட்டாக உள்ளது.

# 11

# வழவழ என்பது வாயடைத்திடுமோ?: சோப்பார்

**11:** [மற்றவர்களின் வாயை அடைப்பதற்காக யோவு தாம் மாசற்றவர்போல் பேசுகிறார் என்று சோப்பார் சாடுகின்றார்; கடவுளே பேசினால் யோவின் பொய் அம்பலமாகும் என்கின்றார் (1–6). கடவுளுடைய பெருமையை மனிதன் தன் அறிவுக்குள் அடக்க முடியாது (7–12). ஆகையால் யோவு கடவுளை இரந்து மன்றாடினால் மன்னிப்புப் பெற்று மீண்டும் அவரது அடியாராகலாம், வீண் அச்சம் ஒன்றும் இராது (13–19). தீயவர்களுக்கு நம்பிக்கையோ புகலோ இல்லை (20) என அறைகின்றார் சோப்பார்.]

*11:1. அதற்கு நாமாஊர் சோப்பார் சொன்னார்:*

*2. "உளறல் இதற்கு மறுமொழி இல்லையோ?*
*சளசள வென்றால் சரியாய் விடுமோ?*
*3. வழவழ வென்பது வாய்அடைத் திடுமோ?*
*கிண்டல்செய் வீர்கள், கண்டிப்பார் இலையோ?*
*4. 'எனது பேச்சு தூயது' என் றீர்கள்;*
*'கண்டீர் கறையிலேன்' என்றுசொன் னீர்கள்.*
*5. கடவுள் அவரே பேசமாட் டாரா,*
*வாய்திறந்து உங்கட்கு எதிர்மொழி யாரா!*

---

*2. சளசள*—*மூலம்*, man of lips; AB, the glib one.

*3. வழவழ*—AB, babbling; *மூலம்*, idle talk and boasting.

JB: *"உங்கள் பேச்சைக் கேட்ட பேர்கள்*
*ஊமையாய் விடுவர்என்று எண்ணமோ உங்கட்கு?*
*நகைப்பீர்கள் போலும் எதிர்ப்பார்கள் இலைஎன."*

*4. பேச்சு*—*மூலச்சொல் கொள்கை, பேச்சு இரண்டையும் குறிக்கும்.* Knox, *பேச்சு;* AB, *கொள்கை. யோவினது கொள்கை, தாம் குற்றம் அற்றவர் ஆகையால் கடவுள் இவ்வாறு தம்மைத் தண்டிப்பது அநியாயம் என்பதாம். பேச்சு என்று வைத்துக் கொண்டால் இதன் கடுமை சற்றுத் தணியும்.*

*இரண்டாவது அடி* AB, *"உங்கள் பார்வைக்கே நீங்கள் தூயவர்." இதற்கு அது மூலத்தில் தன்மை இடத்திலுள்ளதை முன்னிலை எழுவாயாக மாற்றியுள்ளது. இதற்கு அது கூறும் காரணம் பொருத்தமாகப் படவில்லை. ஏனெனில், யோவு தமது மாசின்மை கடவுளுக்குத் தெரியும் என்று முன்னரே கூறியிருக்கிறார் (10:7 காண்க).*

RSV, *"'குற்றமற்றதென் கொள்கை, கடவுளின்*
*பார்வையில் களங்கமிலேன்' என் றீர்கள்."*

6. மறைந்திருப் பதனையும் அறைந்திடு வாரே,
இருபுறம் அறியும் செயல்திறம் உடையார்.
அறிக,நும் தீமையும் சிறிதுஅவர் மறந்தார்.
7. கடவுளின் ஆழம் காண முடியுமா?
பரமனின் எல்லையைப் பார்க்க இயலுமா?
8. உச்சி வான், உங்களால் யாது முடியும்?
பாத லத்தினும் ஆழம், அறிவதுஎன்?
9. நிலத்தினும் நீளம் ஆம்அதன் அளவு
கடலின் பரப்பினைக் காட்டிலும் அகலம்.
10. அவர்—கடந்து செல்லினும் கட்டிப் போடினும்
மன்றம் கூட்டினும் மறிக்கவல் லான்எவன்?
11. பொய்யரை அறிவார்; தீமையைக்
காண்பவர் அதனைக் கருதாது விடுவரே?
12. மடையன் அறிவு பெறுவான், காட்டுக்
கழுதை பழகிய குட்டியாய்ப் பிறந்தால்.
13. உங்கள் உள்ளம் ஒழுங்குற வேண்டின்,
அவர்பால் கைஎடுத்து அமைய வேண்டின்,

---

6. முதலடி AB-யைப் பின்பற்றியது. RSV, ''ஞான மறைபொருள் எடுத்துரை யாரரா?'' இரண்டாமடி AB-யின் விளக்கக் குறிப்பைப் பின்பற்றிச் செய்தது. RSV 'manifold' (in understanding) என்று மொழிபெயர்த்தது தவறு. 'double, duplex' என்பதே பொருள் என்று AB குறிப்பிடுகிறது; இந்த அடியில் முன்பு நாம் ஏற்கெனவே கண்டுள்ள அருஞ்சொல் tûshiyyāh என்பதும் வருகிறது. இதை விளக்கவே முதலடியில் ஞானம் என்று அனுவசியமாகச் சேர்த்தார்கள் எடுத்து எழுதியவர்கள் என்பது AB குறிப்பு. tûshiyyāh என்பது திறமான செயல், நல்லறிவு என்றெல்லாம் பொருள்படும் என முன்னரே கண்டோம். அதனுல்தான் "For there are two sides to wisdom'' என்ற AB மொழிபெயர்ப்பை விட்டுவிட்டு ''இருபுறம் அறியும் செயல்திறம் உடையார்'' என்று ஆக்கியுள்ளேன்.

7,8. கடவுளின் அடியும் முடியும் காண முடியாது.

10. கடந்து செல்—மூலத்தில் உள்ளபடி; AB, overlook, பொருட்படுத்தாது போயினும் என்று கொள்க.

கட்டிப்போடினும்—நம்மை என்பது தொக்கிநிற்பது.

மன்றம் கூட்டினும்—குற்றவாளியைத் தண்டிப்பதற்கு.

11. தீமையை . . . விடுவரே?—மூலத்தில் கேள்வி வடிவில் இல்லை என்று AB குறிக்கிறது. 'விடுவரே' என்பதும் கேள்வியாகக் காதுக்குத் தோன்றுது இக்காலத்தில். ஆனுல் பொருள் கேள்விதான்.

12. AB-யின் விளக்கத்தைப் பின்பற்றிய மொழிபெயர்ப்பு. ''உங்கள் மண்டையில் எங்கே ஏறப்போகிறது?'' என்ற கருத்துப்பட வந்த பழமொழி போலும்.

13. AB மொழிபெயர்ப்பு இது.

RSV: ''உங்கள் உள்ளம் ஒழுங்குற வேண்டின்
கையெடுப் பீர்களே கடவுளை நோக்கி.''

14. கையில் கறைஉண் டாயின் நீக்குக;
வேண்டாம் உங்கள் வீட்டில் தீமை.
15. அப்போது மாசறு முகத்தொடு நிமிரலாம்,
அசையா திருக்கலாம் அஞ்சாது நீங்கள்.
16. உங்கள் துயரம் மறந்து போகும்,
நினைக்கினும் வடிந்த வெள்ளம் போன்மே.
17. வாழ்வு—நண்பகல் தனைவிட ஒண்மையாய் ஓங்கும்,
நள்ளிருள் காலைப் பொழுதாய் மாறும்.
18. உள்ளமும் நம்பும், உறுதியும் இருக்கும்;
சுற்றிலும் நோக்கிக் கவலாது சாய்வீர்கள்.
19. கால்நீட்டிப் படுப்பீர்கள், கலைக்கமாட் டார்யாரும்;
நாடுவார் பலபேர்கள் தங்களின் கண்ணோட்டம்.
20. தீயவர் கண்களோ மங்கிப் போகும்;
போய்அவர் ஒளியப் புகல்இலா தாகும்;
ஆயநம் பிக்கை ஆவி பிரிவதே.''

---

14. வீட்டில்—கூடாரம் (AB); கூடாரங்கள் (RSV).

15. அசையாது—AB, steadfast; மூலம், ''வார்க்கப்பட்டு'' (=வார்த்த உலோகம் இறுகி உறுதியாய் இருப்பது போல).

யோவு நீங்கள் உங்கள் கையின் கறையை நீக்கி அகத்தின் தீமையை அப்புறப் படுத்தி இறைவன்பால் திரும்பி வந்தால் அப்போது நீங்கள் மாசில்லாத முகத்தை நிமிர்த்தி எதிராளிக்கு அசையாமல் அஞ்சாமல் பேசலாம், இப்போது அன்று— என்பது சோப்பாரின் இடிப்பு.

17. வாழ்வு—மூலத்திலுள்ள சொல்லுக்கு உறுதி, தளராமை, பிழைத்துக் கொள்ளுதல், வயது சென்ற நிலையிலும் உடல்நலமும் உரமும் குன்றுமை ஆகிய பொருள்களெல்லாம் சேரும் என்கிறது AB.

18,19—3:26இல் யோவு கவலைப்பட்டுக் கூறியதற்குப் பதில் இது.

18அ. AB, you would trust because there is hope.
RSV, you will have confidence because there is hope.

19அ. கால் நீட்டிப் படுப்பீர்கள்—AB says the verb used in the original is properly used of quadrupeds but applied figuratively of human beings. Hence the Tamil expression here. மாடுகள் பயமின்றிப் ''படுகாடு கிடப்ப''து போல. (இசை. 17:2; செப்போ. 3:13 காண்க).

19ஆ. மூலம், ''உங்கள் முகம் பலர் இன்முகம் ஆக்குவர்.''

20ஆ. RSV. (JB) ''தப்பும் வழி ஒன்று அற்றவ ராவர்.''
AB: ''புகலிடம் அவர்களுக்கு உதவாதாகும்.''

# 12

# கடவுள் கையின் காரியம் இது: யோவு

**12:** [நண்பர்களின் அறிவை யோவு நையாண்டியாகப் புகழ்கின்றார் (1,2). அவர்களுக்குத் தாம் இளைத்தவர் அல்லர் என்கின்றார் (3). தமது துயரத்தையும் தீயோர்களின் நல்வாழ்வையும் ஒப்பு நோக்குகின்றார் (4–6). கடவுள் ஆற்றலுள்ளவர், உலகத்தில் காணும் கட்டுப்பாடுகள் அவர் விதித்து ஆண்டு நடத்துபவையே என்பதை நிலத்தில் வாழ்வனவும் நீரில் வாழ்வனவும் வானில் பறப்பனவுமாகிய உயிரினங்களெல்லாம் அறியும் (7–25).]

*12:1. அதற்கு யோவு உரைத்த மறுமொழி:*

*2. ''உண்மை, உண்மை, நீங்கள்தாம் மக்கள்;*
*நீங்கள் இறந்தால் அறிவும் இறந்திடும்!*
*3. உங்களைப் போல்அறி வெனக்கும் உண்டு;*
*தாழ்ந்தவன் அல்லேன் நான்உங் களுக்கு;*
*யாரே அறியார் இவையெல் லாமே?*
*4. அடுத்தவர்க்கு ஏளனம் ஆகிப் போனேன்,*
*கடவுள் கேட்ப அவரை அழைத்தவன்,*
*நீதி நிறைந்தவன் கேலி யானேன்.*

---

2. *மக்கள்*—மன்னருக்கும் குருக்களுக்கும் அடுத்தபடியான வேளாண் மரபினரைக் குறிக்கும் சொல் மூலத்தில் உள்ளது என்பது AB குறிப்பு. அதாவது நற்குடிப் பிறப்பும் செல்வமும் கல்வியும் அமைந்தவர்கள். ''மக்கள் தாமே ஆறறி வினரே'' என்பதனோடும் இச்சொல் இயைந்து போகிறது; அடுத்த அடியால் இது விளங்கும்.

*நீங்கள் இறந்தால்*—JB; ''உங்களோடே'', AB.

*அறிவு*—AB, RSV, "Wisdom." But AB points out in its note on v. 13 that the word 'wise' (hākām) had originally the sence "intelligent, shrewd, crafty", without ethical connotation, as illustrated by its application to Jonadab in II Sam. 13:3 ("And Jonadab was a very crafty man."—RSV).

4. *அடுத்தவர்க்கு*—AB, neighbour; RSV, JB, *நண்பர்க்கு.*

JB—''*கடவுளை நோக்கிக் கதறி அழுது*
*செவிசாய்ப் பார்என எதிர்பார்த்தால் அவன்*
*கேலிக் கூத்தாய் ஆனேன் நண்பர்க்கு;*
*குற்றம் அற்ற நேர்மை யாளன்*
*பெறுவதெல்லாம் ஏளனம் ஒன்றே.*''

*தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தெரியும் என்பது யோவின் வாதம்.*

5. இடரினை வசதி உடையவர் இகழ்வார்,
அடிச றுக்குவார்க்கு அதுதகும் என்பார்.
6. கொள்ளையர் வீட்டார் கொழிப்பார் செல்வம்,
கடவுளைச் சினந்தெழச் செய்வார் வாழ்வார்,
அவர்தம் கைக்குள் அடங்கிய படியே!
7. விலங்கினம் வினவுக, படித்துக் கொடுக்கும்;
விண்ணின் புள்ளினம் அவையும் சொல்லும்.
8. மண்ணெடு பேசுக, கற்றுக் கொடுக்கும்;
ஆழியின் மீன்கள் அவையும் சொல்லும்.
9. எவைதாம் அறியா இவற்றை யெல்லாம்,
கடவுள் கையின் காரியம் இதுவென?
10. உயிர்வாழ் வனவெலாம் அவர்கை யினவே;
ஊனவர் அனைவரின் மூச்சும்அவ் வாறே.
11. நாவுக்கு உறைக்கும் உணவு;
காதுக்கு உறைக்கும் கட்டுரை; அன்றே?

---

5. ஆனல் JB—''இடுக்கண் இழைத்தால் போதாது, இழிவு
படுத்தவும் வேண்டும்; தள்ளாடுகின்றன்,
அடித்து நொறுக்க இதுவே சமயம்
என்கின் றார்கள் வசதியோ டிருப்பார்.''

6. அவர் தம் கைக்குள்—AB notes this line may be rendered "whom God brings in his hand" or "To him who brings God in his hand." Also observes Buttenwieser's "they whose god is their fist" and Moffatt's "Who make a god of their own power" seem the best interpretations.

''கடவுளுடைய கையில் தாம் அடங்கியபடி,'' ''தம்முடைய கையில் அவர் (கடவுள்) அடங்கியபடி'' என இரு வகையாகவும் பொருள்கொள்ளலாம்.

JB—''கொள்ளைக் காரர் கூடா ரங்களோ
தொல்லை யின்றிச் சுகமா யுள்ளன;
கடவுளை எதிர்த்துக் காழ்ப்புடன் பேசிக்
கைவன் மையையே கடவுள் ஆக்குவார்
பத்திர மாக வாழ்கின் றார்கள்.''

7. JB—''இன்னும் நீங்கள் அறிய விரும்பின்
ஆட்டையும் மாட்டையும் கேட்டுப் பார்மின்,
வானின் பறவைகள் தம்மையும் கேள்மின்.''

8. மண்ணெடு பேசுக—AB. மண் என்பதை இங்கு பாதாளலோகம் என்று விளக்குகிறது AB.

RSV, ''நிலத்தின் செடிகொடி படித்துக் கொடுக்கும்."
JB, ''நிலத்தில் நெளிபவை படித்துக் கொடுக்கும்,
கடல்வாழ் மீனினம் எல்லாம் கழறிடும்."

11. பழமொழி போலும்; 34:3இலும் வருவது காண்க.

உறைக்கும்—மூலம், சுவைக்கும். சுவைத்தல் என்பது எபிரேயத்தில் உணர்தல் எனவும் பொருள் படும்படி வழங்கும். எனவே, நாவு சுவைக்கும் உணவு, காது சுவைக்கும் கட்டுரை எனவும் பெயர்க்கலாம். ''உணவின் வேற்றுமை நா உணர்வது போல் உரையின் வேற்றுமை செவி உணரும்" என்பது (JB) விளக்கம்.

12. முதியோ ரிடத்தில் மதிநிறைந் ததுவோ,
பழுத்த வயதிடம் பகுத்தறி வுளதோ?
13. அவரிடம் அறிவோடு ஆற்றலும் உளதே;
பகுத்தறி வதனோடு ஆய்தலும் உளதே.
14. இடித்திடு வார்எனில் எடுத்திடல் இல்லை;
அடைத்திடு வார்எனில் விடுத்திடல் இல்லை.
15. மழையினை விடார்எனின் வறட்சி மேவும்,
விடுவா ராயின் வெள்ளக் காடு.
16. ஆற்றலும் செயலும் அவரோ டுள்ளவை;
பேதையும் புரட்டனும் அவர்பா லவரே.
17. மண்ணக அமைச்சரை மடைய ராக்குவார்,
நடுவர் தமைஅவர் கிறுக்க ராக்குவார்.
18. அரசரின் அரைஅணிக் கச்சையை அவிழ்ப்பார்,
அவர்தம் இடுப்பினில் கந்தையைக் கட்டுவார்.

---

*12,13.* "நண்பர்களே, நீங்கள் வயது முதிர்ந்தவர்கள்தாம், மதி நிறைந்தவர்கள் தாம்; ஆனால் கடவுளிடம் மதிநுட்பம் மட்டும் அன்று, ஆற்றலும் உண்டே; அவர் என்னென்ன எப்படி எப்படிச் செய்யலாம் என்ற திறம் உடையவர் அன்றோ? அவர் ஒன்றை அழித்துவிட்டால் யார் அதை மீள உருவாக்க முடியும்? ஆகவே, எல்லாம் வல்ல அவர் தீமை புரிபவர்களை இல்லாதபடி ஆக்க முடியாதா? அவர்களா லன்றோ எனக்கு இந்தத் துன்பம்?" என்று யோவு அங்கலாய்ப்பதாகத் தெரிகிறது. கடவுளின் உரையாக வரும் 40:10–14 இதற்கு விடை போலும்.

*12,13* கண்ணிகளின் மொழிபெயர்ப்பு AB குறிப்பு விளக்கத்தைப் பின் பற்றியதாகும்.

*14.* எடுத்திடல்—(மீண்டும்) எழுப்புதல்.
விடுத்திடல்—(சிறை) மீட்டல்.

*15.* வெள்ளக் காடு—RSV, "overwhelm the land"; AB, "engulf the earth." "பூமி" சொல்லாமலே விளங்கும் என விடப்பட்டது.

JB, "வறட்சியா? பெய்யாது மறித்தவர் அவரே.
மண்ணகம் பாழ்பட வந்ததோ வெள்ளக்
காடாய்? அவிழ்த்து விட்டவர் அவரே."

*16.* செயல்—AB, "victory"; RSV, "wisdom." ஆனால் இங்குள்ள சொல் ஏற்கெனவே (5:12) நாம் கண்ட tûshiyyāh தான்.

JB, "வலிமை யாளர், வண்திறம் உடையவர்;
ஏமாற்று வானும் ஏமாறு வானும்
இருவரும் ஒன்றுபோல் அவருக்கு அடிமையே."

*17.* அமைச்சர்—மன்னருக்கு ஆலோசனை கூறும் மந்திரி.
மடையர்—கிரேக்கத்தை ஒட்டிய AB மொழிபெயர்ப்பு. RSV, "go stripped."

19. பூசாரி வெறுமையாய்ப் போகச் செய்குவார்,
நிலைபெற் றவர்களை நீக்கி வீழ்த்துவார்.
20. நம்பத் தக்கவர் நாவினைப் பறிப்பார்,
முதியோர் பகுத்துணர் மதியினைக் கவர்வார்.
21. அரசிளங் குமரர்மேல் இழிவினைப் பொழிவார்,
மேலோர் அரைக்கசை கழலப் பண்ணுவார்.
22. இருளின் மறைபொருள் இலங்கச் செய்குவார்,
ஒளியினுக்கு அடர்ந்த இருளினைக் கொணர்வார்.
23. நாட்டினை எழுப்புவார், மாற்றி அழிப்பார்,
ஆட்களைப் பெருக்குவார், அயலிடம் பெயர்ப்பார்.
24. நாட்டுத் தலைவர்கள் மதியினைப் பறிப்பார்,
தடம்இலாப் பாழ்நிலத்து அலைய விடுவார்;
25. விளக்கிலாது இருட்டினில் தடவித் திரிவர்கள்,
விடாக்குடி மடையர்போல் தள்ளா டுவர்களே.

---

19. JB, "பூசா ரிகளை வெறுங்கால் ஊன்றி
நடக்க வைப்பவர் தாமும் அவரே."

20. நம்பத்தக்கவர்—மன்னர்களுக்கு வேண்டியபோதெல்லாம் தக்க ஆலோசனை சொல்லவேண்டிய மதி உடையவர்கள். JB, "நாவலர் தம்மை ஊமையர் ஆக்குவார்."

22. JB, "இருட்டினை ஆழிகள் இழக்கும் அவரால்,
இருண்ட நிழல் ஒளிபெறும் அவரால்."

23. JB, "நாட்டினை எழுப்புவார் அதன்பின் ஒடுக்குவார்
மக்களைப் பெருக்குவார் அதன்பின் அழிப்பார்."

24. பாழ்நிலம்—மூலச்சொல் குழப்பத்தை அல்லது பாலைநிலத்தைக் குறிக்கலாம் (AB). பாழ்நிலம் என்பதற்குக் குழப்பமான மனநிலை என்ற விளக்கமும் பொருந்தும்.

# 13

# என்னைப் பகைவனாய் எண்ணுவதேன்?: யோவு

13: [இவையெல்லாம் தம்முடைய நண்பர்களுக்குத் தெரிவது போலத் தமக்கும் தெரியும் என்று இடித்துரைக்கின்றார் யோவு (1,2). அவர்கள் கடவுளைக் காப்பாற்றுவதாக எண்ணிக்கொண்டு பொய் பேசுகிறார்கள், அவர்களுடைய வாதங்கள் அத்தனையும் உருப்படாதவை என்கின்றார் யோவு (3–12). கடவுளிடம் நேரடியாக முறையிட்டுத் தமது மாசின்மையை நிலைநாட்ட விரும்புகின்றார்; தமது வழக்கினைக் கடவுள் நியாயமாகக் கேட்க வேண்டும், தம்மை அவர் வருத்துவதை நிறுத்தவேண்டும், குற்றச்சாட்டுகள் என்னென்னவென்று தமக்குச் சொல்ல வேண்டும் என்று யோவு கூறுகின்றார் (13–23). ஆனால் கடவுளோ முன்போலவே துன்புறுத்துகின்றாரே என்று அவர் வருந்துகின்றார் (24–27).]

13:1. "ஈதெலாம் எனது கண்ணால் கண்டவை,
காதால் கேட்டுக் கருதி உணர்ந்தவை.
2. யாதுஅறி வீர்கள் யானும் அறிவேன்;
தாழ்ந்தவன் அல்லேன் நான்உங் களுக்கு.
3. நான்—பரம னோடுஉரை யாட விரும்பினேன்,
கடவு ளோடுஎதிர் வாதம் புரியவே.
4. நீங்கள்—பொய்யினால் பூசி மெழுகுகின் றீர்கள்,
போலி மருத்துவர் நீங்களெல் லோருமே.
5. எதுவும் பேசா திருங்களேன் ஊமையாய்!
அதுதான் உங்கட்கு அமைந்தபே ரறிவாம்.

---

1. ஈதெலாம்—MT, எல்லாம்; LXX இவை. மூலம் "ஈதெலாம்" என்று இருந்திருக்கலாம் (AB). AB, RSV—"ஈதெலாம்."

2. தாழ்ந்தவன் . . . உங்களுக்கு—12:3 காண்க.

3. எவ்வளவுதான் தெரிந்தாலும் இன்னும் அறியவேண்டுவன உள என்பது குறிப்பு.

4. பொய்யினால் . . . மெழுகுகின்றீர்கள்—AB, "daubers of deceit;" RSV, "whitewash with lies". போலி மருத்துவர்கள் நோயைப் போக்குவதற்குப் பதிலாக நோயாளிக்கு மை தீட்டுவார்களாம், உடல் நலமாக இருப்பதுபோன்று தோன்றும்படியாக (AB).

5. பழ. 17:28 காண்க.

6. இனிக்கே ளுங்கள்என் வழக்கினே, எனது
நாமுறை யிடுவதை நன்குகே ளுங்கள்.
7. கடவுளுக் காகவா கள்ளம் பேசுதல்?
அவருக் காகவா அறைவீர்கள் வஞ்சகம்?
8. உங்கட்கு அவர்பால் ஓர வாரமோ,
கடவுள் சார்பாய் வாதிடு வீர்களே?
9. நலம தாகுமோ உளம்அவர் ஆய்கையில்?
மனிதர்போல் அவரைஏ மாற்ற முடியுமோ?
10. கடுமையாய் உங்களேக் கடிந்து கொள்வார்
கள்ள ஓர வஞ்சனே புரிந்தால்.
11. அவர்தம் மாட்சிக்கு அஞ்சமாட் டீர்களோ?
தாங்கள் அவர்க்கு நடுங்கமாட் டீர்களோ?
12. உங்கள் முதுமொழி சாம்பல் பழமொழி;
உங்கள் எதிர்மொழி களிமண் எதிர்மொழி.
13. பேசல் வேண்டாம், பேசுவேன் இனிநான்;
யாது நேரினும் அதனுல் எனக்கே.

---

6. முறையிடு—மூலத்தில் உள்ள சொல்லைப்போன்று சட்டமன்ற வழக்குச் சொல்.

7. JB—''கள்ளம் ஒலிக்கும் மொழிகளைப் பேசிச்
சுற்றி வளைத்து மழுப்பியோ நீங்கள்
கடவுள் சார்பாய் வழக்காடு வீர்கள்?''

8. ஓரவாரமோ—பாரபட்சமோ, "partiality" (AB, RSV); மூலம் ''அண்ணுருவீர்களோ'', கைம்மாறு கருதி நடுவுநிலை தவறிக் கண்ணேட்டம் புரிதல் என்பது அதன் பொருளாம்.

JB—''பரமனுக் காகப் பரிந்து பேச
நடுவுநிலை தவறியோ வாதிடு வீர்கள்?''

9. உளம்—''உங்கள் உளம்'' எனக் கொள்க; மூலம், ''உங்களை.''

JB—''அவரே உங்களை ஆராய்ந்து பார்க்கின்
ஆகுமோ நன்மையாய் உங்களுக்கு அதுதான்;
மாந்தர்போல் அவரும் மயங்கி விடுவரோ?''

10. (கள்ள) ஓரவஞ்சனே புரிந்தால்—மூலத்தில், மேலே (8) ''ஓரவாரம்'' என்று குறிப்பிட்ட அதே சொல் இங்கும் வந்தது.

11. மாட்சி—RSV. ஆனுல் AB, ''அவர் பயம் உங்களை அமுக்கமாட்டாதோ?''
அடுத்த அடி, RSV, AB, ''உங்கள்மேல் அவர்தம் நடுக்கம் வீழாதோ?''

12. உங்கள் வாதங்கள் வரன்முறையான பழமொழிகளை அடுக்கினுலும் அவை இங்கு பொருந்தா என்பது கருத்து.
சாம்பல் பழமொழி—செத்த பழமொழி என்பது போல.

13. யாது நேரினும்—AB, RSV, வருவது வரட்டும்.
இனி (நான்)—இசை நிரப்பச் சேர்த்தது; பொருள் மாருது.

14. என்—ஊனினை என்றன் பல்லிடைக் கடித்தேன்,
என்—உயிரினை என்றன் கையினில் பிடித்தேன்.
15. அவர்எனைக் கொல்லினும் கொல்லுக, நடுங்கேன்;
என்நடை மெய்என அவர்முன் நாட்டுவேன்.
16. இதுவே எனக்கு வீடுபேறு ஆகலாம்;
பக்தி யிலான்அவர் முகத்தெதிர் வருவனு?
17. கேட்க வேண்டும் எனது பேச்சை;
ஏற்ற வேண்டும் செவியில்என் கூற்றை.
18. என்வழக்கு எடுத்துஇனி வைப்பேன், காண்க;
விடுதலைத் தீர்ப்புநான் அடைதலும் உறுதி.

19. யார்அவர் என்னெடு வழக்கிட நிற்பவர்?
பேசநா அற்றுநான் சாகவும் சித்தம்.
20. இரண்டு செயல்கள் மட்டும் வேண்டாம்;
உமது முகத்துக்கு ஒளியா திருப்பேன்.

---

14. *உயிர்*—RSV, JB; *மூலம் ''குரல்வளை''*. "It is best understood as a symbolic act representing the jeopardy of one's life as sanction in an oath" (AB).

15. *நடுங்கேன்*—"will not quaver" (AB). KJ rendering: "Though he slay me, yet will I trust in him" has no basis here, says AB. Quavering *(நடுங்கல்)* may be in expectation of hope being fulfilled or in anticipation of punishment. At the risk of death, which is what he hopes for, or expects anyhow, Job will defend, argue, plead his innocence before God. His concern is only to be vindicated before God and man (cf. AB). Dahood, *''வெல்லுவார் என்னைக் கொல்லினும் தளரேன்.''*

16. *வருவனு—தெளிவுக்காக எதிர்மறை வினு ஆக்கியது. தாம் பக்தியுள்ளவர் என்பது கருத்து.*

17. *ஏற்ற . . . கூற்றை*—AB, "My declaration be in your ears." The noun rendered 'declaration' is not found elsewhere in OT, although the verb is used in 15:17, 32:6, 10, 17; 36:2 and Ps. 18:3 (cf. AB).

18. *எடுத்து வை*—AB, 'set forth.' The Heb. word is usually applied to the arranging of objects (as in Gen. 22:9) and frequently of military array (AB).

*உறுதி*—AB, RSV, "I know."

19. *யார் . . . நிற்பவர்*—may be the opening formula of a plaintiff (AB) *(காண்க இசை. 50:8)*.

*பேச . . . சித்தம்—குற்றவாளி என்று தீர்க்கப்பட்டால்.*

20. *முதலடியில் ''எனக்குச் செய்தல்'' என்பதும், இரண்டாமடி முதலில் ''அப்போது'' என்பதும் இன்றியமையாதவை அல்ல என்று விடப்பட்டன.* RSV, *''இரண்டு வரம் எனக்கு அருளல் வேண்டும்.''*

21. விடுவீர் என்னை அமுக்கி நெருக்குதல்;
வேண்டாம் உமது கிலிஎனை உருக்குதல்.
22. அதன்பின் கேட்பீர், பதில்யான் சொல்வேன்;
இல்லை, நான் பேசுவேன், நீர்விடை யிறுப்பீர்.
23. எத்தனை குற்றம் தீமைகள் செய்தேன்?
என்பொல் லாப்பும் பாவமும் சொல்வீர்.
24. உந்தம் முகத்தினை ஒளிப்பது ஏனோ?
என்னைப் பகைவனாய் எண்ணுவ தேனோ?
25. படுத்து வீரோ பறந்துஅலை சருகினை?
விரட்டு வீரோ கருகிய சாவியை?
26. எனக்குநீர் கசந்தவை எழுதிவைக் கின்றீர்;
இளமையின் தீமைஎன் உடைமைக ளாக்குவீர்.
27. கட்டை விலங்கில்என் கால்களை மாட்டுவீர்,
உள்ளங் கால்களில் சின்னம் பொறிப்பீர்,
செல்வேன் அடித்தடம் எல்லாம் தெரியவே.
[28. அடுத்த அதிகாரத்தில் காண்க.]

---

21. அமுக்கி நெருக்குதல்—"pressure" (AB). RSV, "உமது கையினை அப்பால் எடுப்பீர்."

25. படுத்துவீரோ—AB, harry; Heb. verb carries a connotation of ruthless violence. எதிர்க்கும் ஆற்றல் இம்மியும் இல்லாத ஏழையிடமா கடவுள் தம்முடைய தாங்கொணு ஆற்றலைக் காட்ட வேண்டும் என்று மறுகுகிறார் யோவு.

26. எனக்கு நீர் கசந்தவை எழுதிவைக்கின்றீர்—எண். 5:23,24 காண்க. இளமைத் தவறுகளை யோவு இங்கு ஒப்புக்கொள்கிறார் என்றும், அந்தப் பிழைகளுக்கா இந்தத் தண்டனை என்று மறுகி அது நியாயம் அன்று என்று விடுகிறார் என்றுமே பொதுவாக இந்த அடிகளுக்குப் பொருள் கொள்வர். கசந்தவை என்பதற்கு வன்செயல்கள் என்று பொருள்கொள்வாரும் உளர். "என் கணக்கில் என் பற்றாய் எழுதுவீர் வன் செயல்" (Dahood). [காண்க AB குறிப்பு.]

27. கட்டை விலங்கு—RSV, stocks; AB, fetters; but AB concedes that the Aramaic form of the word occurs in the Talmud with the meaning of "stocks."

இரண்டாவது, மூன்றாவது அடிகள் முன்பின்னாக மாறியுள்ளது AB மொழி பெயர்ப்பில் உள்ளதுபோல.

அடிமை தப்பி ஓடிப்போனால் கண்டுபிடிப்பதற்கு எளிதாக இருக்கும் பொருட்டு அவன் உடம்பில் அறிகுறிகள் அமைத்திடும் வழக்கம் இங்கு குறிக்கப்படுகிறது.

28. இந்தக் கண்ணி இங்கு பொருத்தமாக இல்லை. 14:2-க்கும், 3-க்கும் இடையே பொருந்தும் என்று அங்கே அதனை AB அமைத்துள்ளது. "உளுத்து அழியும் பொருள்போல், அந்துப்பூச்சி அரித்த ஆடைபோல் இறும் அவன் வாழ்க்கை" என்பது அக்கண்ணி. எனவே, "அவன்" என்பதை "மனிதன்" என்று RSV மாற்றி இங்கு வைத்துள்ளது; JB "என் வாழ்க்கை" என்று மாற்றி இவண் அமைத்துள்ளது. மனிதனுடைய நிலையாமையை வருணிக்கும் 14:1,2 கண்ணிகளோடு இது இசையும் என்பதால் AB இதனை அங்கு பெயர்த்துள்ளது.

# 14

# இறந்த மனிதன் இனி வாழ்வானா?: யோவு

14: [வாழ்நாள் சில, வருத்தமோ பல; ஆகவே மனிதனைக் கடவுள் சற்று ஓய்வாயிருக்க விட்டால் என்ன என்கின்றார் யோவு (1,2; 13:28; 14:3–6).
13: வெட்டிவிட்ட மரம் தழைப்பதுபோல் மனிதன் இறந்து பட்டபின் மீண்டும் வாழ்வானா என்கின்றார் (7–12). இறைவனை நோக்கிப் பேசுவாராகி, தமக்கு
28 மறுமையில் விடுதலை உண்டெனில் அதுவரை பொறுமையாகக் காத்திருக்கலாமே என்கின்றார் (13–15). ஆனால் நடக்கப்போவதெல்லாம் அழிந்து மறைந்துபோவது ஒன்றே என்று நினைத்து மீண்டும் அங்கலாய்க்கின்றார் ' (16–22).]

*14:1.* *“பெண்ணின் வயிற்றுப் பிறந்த மனிதன்*
*வாழ்நாள் சிலவே வருத்தமோ நிறைய.*
*2.* *மலர்என வருவான் வாடிப் போவான்,*
*நிழல்என ஓடுவான் நிலைஒன்று இல்லான்.*
*13:28.* *இற்றுப் போவான் செற்றுஅழி வதுபோல்*
*அந்துப் பூச்சி அரித்த ஆடைபோல்.*
*14:3.* *இத்தகை யோனையோ ஏற்று நோக்குவீர்?*
*என்னை நும்மொடும் தீர்ப்பிடக் கொணர்வீர்?*
*4.* *துப்புர வற்றதால் துப்புர வுள்ளதை*
*ஆக்கவல் லார்யார்? ஆரும் இல்லை.*

---

*1. வருத்தம்*—AB, strife; RSV, trouble; *3:17,26 கண்ணிகளில் முறையே ஆட்டம், கலக்கம் என மொழிபெயர்த்த அதே சொல்.*

*2. வருவான்—“(மலரென) மலர்ந்து (வாடிப்போவான்)” என்றும் மொழி பெயர்க்கலாம்* (Dahood).

*13:28. செற்று அழிவது—மூலத்திலுள்ள வினைச்சொல் (பழ. 12:4; 14:30; அபா. 3:16 ஆகிய இடங்களில்) எலும்பு கெட்டு மட்குவதையும், (இசை. 40:20இல்) மரக் கட்டை உளுத்துப்போவதையும் குறிக்கப் பயன்பட்டுள்ளது; ஓசே. 5:12இல் அந்துப் பூச்சிக்கு இணையான ஒன்றைக் குறித்து நிற்கிறது. “அழுகிச் சிதையும் பொருள் என” என்பது* AB *மொழிபெயர்ப்பு.*

*4. இந்தக் கண்ணிக்கு இங்கு வேலை இல்லை என்பது* AB *குறிப்பு. யாரோ தமது கருத்தாக ‘ஏட்டு’ ஓரத்தில் குறித்திருந்ததை எடுத்து எழுதியவர் பாடத்தோடு சேர்த்துவிட்டார் என்பர் ஆராய்ச்சியாளர் சிலர். “ஆரும் இல்லை” என்னும் இரண்டே சொற்கள்தாம் இந்தக் கண்ணியின் இரண்டாவது அடியாக உள்ளது.*

5. அளந்து விட்டது அவனுடை ஆயுள்,
அவன்தன் திங்கட் கணக்குநும் கையில்,
குறித்தீர் வரம்புஅவன் கடத்தல் ஒல்லான்.
6. பார்க்க வேண்டாம் அவனை விடுவீர்
கூலியாள் போல்அவன் தனதுநாள் மகிழ.

7. வெட்டினும் மரந்தான் பிழைத்துக் கொள்ளலாம்,
வேர்கள் முளைவிடல் விடாது தொடரலாம்.
8. மண்ணினுள் வேருக்கு வயது செல்லினும்,
கட்டை புழுதியில் பட்டுப் போகினும்,
9. தண்ணீர் வாடை பட்டதும் தளிர்க்கும்,
கன்றுபோல் கப்பும் கவரும் வெடிக்கும்.
10. மனிதனோ இறந்தான் மற்றுஇனி ஒய்ந்தான்;
மூச்சுப் போனபின் அவன்இனி எங்கே?
11. ஏரியின் வாரி வற்றிப் போனதே;
ஆறு வறண்டு காய்ந்து போனதே;
12. மனிதன் துஞ்சினன் மறிந்துஎழ மாட்டான்;
வானமே தேயும், மாந்தரோ விழியார்;
அவர்கள் துயில்துறந்து எழுவார் அல்லர்.

---

5. நும் கையில்—மூலம் ''நுமமோடு.''

6. JB—''பார்வையைத் திருப்பிக் கொள்வீர், அவனை
அவன்பாட் டுக்கு விட்டு விடுவீர்,
மனமில் லாத வேலையில் மாட்டிய
கூலியாள் போல்அவன் தனதுநாள் முடிக்கவே.''

7. ''வெட்டினும் மரத்துக்கு நம்பிக்கை உண்டு'' என்பது சொல்லுக்குச் சொல் அப்படியே மொழிபெயர்ப்பதாகும்.

8. சாகப்போகும் நிலையிலுள்ள மரங்களைத் தூர் மட்டும் நிலத்துக்குமேல் குற்றி போல் நிற்கும்படியாக வெட்டிவிட அவை மறு ஆண்டு வளர்ந்து பலன்தரத் தொடங்கும் செய்தியை யோர்தானுக்குக் கிழக்கே, சிறப்பாகத் தமஸ்கு நகரின் சுற்று வட்டாரத்தில் தாம் பார்த்ததாக வெட்ஸ்டைன் என்பவர் கூறுகின்றார்.

10. ஒய்ந்தான்—AB, "helpless;" RSV, "is laid low." யாத்திராகமம் 17:13; இசை. 14:12 ஆகிய இடங்களில் வரும் வினைச்சொல் இங்கு வந்துள்ளது; ஆனால் அங்கு அது பிறரை மெலியச் செய்தலைக் குறித்தது; இங்கு தானே மெலிதலைக் குறிக்க வந்தது (AB).

12. துஞ்சினன்—AB, RSV, ''lies down.''
தேயும்—AB, decay; RSV, are no more (இல்லையாம்).

JB (11,12): ''ஆழிகள் வற்றிப் போகலாம், ஆறுகள்
அனைத்தும் வறண்டு போகலாம், அவற்றின்
நீரெலாம் வடிந்து போகலாம்; ஆனால்
மனிதன் துஞ்சினன் மீண்டும் எழாஅன்;
அவன்துயில் துறந்து கண்விழித் தெழுமுன்
வானமே தேய்ந்து மறைந்து போகும்.''

13\. ஓ,எனைப் பாதலத்து ஒளித்துவை யீரா
உமது கோபம் போம்வரை மறைத்துப்
பின்னொரு நாளில் என்னை நினைக்கவே?
14\. இறந்த மனிதனும் இனிவாழ் வானோ?
என்போ ராட்டநா ளெல்லாம் பொறுப்பனே
எனக்கு விடுதலை எய்தும் வரைக்கும்.
15\. நீர்எனை அழைப்பீர், நான்பதில் கொடுப்பேன்;
காண விழைவீர் தமதுகைப் படைப்பினை.
16\. அப்போது என்கால் அடிச்சுவடு எண்ணீர்,
என்பா வத்தில் கண்ணுய் இரீஇர்.
17\. பையில் இட்டுஎன் பழியினை முடிவீர்,
எனது தீமையைப் பூசி மறைப்பீர்.

18\. இல்லை!—மலைகள் வீழ்ந்து தகர்ந்து நொறுங்கும்,
பாறையும் இடத்தின் மாறிப் பெயரும்,

---

*13–15. மறுமை வாழ்வுக்கு ஏங்கும் ஏக்கத்தை இங்கு காண்கிறோம்.*

*13. ''என்னை நினைக்கப் பின்னொரு நாள் குறித்து வைக்க மாட்டீரா?'' என்பது* AB, RSV, JB. *மாற்று: பின்னொரு கால்எனை நினைக்கநாள் குறித்து?*

*14. இனி வாழ்வானோ?—அப்படி வாழ்வது உண்டு எனில் இம்மைத் துன்பமெல்லாம் பொறுத்துக்கொள்ளலாமே என்கிறார் யோபு.*

*15. விழைவீர்—*RSV*, ஏங்குவீர். மூலம்: ''பசலை பூப்பீர்தம் படைப்பினுக்கு ஏங்கி.''*

*16. எண்ணீர்—*AB*; மூலம், ''எண்ணுவீர்.''*
*காண்க 31:4.*

JB: *''ஒன்று விடாமல் இப்போது என்றன்*
*காலடி அனைத்தையும் கணக்குப் பார்ப்பீர்;*
*அன்றோ நிறுத்தி விடுவீர் என்றன்*
*பாவம் குறித்து வேவு பார்ப்பதை.''*

*17. பையில் . . . முடிவீர்—*AB*, ''எனது குற்றத்தை ஒரு மூட்டையாகக் கட்டி முத்திரையிட்டு வைப்பீர்.'' பை,* RSV. *பொருள்களின் எண்ணிக்கைக் கணக்கு வைப்பதற்குச் சிறு கற்களைக் குடுவையில் போட்டு முத்திரையிட்டு வைக்கும் வழக்கம் இருந்தது* (AB). *மாற்று: ''முடிந்துஎன் பழியினை முத்திரை யிடுவீர்.''*

*18. இல்லை—*AB, RSV, ''But.'' *ஆனால் யோபு இங்கு தாம் மேலே ஆவலால் எடுத்துரைத்த நம்பிக்கை வீண்கனவு என்று கருதி மேற் பேசுகிறார்; எனவே ''இல்லை'' என்பதே இயல்பாக அமையும்.*

JB *(18,19): ''இல்லை, இல்லை, இன்றோ நாளையோ*
*மலையும் சாயும், பாறையும் பெயரும்,*
*தண்ணீர் பட்டுக் கல்லும் தேயும்,*
*மழைமுகில் கொட்ட மண்ணும் கரையும்:*
*அதேள போல மனித னுடைய*
*ஆவல் தன்னை அழிக்கின் றீஇர்.''*

19. கல்லேத் தண்ணீர் தேய்த்துக் கரைக்கும்,
மண்ணே வெள்ளம் அடித்துக் கொண்டுபோம்;
மனிதன் ஆவல் மாய்ப்பீர் நீரே.
20. ஒடுக்குவீர் அவனேஎஞ் ஞான்றும் மறைவான்,
உருக்குலேத்து அவனேப் போஎன விடுப்பீர்.
21. புகழே எய்துக புதல்வர், அறியான்;
அடைக இழிவே, அதுவும் காணுன்.
22. அவனது நோவெலாம் அவன்தன் ஊனே;
அவன்தன் ஆவி புலம்பும் தானே.''

---

20. ஒடுக்குவீர்—AB, ''overwhelm''; RSV, ''prevailest.''

எஞ்ஞான்றும்—இதற்கு ''ஒரேயடியாய்'' என்றும் பொருள்கொள்வர்; எனவே, ''ஒரேஎ யடியாய் ஒடுக்குவீர் மறைவான்.''

எஞ்ஞான்றும்/ஒரேயடியாய் என்பது ஒடுக்குவீர், மறைவான் இரண்டையும் தழுவக்கூடியது. மூலத்தில் உள்ள சொல் முறை வைப்பே தமிழிலும்.

21. உலகோர் அனேவருக்கும் பொதுவானதும் தமக்குக் கிட்டவிருப்பதுமாகிய கதியைப் பற்றி யோவு இங்கு குறிப்பிடுகிருர். கீழுலகம் சேர்ந்தோர் அதன்பின் தங்கள் மக்களின் சிறப்பையோ, இழிவையோ அறிய மாட்டார்கள். சங்கத். 9:5 காண்க.

22. இறந்தவர்கள் இனி அறிய மாட்டாதவர்கள் ஆனுலும் நோவு நீங்கிவிடாது. இசை. 66:24; யூதித். 16:21 காண்க.

தன்னேப் பற்றியே அவன் ஆவி நினேந்து புலம்பும் என்பது கருத்து.

இக்கண்ணியில் பெரியதொரு தத்துவம் அடங்கியுள்ளது. ''ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர் நாழி முகவாது நால்நாழி'' என்பதுபோல, மெய்ம்மை, பேரறிவு, பேரின்பம் என்பவை எல்லேயில்லாமல் இருந்தாலும் எல்லாம் இந்த ஊனின் வழியே நமக்கு எட்டவேண்டும். ஊனே நிலேயில்லாதது; இறந்து இறந்து ஒவ்வொரு நொடியும் ஆவியினுல் பிறந்து பிறந்து நீடிப்பது; காலம் என்பதற்குக் கட்டுப்பட்டது. காலத்துட் பிறந்து காலத்தை வென்று வாழும் கிறிஸ்துவே இதற்கு மருந்தாவார்; அவரே அமிர்தம்.

# 15

# எங்கே போயிற்று உங்கள் புத்தி?: ஏலிப்பாசு

**15:** [இரண்டாவது முறையாக ஏலிப்பாசு உரையாடத் தொடங்கி, யோபின் பேச்செல்லாம் வெறும் கொதிப்பினால் வருவது, பொருளற்றது, பயனில்லாதது என்கின்றார் (1–3). அது மட்டுமன்று, யோபினுடைய போக்கு அசல் நாத்திகம் (4); அவரிடம் வாய்மை இல்லை, அவரது பேச்சே அவரைக் குற்றவாளி என்று காட்டிவிடுகிறது (5,6); உலகில் தோன்றிய முதல் மனிதரா யோபு? அவர் கடவுளுடைய திட்டங்களை அறிந்து வைத்திருப்பவரா? ஞானம் அவருக்குத் தனி உரிமையா? அவருடைய தந்தையைக் காட்டிலும் வயதில் மூத்தவர்களான அவருடைய நண்பர்களுக்குத் தெரியாதது எதுவும் அவருக்குத் தெரியுமா (7–10)? கடவுள்மேல் கோபிக்கும் யோபுக்குப் பைத்தியந்தான் பிடித்திருக்க வேண்டும் (11–13). வானவர்களே இறைவன்முன் தூயவர்கள் அல்லர் எனில் மனிதன் எப்படி (14–16)? தீயோர் எப்போதும் துன்புறுவர்: இதுவே ஞானிகள் கண்ட உண்மை (17–35) என்று அறைகிறார் ஏலிப்பாசு.]

*15:1. அதற்குத் தேமானூர் ஏலிப்பாசு கூறினார்:*

*2. ''வெறுங்காற் றாலோ விடைசொலல் அறிவுளான்?*
*ஆடிக் காற்றோ அவன்வயிற்று அடைத்தது?*
*3. பயனிலாப் பேச்சினால் வாதிடு வானோ,*
*ஒன்றுக்கும் உதவா உரைகளி னாலே?*
*4. பயபக் தியையும் தள்ளுகின் றீர்கள்,*
*இறைவனை நினைதல் ஏன்என் பீர்கள்.*

---

*2. ஆடிக்காற்று—மூலம், கிழக்குக் காற்று; பாலத்தீனத்தில் பாலைவனத்திலிருந்து அடிக்கும் இந்த அனல்காற்று பயனற்றதையும் கெடுதியானதையும் குறிக்கும்.*

*வெறுங்காற்றாலோ* (AB)—RSV, "with windy knowledge". JB, "*அர்த்தமற்ற ஆய்வினாலோ அறிவுடை ஒருவன் விடையிறுப்பானோ?''*

*வயிறு*—AB.

*4. பயபக்தி—மூலம், (கடவுள்) பயம்.*

*தள்ளுகின்றீர்கள்—மூலச்சொல்லின் பொருள்* "frustrate, annul, destroy" *முதலியனவாம்* (AB).

*நினைதல்—ஆங்கிலத்தில் பொதுவாக* meditation *என்று மொழிபெயர்க்கப்படும் சொல்* (RSV, JB); AB, devotion.

JB—*''உங்கள் செய்கை இன்னும் மோசம்;*
*பக்தியைப் பகடி பண்ணுகின் றீர்கள்;*
*இறைவன் திருமுன் இருந்துதியா னித்தலை*
*வேண்டாம் என்று விலக்குகின் றீர்கள்.''*

5. குற்றம் வாயைப் பேசவைக் கின்றது;
குதிர்ந்தீர் தந்திர மாகப் பேசல்.
6. கண்டனம் உங்கள் நாவே, நான்அலேன்;
உங்களுக்கு எதிர்ச்சான்று உங்கள் வாயே.
7. மாந்தர்க் கெல்லாம் மூத்தவர் தாங்களோ?
கல்தோன்று முன்னரே மண்தோன்றி னீர்களோ?
8. ஒப்பிலான் மன்றில் ஒற்றுக்கேட் டீர்களோ?
ஞானம் பொதுவறத் தம்தனி உரிமையோ?
9. யாம்கா ணுதவை யாதுகண் டீர்கள்?
யாதுஅறிந் தீர்கள் யாம்அறி யாதவை?
10. எம்பா லுள்ளவர் நரைதிரை விழுந்தோர்
உங்கள் தகப்ப னுர்க்கும் மூத்தோர்.
11. அற்பமோ உங்கட்கு அவன்வழங்கு ஆறுதல்,
தண்மையாய்ப் பேசும் மென்மொழி தானும்?
12. எங்கே போயிற்று உங்கள் புத்தி,
உங்கள் கண்கள் படபடப் பானேன்?
13. கடவுள் மேலே காய்ந்து விழுவதேன்?
வாயில் வந்த வாறெலாம் பேசலேன்?

---

5. குதிர்ந்தீர் = தீர்மானித்தீர்.

6. கண்டனம்—கண்டனம் செய்வது என்று கொள்க.

7. கல்...தோன்றினீர்களோ?—கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த குடி எனக் குடியின் தொன்மையைக் குறிப்பிடும் பழக்கத்தை நினைவில்கொண்டு மொழிபெயர்த்தது.

கல் = மலை.

8. ஒற்றுக் கேட்டீர்களோ—AB, "ஒற்றுக் கேட்பவர்களோ"; RSV, "(இருந்து) கேட்டீர்களோ."

11. அவன்—கடவுள்.

மென் (மொழி)—தனிச் சொல்லாக மூலத்தில் இல்லை; AB, "the word that treats you gently"; ஆயினும் பொருளை விளக்க உதவும் என இட்டது.

JB— "கடவுள் அளிக்கும்
ஆறுதல் உங்களுக்கு ஏளனம் ஆமோ?
எங்கள் சொல்லின் தண்மை இகழ்ச்சியோ?"

12. படபடப்பானேன்—"உங்கள் கண்களேன் வெறித்துப் பார்ப்பன?" எனவும் மொழிபெயர்க்கலாம்.

13. காய்ந்து விழு—literally, "turn your wind/spirit"; this is used in the sense of anger as in Prov. *16:32; 25:28; 29:11* (AB).

வாயில் வந்தவாறெலாம் பேசி—AB, "spouting words from your mouth" RSV, "let such words go out of your mouth."

14. மனிதன் எவனே மாசற் றவனும்?
மகளிடம் பிறந்தவன் உகந்தவ னுவனு?
15. நம்பார் கடவுள் தம்தூ யோரையும்;
விண்ணும் தூயதுஅன்று அவர்கண் முன்னே.
16. பின்னை எப்படி ஊழலாம் இழிதகை,
நீர்போல் தீமையை மாந்தும் மனிதன்?

17. நவில்வேன் உங்கட்கு, நன்குகே ளுங்கள்:
கழறுவேன் யான்என் வாழ்க்கையில் கண்டது,
18. ஞானியர் சொல்லியே வைத்துச் சென்றது,
அவர்மூ தாதையர் அமுக்கிவை யாதது.
19. வேற்றூர் கலந்துறை வில்லா வாறு
நாடு வழங்கப் பெற்றவர் இவர்களே.
20. தீயோன் வாழ்நாள் தீரா வேதனை;
கொடுங்கோ லானும் குறித்த நாள்வரை.

---

16. இழிதகை—AB, "foul" RSV, "corrupt"; சங். 13:3; 52:3 இடங்களில் "கெட்டழி" என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ள அதே சொல், பழைய ஏற்பாட்டில் வேறு எங்கும் வராத சொல்; இதற்கு ஒத்த அரபுச் சொல் பால் திரிவதைக் குறிக்கும்.

மனிதன் என்று ஏலிப்பாசு பொதுப்படக் கூறினும் அவர் கருத்தில் சுட்டியது யோவைத்தான்.

JB (14–16)—"மனிதன் எவனே மாசற் றவனும்?
மகளிடம் பிறந்தான் மாறிஎன் றேனும்
நல்லவ னுக வல்லனோ? மாட்டான்.
நம்பார் கடவுள் தம்தூ யோரையும்;
அவர்கண் ணுக்குத் தூயவை அல்ல
உயர்வா னங்களும். அவ்வா றிருக்கப்
பழிபா வங்களைத் தண்ணீ ரேபோல்
பருகும் இந்தக் கேடு கெட்ட
மனித குலம்எனும் அருவருப் பான
பொருள்இனும் எத்துணைப் புன்மைய தாகும்!"

'நீர்போல் தீமையை மாந்தும் மனிதன்' என்பது ஒரு பழமொழிபோலும் (AB).

17. தீயோர் கதியை விவரிப்பது ஏலிப்பாசுக்குக் கைவந்த ஒரு கலை.

18. சொல்லியே—ஏகாரம் தேற்றம் (காண்க AB குறிப்பு).

19. அடிகள் முன்பின்னாக மாற்றம், மொழிபெயர்ப்புக்காக.

20. தீரா வேதனை—AB, "The wicked is tormented all his days."
RSV, "The wicked man writhes in pain all his days."

குறித்த நாள்—lit. "a number", which AB equates with "a few." RSV, "through all the years that are laid up for the ruthless."

இவ்வகையில் 16:22 கண்ணியும் காண்க.

21. அவன்செவி யுள்ளே திகில்நின்று ஒலிக்கும்,
அமைதியா யிருக்கையில் அழிப்பவன் பாயலாம்.
22. இருளின் மீளும் நம்பிக்கை இழப்பான்;
வாளுக்கு இரையென வைக்கப் பட்டான்.
23. கழுகுக்கு இரையென நடந்து திரிவான்;
கையகத் ததுதன் கருநாள் அறிவான்.
24. அரண்டிட அலக்கணும் வருத்தமும் அமுக்கும்
அடுத்திட அணிதிரள் அரசனைப் போல.
25. கடவுளுக்கு எதிராய்க் கையை ஓங்கினுன்;
பரமனை எதிர்த்துப் பெருமை பேசினுன்.
26. தலைகுந் துறஅவன் சாடுவன் அவர்மேல்
பருத்த குமிழ்கள் பதித்த பரிசையால்.
27. முகத்தினைக் கொழுப்பால் நிறைத்து வைத்தவன்;
இடுப்பினை மதர்ப்பால் பருக்க வைத்தவன்.

---

*23,24.* கழுகுக்கு—கிரேக்கத்திலுள்ளபடி. எபிரேயத்தில், "உணவுக்கு அலைவான்; எங்கே உளதது?"/"எங்கே உணவென அலைவான்."

கருநாள்—RSV, "day of darkness." இச்சொற்றொடரை AB, JB இரண்டும் அடுத்த கண்ணியில் அமைத்துள்ளன: அதற்கு AB கூறும் காரணம் 24இல் இரண்டாமடி சற்று நீளம் என்பது; ஆகவே 23இலிருந்து இச்சொற்றொடரைச் சேர்த்து 24ஐ மூவடிக் கண்ணியாக மொழிபெயர்த்துள்ளது. மட்டுமன்று, 23இல் "கைக்கு எட்டியதாக" என உள்ளதை "அழிவு" (ruin) என மாற்றியுள்ளது AB. அதன்படி 23ஆ,24:

"அழிவு திண்ணம் தனக்கென அறிவான்.
இருள்சூழ் நாள்அவன் அரண்டிட வருமே;
அலக்கணும் வருத்தமும் அவன்தனை மிஞ்சும்
அடுத்திட அணிதிரள் அரசனைப் போல."

JB (24)—"இருள்சூழ் வேளை அரண்டிடு வானே,
இடுக்கண் நெருக்க இன்னல் உழப்பான்
யாரோ மன்னர் படையெடுத் ததுபோல்."

அடுத்திட=போர்செய்து தாக்க; ஏன் என்று 25இல் காரணம் கூறுவார்.

*26.* பரிசை=கேடயம்.

தலைகுந்துற—AB, "சாடுவன் அவர்மேல் கழுத்துக் கவசமும்
பருங்குமிழ் பதித்த பரிசையும் கொண்டு."

மூலச்சொல், "with neck"; இதனை "stiff neck", "stubbornly" என்று மொழிபெயர்ப்பர். தலைகுந்துற, கண்ணை மூடிக்கொண்டு என்றும் பொருள்கொள்ள அது இடம்தரும் (AB).

JB—"பருத்த கேடயம் முற்படக் கண்ணை
மூடிக் கொண்டுஅவன் சாடினுன் அவர்மேல்."

*27.* முதலடி மூலத்தை அப்படியே மொழிபெயர்த்தது (he covered his face with his fat). இரண்டாமடி [And made weight (?) upon (the) hip(s)]; இதன்
AB மொழிபெயர்ப்பு, Bloated his loins with blubber.
RSV, gathered fat upon his loins.

28. பாழாய்ப் போயின பட்டணம் உறைவான்,
குடித்தனம் இல்லா வீடுகள் கொள்வான்,
இடிந்து தகர்ந்திட இருப்பன இவைதாம்.
29. செல்வன் ஆகான்; நில்லாது அவன்நிதி;
உடைமைகள் அவனெடும் மண்ணெடு சேரா.
30. தான்இருள் நீங்கித் தப்புதல் இல்லை;
அவன்இளங் குருத்துகள் அழலினில் வாடும்;
அவன்மலர் காற்றினில் அடிபட்டு ஓடும்.
31. பிழையே வெற்றுப் பகட்டினை நம்புதல்,
வேண்டாம்; வெற்றுப் பகட்டது வீணும்.
32. காலம் வருமுன் காயும் அவன்பனை;
மீளப் பசுமை மேவாது அவன்மடல்.
33. முந்திரிக் கொடியின் காய்க்குலை பறிப்பான்,
ஒலிவ மரம்போல் அலர்களை உகுப்பான்.
34. மலடே பக்தி மறுத்தோர் கூட்டம்;
எரியுணும் கையூட்டு இடுவோர் இல்லம்.
35. தீங்குகருக் கொண்டார் தீமையே பெறுவார்;
வயிற்றில் அன்னூர் வளர்ப்பது மாயமே.''

---

28. இக்கண்ணியின் கருத்து என்ன என்று தெளிவாகத் தெரியவில்லை என்பது AB குறிப்பு.

29. உடைமைகள் . . . சேரா—AB.

LXX, JB—''அவன்நிழல் இனிநிலம் படரா தாகும்.''

RSV—''மண்ணினில் அவனும் வேரூன் ருனே'' (with the foot-note "Heb. obscure").

30. அவன் மலர் . . . அடிபட்டோடும்—RSV, JB.
AB—''வாயின் மூச்சொடு போயே போவான்.''

31. RSV, ''வெறுமையை நம்புதல் வேண்டாம், வீணும்;
வெறுமையே அவன்தன் வெகுமதி ஆய்விடும்.''

AB suggests this verse to be a prosaic gloss.

32. பனை, மடல்—AB; JB, ''கிளை'', ''சினை''. RSV, ''காலம் வருமுன் தானஃதடைவான்; அவனது கிளையும் பசுமை இழக்கும்.''

33. பறிப்பான்—மூலச் சொற்ருடர், "he does violence". ஒலிவ மரம் ஏராளமாகப் பூக்கும்; ஆயின் அவற்றைத் தாராளமாக உதிர்க்கும். வாழ்க்கையின் பயனை அடையான், இடையிலே மடிவான் என்பது கருத்து.

34. கையூட்டு இடுவோர்—AB; ''கையூட்டின் (கூடாரங்களை),'' RSV; ''கையூட்டுப் பெறுவோர்,'' JB.

இல்லம்—கூடாரங்கள் (AB, JB, RSV).

35. தீங்கு—RSV, JB; AB, ''வலி.'' வயிற்றில்—AB; உள்ளத்தில், RSV,

# 16

# புண்ணுய்ப் படுத்தும் தேற்றரவாளர்காள்!: யோவு

**16:** [இவ்வீண் வெற்றுரைகளைக் கேட்டு அலுத்துப் போயிற்று என்கிறுர் யோவு (1–3). தாம் இருக்கும் நிலைமையில் தம் நண்பர்கள் இருந்து தாம் அவர்கள் நிலைமையில் இருந்தால், தாமும் தம் நண்பர்களுக்கு இவ்வாறு வாய் வீச்சாகப் பேசலாம் என்கின்றுர் யோவு (4–5). காரணமின்றிக் கடவுள் தம்மைப் புடைப்பதாக யோவு தமது நிலைமையை வருணிக்கின்றுர் (6–17). விண்ணில் தமக்காகக் கடவுளிடம் பரிந்து பேசத் துணை ஒருவர் உள்ளார் என்று அவருக்காக ஏங்குகின்றுர் (18–22).]

*16:1. அதற்கு யோவு உரைத்த மறுமொழி:*

*2. ''போதும் போதும் ஈதுநான் கேட்டது;*
*புண்ணுய்ப் படுத்தும் தேற்றர வாளர்காள்!*
*3. வெற்றுரைக்கு உண்டோ விடிவு? உங்களை*
*விடாஅது உளற வைப்பது எதுவோ?*
*4. நானுந்தான்,*
*உங்களைப் போல உரைசெய லாமே,*
*இந்தஎன் நிலைமையில் நீங்கள் இருந்தால்;*

---

2. போதும் போதும்—AB, "I have heard plenty of this."
RSV, "I have heard many such things."

புண்ணுய்ப் படுத்தும்—AB; RSV, "miserable."

JB—''ஈதெலாம் எத்தனை எத்தனை தடவை
இதற்கு முன்னும் யான் கேட் டுள்ளேன்;
அந்தோ, ஆறுதல் அளிக்கவந் தவர்களா!''

இரண்டாம் அடியில் ''(நீங்கள்) எல்லீரும்'' விடப்பட்டது.

3. வெற்றுரை—AB, RSV, "windy words."

JB—''வெற்றுரை களுக்கு விடிவே இல்லையா?
தாங்கள் சொன்ன சொல்லுக்கு மறுசொல்
யாரும் பேசப் படாதுஎன உங்களைப்
பிடித்த பீடை எத்துணைத் தொல்லை!''

நண்பர்கள் தாங்கள் சொன்னதையே சொல்லிக்கொண்டிருக்கிறுர்கள், ஓய்வதே இல்லை என்று யோவு முறையிடுகிறுர்.

தொடுப்பனே சொற்சரம் உங்களை எதிர்த்து,
அலைப்பனே தலையினைத் தங்களைப் பார்த்து.
5. வழங்குமே என்வாய் வலுவுங் கட்டு;
நடுங்கும்என் நாவு நோவு தணிக்குமே!

6. பேசினால் என்வலி தணிவ தில்லை;
பேசா திருப்பினும் பிரியுமா என்ன?
7. இப்போது என்னை இளைத்திட வைத்தார்;
எனைப்பிரி யாதது திகிலடி தந்தது;
8. அனைத்தும் என்னை உணக்கி வதக்கும்,
எனக்குஎதிர்ச் சாட்சியாய் எழுந்து நிற்கும்;
என்மெலிவு எனக்கோர் எதிர்ச்சான்று ஆனது.
9. சீறும் மூர்க்கமாய்ச் சினந்துஎனை எதிர்ப்ப,
நறநற வென்று பல்லைக் கடிப்ப;
கண்ணைத் தீட்டுவர் கருதலர் என்மேல்,
10. பேழ்வா யினராய் நோக்குவர் என்னை;
இகழ்ச்சியாய் எனது முகத்தினில் அறைவர்.
அன்னார் எனக்குஎதிர் ஒன்று திரண்டனர்.
11. கெட்டவர் காவலில் எனைவைத் திட்டார் கடவுள்
கொடியோர் கையில் எறிந்துவிட் டாரே.

---

4. தொடுப்பனே சொற்சரம்—இங்கு மூலத்திலுள்ள வினைச்சொல்லின் அடிப்படைப் பொருள், ''ஓசை, இரைச்சல்;'' அதனை ஒத்த அரமேயச் சொல்லுக்கு ''அணி செய், அழகு செய்'' என்ற பொருள் உண்டு (KJ, "I could be brilliant in words against you)"; இந்த அரமேயச் சொல்லுக்கு எபிரேயத்தில் ''சேர், இணை'' என்ற பொருள் உண்டு. (RSV, "I could join words together against you." (cf. AB).

5. JB—''தேற்றர வாகச் சிலபல சொல்லி
நடுங்குமென் நாவு தணியும் துணையும்.''

மாற்று: ''நாவின் அசைவு நோவு தணிக்குமாம்.''

6. பிரியுமா என்ன?—மூலத்தை ஒத்து அமைந்தது; மூலச் சொல் māh = என்ன?
AB, ''பிரியாது.''

7. எனைப் பிரியாதது—literally, "my company." AB changes this word to "my woe." பிரியாதது [என் துணை (company)] என் வலி (6 காண்க).

"all" (my company)—carried to 8 as அனைத்தும். ஆக, 6,7,8 மூன்றும் தொடர்ந்து ஒன்றாய் அமைந்தவை.

9. எதிர்ப்ப, கடிப்ப—அவன்/அவர் என்பதுதான் எழுவாயாக (AB) உள்ளது; ஆயினும் இங்கு சொல்லப்படும் எதிரிகள் யோபின் நிலை கண்டு மகிழ்ந்து துள்ளும் மனிதர்களை என்று AB குறிப்பதைக் கருதுக.

கருதலர் = பகைவர்.

11. முதலடி—RSV, JB, ''என்னைக் கடவுள் பக்தியில்லாரிடம் ஒப்படைத்திட்டார்,''

12. இருந்தேன் வசதியாய், என்னைத் தகர்த்தார்;
பிடித்தார் பிடரியை இடித்துக் குலைத்தார்;
என்னைத் தனக்கோர் இலக்காய் வைத்தார்,
13. அவர்வில் வீரர் வளைத்தனர் என்னை.
இரங்கார், ஈரற் குலையைக் குத்துவார்,
எனது குடலினைத் தரைமிசைச் சாய்ப்பார்.
14. துளைஇ துளைஇஎனத் துளைப்பார் என்னை;
போர்வீ ரன்போல் சாடுவார் என்மேல்.
15. கோணிஎன் தோலொடு தைத்துக் கொண்டேன்;
கொம்பினை மண்ணினில் முட்டிக் கொண்டேன்.
16. அழுதுஅழுது எனது முகமும் சிவந்தது;
என்றன் கண்களும் இருண்டு போயின.

---

4–11. யோவு நண்பர்களிடையே தாம் படும் பாட்டினை அழகாக வருணிக்கின்றார்; தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தெரியும் என்று முதலில் இடித்துரைக்கின்றார். ஆதலால் அவரது அநுபவம் அவருடைய நண்பர்களுக்கு இல்லை என்பது ஒன்று. ஆனால் அவரது அநுபவம் என்ன? பேசும்பொழுதும் மறக்க முடியாத பெருத்த வேதனை—இணைபிரியாத துன்பம். இதுவோ அவரை வாட்டுவதோடு நில்லாமல், குதிரை கீழே தள்ளியதுமன்றிக் குழியும் பறித்ததாம் என்பதுபோல, அவருக்கு எதிர்ச் சாட்சியாகவும் நிற்கிறது. நண்பர்கள் மட்டுமல்லர், மற்றும் பலரும் அவரை வெறுத்து ஒன்றுகூடிவிட்டனர். ஆகவே தமக்குக் காவலாய்த் தீயவர்களை வைத்துவிட்டார் கடவுள் என்று யோவு முடிக்கின்றார்.

12. குலைத்தார்—AB ; RSV, JB, ''தூள்தூளாக்கினர்.''
கடைசி அடி 13இன் முதல் அடியோடு சேர்ந்து செல்கிறது.

13. ஈரற் குலை—AB, "vitals;" RSV, ''kidneys." AB notes that the word kidney is used here metaphorically for the sensitive inwards, as in Lam. 3:13 where RSV renders "heart." தமிழில் ஈரற்குலை இத்தகு பொருள் தரும். அதேபோல் ''குடல்'' என்பதும் மூலத்தின் "gall bladder" (not "gall" as in RSV, acc. to AB) என்பதற்குப் பதிலாக உள்ளது. 20:25 காண்க.

14. துளை துளை எனத் துளைப்பார்—AB, "(rends me) rift on rift;" RSV, "breach upon breach." முற்றுகையிட்டுக் கோட்டையை இடித்து வழிபண்ணி உள் நுழையும் படையின் செயலை உவமையாக்கும் அடி இது. மாற்று: ''இடி இடி என எனை இடித்துத் துளைப்பார், படைவீரன்போல் . . .''

15. கோணி—சாக்கும் சாம்பலும் வருந்தித் தவம் செய்வார் பூணும் கோலம்.

கொம்பு—ஆற்றல், பெருமை, சிறப்பு ஆகியவற்றைக் குறிப்பது; (அவனுக்குக் கொம்பா முளைத்திருக்கிறது என்னும் தமிழ் வழக்கையும் ஒப்பு நோக்குக.) அடிபட்டு அயர்ந்த காளை தலையைத் தொங்கப்போட்டுத் தன் கொம்புகளை மண்ணில் புதைத்து நிற்பது போல யோவு தமது துன்ப துயரங்களால் நிலை கலங்கி நிற்கிறார்.

16. இருண்டு—AB, "upon my eyes is darkness." AB notes, possibly the darkness refers to the blackness around the eyes of the sick man: கண்கள் கறுப்பு வளையம் பூண்டன.

17. ஆயின்என் கையில் வன்செயல் இல்லேயே;
மாசில் லாததுஎன் மன்ருட் டும்மே.
18. மண்ணே, நீஎன் குருதியை மறையேல்,
என்றன் கூக்குரல் ஒடுங்குதற்கு இடங்கொடேல்.
19. இன்றும்என் சாட்சி விண்ணில் உள்ளனன்;
எனக்குப் பிணையம் இருப்பவன் வானுளன்,
20. என்னுடை நினைவுகள் எடுத்துப் பேசுவான்;
கடவுளை நோக்கிஎன் கண்ணீர் இழிதரும்;
21. கடவுள்முன் மனிதனை ஆதரித்து உரைப்பான்,
நண்பனுக் காகப் பரிந்துரைப் பவன்போல்.
22. குறித்த காலம் வருக,
மறித்து வாரா வழியது போவேன்.

---

17. மாசில்லாதது—AB, RSV, pure (தூயது).

18. தாம் துன்பப்படுவது தமது குற்றத்தால் அன்று என்பதை விண்ணுக்கு எடுத்துரைத்து நியாயம் வேண்டத் தமது குருதியை மண்ணகம் மூடி மறைக்க வேண்டாம் என்கிருர் யோவு. (ஆதி. 4:10; 37:26; இசை. 26:21; எசே. 24:8 காண்க).

19. சாட்சி—9:33; 19:25 காண்க.

20. முதலடி மூலம் (இப்பொழுதுள்ளபடி): "My interpretor(s)/scorner(s) [is/are] my friend(s)/thought(s)/shepherd(s)·" RSV, "என்றன் நண்பர்கள் ஏளனம் செய்வர்." But AB's suggested reconstruction is based on Lxx: "என் மனம் இறைவனை எண்ணி / எனது வேண்டுதல் இறைமுன் எழுக, அவர் முன் என் கண் நீர்வார்க்கும்மே."

22. குறித்த காலம்: AB, "The innumerable years." But original is "a number." (காண்க 15:20 குறிப்பு).

சாகத் தயார் என்கிருர், தாம் மாசில்லாதவர் ஆதலால்.

# 17

# உடைந்தது என் உள்ளம்: யோவு

**17:** [வாழ்க்கை ஓய்கின்றது (1,2); தமது மாசின்மைக்குக் கடவுளே உறுதி கூற வேண்டும்(3); நண்பர்கள் தாம் சொல்வதன் நியாயத்தைக் கேளாக் காதினர் ஆனார்கள் (4); நண்பர்களிடமிருந்தும் கடவுளிடமிருந்தும் தமக்குக் கிட்டுவதெல்லாம் கேலியே (5,6); கண்கள் மங்கிக் கை கால் எல்லாம் துரும் பாய் இளைத்துக் கிடக்கும் தமது நிலை கண்டு இரக்கப்படுவதற்கு மாறாக 'நல்லவர்கள்' அதிர்ச்சி அடைகிறார்கள் (7,8); ஆனால் அவர்கள் நிலை கலங் காமல் இருக்க வேண்டியவர்கள்; இல்லையேல் மெய்ஞ் ஞானிகள் ஆகார் (9,10); தம்முடைய வாழ்க்கை தாம் எண்ணியதற்கெல்லாம் மாறாகத் தகர்ந்துவிட்டது; தம் முன் காண்பது இருளே; நம்பிக்கை சிறிதும் தெரிய வில்லை; மரணம் அடுத்துள்ளது; இனி இன்பம் எங்கே (11–16)? என்கின்றார் யோவு.]

*17:1. ''உடைந்ததுஎன் உள்ளம்;*
*கழிந்தன என்நாள்;*
*கல்லறை யேஇனி எனக்கு.*
*2. என்முன் பெரிதாய்த் தோன்றும் இடுகாடு;*
*என்கண் நிற்பன அளற்றுக் குழிகள்.*
*3. எனக்குப் பிணையம் ஆவீர் நீரே;*
*என்கை அடித்துக் கொடுப்பார் யாரே?*

---

1. *உள்ளம்*—AB, RSV, ''*ஆவி*, (spirit).''
*கல்லறையே—ஏகாரம் மூலத்தில் உள்ளபடி தேற்றம்.*
JB—''*மெல்ல என் மூச்சும் அமருகின்றது;*
*கல்லறை தோண்டுவார் கூடிவிட்டனர்.*''

2. *இடுகாடு*— AB, "The Mounds."
*அளற்றுக் குழிகள்*—AB, "Slime-pits." *காண்க 9:31.*
JB—''*ஏளனம் செய்வார்க்கு இலக்கா னேன், அவர்*
*தீய எண்ணமே நினைந்து நினைந்து இளைவேன்*
*நான் விழித் திருக்கும் நாழிகை யெல்லாம்.*''
*இக் கண்ணி கடினம், சிதைந்துள்ளது போலும் என்று* AB *கூறுவதில் வியப் பில்லை!*

3. *எனக்குப் பிணையம். . . நீரே—கடவுளே தமக்குப் பிணையமாக நிற்க வேண்டு கிறார் யோவு* (RSV, JB). *ஆனால்* AB, ''O take my pledge with you!'' *என்று மாற்றியுள்ளது.*
*கையடித்துக் கொடுத்தல் சத்தியம் செய்து உறுதிமொழி அளிப்பதற்கு அடையாளம் என்பது தமிழர் மரபுமாகும்.*

4. அவர்களை—அறிவுக்கு அடைத்த உளத்தினர் ஆக்கினீர்,
ஆதலால் அவர்கை ஓங்க விடீஇர்.
5. சொத்துக் காக நண்பரைச் சொல்வான்
மக்கள் பார்வை மங்கி ஒழியும்.
6. நாலுபேர் நகைக்க நான்இலக்கு ஆனேன்
காறிஎன் முகத்தில் உமிழவும் ஆளாய்.
7. கடுந்துய ரால்என் கண்கள் மங்கின;
கைகால் நிழலென இளைத்துப் போயின.
8. கண்டனர் நேர்மையர் கலங்கினர் அதிர்ந்து;
பொங்கினர் தீதிலர் பக்தியற் றவன்மேல்.
9. நேர்மையர் தமது வலுநிலை நிறுத்துவர்;
மாசறு கையினர் ஆற்றல் பெருகுவர்.
10. நீங்கள்—யாவரும் வருக, மீளவும் பாய்க;
உங்களுள்—ஞானி ஒருவர் நான்கா ணேனே.

11. தீர்ந்ததுஎன் காலம்;
தகர்ந்தன யாஅன்
எண்ணி யிருந்தவும் இதயத்து ஆசையும்.

---

4. அவர்களை—நண்பர்களைக் குறிக்கிறார்.
JB—''அவர்கள் உள்ளம் அடைத்து விட்டீர்
அறிவு நுழையா வண்ணம் ஆதலால்
எவரும் எனக்குக் கைகொடுப் பார்இலை.''

5. நண்பருடைய சொத்து தனக்குக் கிட்டும் என்று ஆசைப்பட்டு அந் நண்பரைப் பற்றி எதிரிகளுக்குச் சொல்லிக் கொடுப்பவனுடைய மக்கள் தம் கண் பார்வை இழப்பர் (RSV)/இழந்து போகட்டும் (AB). இதுவும் கடினமான கண்ணியே; திருத்த முடியாதபடி சிதைந்து கிடப்பது என்பர் சில ஆராய்ச்சியாளர்கள்.

6. ஆனேன்—''என்னை இலக்கு ஆக்கினார் (கடவுள்)'' என்பது மூலம். இந்த அடி மொழிபெயர்ப்பு Dahood விளக்கத்தைத் தழுவியது (காண்க AB குறிப்பு).
JB (5,6)—''தன் அரும் புதல்வர் கண்கள் சோங்க
நண்பரை அழைத்துத் தன்னுடை உடைமையைப்
பகிர்ந்தளிப் பான்போல் பழமொழி யானேன்
நாலுபேர் நடுவண்; முகத்தில் காறி
உமிழத் தக்க ஒரு படைப் பானேன்.''

7. நிழலென—உவமை புதுமை. (கைகால்) ''எல்லாம்'' விடப்பட்டது.

8–10. நண்பர்களின் குறைபாடான நேர்மையையும் பக்தியையும் யோபு கிண்டல் செய்கிறார்.

11. எண்ணியிருந்த(வும்)—முன் அடியிலிருந்து எடுத்துக் கடைசி அடியில் வைத்துளேன். எண்ணியிருந்தவும் இதயத்தாசையும் வெவ்வேறல்ல.
JB—''எனது காலம் கழிந்தது, நாஅன்
எண்ணி யிருந்தற் கெல்லாம் மாறாய்;
என்—இதய நார்கள் எனைத்தும் அறுந்தன.''

12. இரவினைப் பகலாய்த் திரிப்பர், இருளின்
முன்னே ஒளிஅருகு உள்ளது என்பர்.
13. நானோ—எதிர்பார்த் திருப்ப தெல்லாம் பாதலம்
குடிபுகுந்து இருட்டில் பாயல் கொள்ளலே.
14. குழியினை எனக்குத் தந்தை என்பேன்,
புழுவினை என்தாய் தமக்கை என்பேன்.
15. பின்னை எங்கே என்நம் பிக்கை?
எனக்கோர் இன்பம்? எவர்அது காண்பார்?
16. என்னோடு அஃது பாதலம் இறங்குமா?
அன்றி ஒன்றாய் மண்ணிற் சாய்வமா?''

---

12. தமக்கு நல்ல காலம் பிறக்கும் என்று முன்பு நண்பர்கள் கூறியதை நினைத்து யோவு இங்கு இவ்வாறு குறிப்பிடுகின்றார்.

13. எல்லாம்—தெளிவுக்காகச் சேர்த்தது.

15. இன்பம்—மூலத்தில் இங்கும் 'நம்பிக்கை' என்ற சொல்லே திரும்பவும் வந்துள்ளது. கிரேக்கத்தில் 'நன்மை' என உள்ளது கண்டு AB ''இன்பம்'' என மொழிபெயர்த்துள்ளது.

16. ''உடைந்தது என் உள்ளம்'' என்று அவலச் சுவையோடு தொடங்கிய அதிகாரம் ''அன்றி ஒன்றாய் மண்ணிற் சாய்வமா?'' என்று மிக்க சோகத்தோடு முடிவடைகின்றது. மீண்டும் செல்வமும் சீரும் பெருக வாழலாம் என்று ஆசுவாசப்படுத்திய நண்பர்களுக்கு யோவு தாம் சாக்காட்டை நெருங்கியிருக்கும் நிலையைச் சுட்டிக் காட்டி, இந்த நிலையிலா அந்த ஆசை என்கிறார். மீண்டும் நல்வாழ்வு பெற யோவு தம் குற்றத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்பது நண்பர்கள் அறிவுரை. யோவு, அப்படி ஒப்புக்கொள்ளத் தக்க குற்றம் ஒன்றும் தம்மிடம் இல்லை என்பது மட்டுமன்று, திரும்ப நல்வாழ்வு காணவேண்டும் என்ற ஆசையும் அற்றுவிட்டதே, இந்நிலையில் நம்பிக்கைக்கு இடம் எங்கே, அந்நம்பிக்கை தம்மோடு பாதலம் வருமா என்று கேட்கிறார். மனித உள்ளத்தின் ஆழ்ந்த உண்மை ஒன்று இங்கு படம் பிடிக்கப்பட்டுள்ளது காண்க. உடம்பின் உத்தானமே விடை.

பாதலம்—மூலம், ''பாதலத்தின் கைகளில்'' (AB Notes காண்க), அதாவது பாதலத்தின் பிடியில். எனவே, ''பாதலப் பிடியினுள் என்னொடு வருமா?''

# 18

# வார்த்தைக் கண்ணிகள் வேண்டாம்: வில்தாது

**18:** [வார்த்தைக் கண்ணிகள் வைக்க வேண்டாம் என்று யோவுக்கு வில்தாது இடித்துரைக்கின்றார்; கிறுக்கர் போல் ஆத்திரப்படும் யோவு தம் நண்பர்கள் மூவரையும் மடையர்களாகக் கருதுவது தமக்குப் பிடிக்கவில்லை என்கின்றார் வில்தாது (1–4அ). யோவுக்காக உலகமே மாறிவிடுமா (4ஆ,இ)? தீயோர் திண்ணமாகத் துன்ப துயரத்தில் அழுந்துவர் என்று வில்தாது அடுக்கடுக்காக வருணிக்கின்றார் (5–21).]

*18:1. அதற்கு சுவாஊர் வில்தாது சொன்னார்:*

*2. ''நிறுத்தமாட் டீர்களா*
*வார்த்தைக் கண்ணிகள் வைப்பதை நீங்கள்?*
*கொள்க நன்மதி, பின்னர்ப் பேசலாம்.*
*3. எங்களை மாடுபோல் எண்ணுதல் ஏனோ*
*உங்கள் கண்களுக்கு அறிவிலா உயிர்களாய்,*
*4. பிய்த்துப் பிடுங்கிக் கொள்ளும் கொதிப்பினில்?*
*உங்கள் பொருட்டுஇவ் உலகம் தானும்*
*கைவிடப் படுமா, கல்இடம் பெயருமா?*

---

*2. மாட்டீர்களா—நண்பர்களுக்குள் நடக்கும் உரையாடல் ஆதலால் எங்கும் மரியாதைப் பன்மையிட்டு மொழிபெயர்த்துள்ளேன். ஆனால் இந்த இடத்தில் வில்தாது உரை மரியாதைப் பன்மை அன்று; மூலத்தில் பலர்பால் முன்னிலை அமைந்துள்ளது. யோவைப் போன்ற பக்தியற்றவர்கள் எல்லோரையும் முன்னிலைப்படுத்தி வில்தாது பேசுவதாக இதற்கு விளக்கம் கூறுவர். ஆனால் கிரேக்கத்தில் வழக்கம் போல் இங்கும் முன்னிலை ஒருமை வினையே உள்ளது* (AB). *மூலத்தில் ஈரடிக் கண்ணியாக உள்ளது; அதன் முதல் அடி (நிறுத்த . . . நீங்கள்?) சற்று நீளமே* (AB).

*வார்த்தைக் கண்ணிகள்*—AB (word snares); RSV, "hunt for words" *(சொற்களைத் தேடி அலைவீர்கள்).*

*4. முதல் அடி முந்திய கண்ணியோடு சேர்ந்து செல்வதாக* AB *கொள்கிறது.*

JB—*''பிய்த்துப் பிடுங்கிக் கொள்ளு வீர்கள்* (RSV).
*உலகம் உங்கள் கொதிப்புக் கெல்லாம்*
*பாலையாய் வறண்டிடப் போவ தில்லை,*
*பாறைகள் இடம்பெயர்ந் திடவும் செய்யா.''*

*யோவு தமது கதியைத்தான் உலகமே நம்பியிருக்கிறது என்றும், தமக்காக உலக நியதியே மாறியாகவேண்டும் என்றும் குறிப்பதாகக்கொண்டு வில்தாது இவ்வாறு இடித்துரைக்கிறார். வினை விதைத்தவன் வினை அறுப்பான்; இந்த விதி கல்லுப் போன்றது; அதனை அசைக்க முடியாது என்று கூறுகிறார். பின்வருவனவோடு சேர்த்துக் காண்க.*

5. தீயவன் விளக்கு தீய்ந்துபோம், திண்ணம்;
அவன்தீப் பந்தம் அணைந்துபோம், உறுதி.
6. அவன்கூ டாரம் ஆங்குஒளி மங்கும்;
அவன்மேல் ஒளிர்ந்த விளக்கம் அவியும்.
7. அவன்தன் பீடு நடைகள் இழுக்கும்;
அவன்தன் சூழ்ச்சியே அவனைக் கவிழ்க்கும்.
8. அவன்தன் கால்களே வலைக்குள் தள்ளும்;
கண்ணிகள் நடுவே கால்வைத் துள்ளான்.
9. குதிகால் தன்னைப் பொறியது பற்றும்,
அதன்வில் தகடுகள் அழுத்திப் பிடிக்கும்.
10. மண்மறைந்து உளதுஅவன் மாட்டிடும் சுருக்கு;
பாதை மீதுஅவன் படுபொறி உளது.
11. சூழவும் அவனைக் கிலிபிடித்து ஆட்டும்;
கால்வழி சிந்தக் கலங்கி அழிவான்.
12. அடங்காப் பசியார் அவன்எதிர் கொள்வார்;
அவன்விலா எலும்புக்கு இழவுகாத் திருக்கும்.

---

5,6. தண்டனை விதியை வில்தாது அழுத்தம் திருத்தமாக எடுத்துரைக்கிறார். யோவு இதனை மறுப்பதை 21:17இல் காணலாம்.

5. திண்ணம், உறுதி—JBயைப் பின்பற்றியது.

7. இழுக்கும்—பின்னுக்கு இழுக்கும், தளரும்.

8. கால்களே—"அந்த நொடியிலே" என்றும் பொருள் கொள்ள மூலத்தில் இடமுண்டு (AB).

கண்ணிகள்—AB; RSV, "படுகுழி."

9,10. வார்த்தைக் கண்ணிகள் வேண்டாம் என்று தொடங்கிய வில்தாது தீயவனுக்குக் கேடு வருவிக்கும் வலைகள், கண்ணிகள், பொறிகள், சுருக்காங்கண்ணிகள், படுகுழிகள் எனப் பல உள என்று அடுக்குகின்றார்.

JB—"குதிகால் தன்னை வில்லொன்று பற்றப்
பொறியில் சிக்கிக் கொள்வான்; தரையில்
மறைவாய்ச் சுருக்குவைத் துளதுஅவன் மாட்ட;
செலும் அவன் வழியில் படுகுழி பலவே."

11. கால்வழி . . . அழிவான்—NEB மொழிபெயர்ப்பைப் பின்பற்றியது; அரண்டு கலங்கிய கலக்கத்தால் சிறுநீர் தானறியாமல் பிரிந்து கால்வழி சிந்தும் என்பது குறிப்பு.

AB—"harry him at every step."

RSV—"chase him at his heels."

JB—"அடிமேல் அடிவைத்து அதுவும் தொடரும்."

12. அடங்காப் பசியார்—Mot என்னும் மரணத் தெய்வத்துக்கு மறுபெயர் (AB காண்க). தீராக் கொடும்பசியின் உருவகம் இது. மூலம் "பட்டினியாகுக அவனது

13. சாவின் தலைமக ஞர்அவன் தோலினைத்
தம்இரு கைகளால் தாம்எடுத் துண்பார்.
14. அவனை—இனிய இல்லினின்று எடுபடப் பறிப்பர்,
கிலிகட்கு அரசனின் கிட்டே பற்றுவர்.
15. இருந்த இல்லம் எரியுண வைப்பர்,
வாழ்ந்த இடத்தில் கந்தகம் தூவுவர்.
16. கீழே அவன்வேர் காய்ந்து மடியும்;
மேலே அவன்கிளை பட்டுப் போகும்.
17. அவனியில் அவன்பெயர் அயர்த்துப் போகும்;
மண்ணினில் அவன்பெயர் மறந்து போகும்.

---

வலிமை!" என்று கூறுவதுபோலத் தோன்றுகிறது. ஆனால் AB மொழிபெயர்ப்பு (இங்கு தமிழில் ஏற்றது) Dahood விளக்கத்தைத் தழுவியதாகும்.

விலா எலும்புக்கு—அவன் மனையாளுக்கு இழவு காத்திருக்கும் (ஏனெனில் அவன் விரைவில் இறக்கப்போகின்றான்) என விளக்கம் கூறுவார் உண்டு. அதற்கு இடம் தரும் வண்ணம் calamity என்பதை இழவு என வைத்துள்ளேன். இழவு=சாகக் கொடுத்தலால் ஏற்பட்ட இழக்கை.

13. மொழிபெயர்ப்பில் அடிகள் சற்று மாற்றம். மூலத்தில், முதலடியில் "இரு கைகளால்" என்றும், அடுத்த அடியில் "தம் இரு கைகளால்" என்றும் வந்துள்ளது (AB).

சாவின் தலைமகனார்—ஒரு நோயினைக் குறிக்கலாம். "தலைமகவாகிய சாக்காடு" என்பது AB.

JB (12,13)—" . . . கேடுவந்து அவன் அயல் நிற்கும்; கூடு
நோய்க்குஇரை யாகும்; சாக்கா டதனின்
தலைமகவு கறித்துத் தினும்அவன் கைகால்."

14. கிலிகட்கரசன்—மரணத் தெய்வம் Mot (எமனுக்கு ஒப்பானவன்).

12–14. அடங்காப் பசியும் மடங்காப் பிணியும் அவனை மாய்த்துக் கிலிகட்கு அரசன் முன்னே கொண்டு சேர்க்கும் என்பது கருத்து. எமனின் தூதனும் காலனும் வந்து உயிரைப் பறித்து எமனிடம் கொண்டு செல்வர் என்பது போன்ற வருணனை இது.

15. முதலடி—AB; மூலம், "from without to him."

JB (14,15)—"அவனை அவன்கூ டாரா நிழலினின்று
எடுபடப் பறிப்பர், இழுத்துச் செல்வர்
கிலிகட்கு அரசன் தன்முன் பாக.
அரக்கி அவன்மனை குடிபுகு வாள்; அவன்
உடைமைகள் மீது கந்தகம் தூவுவர்."

16. பூண்டற்றுப் போவான் என்பது கருத்து; 19ஆம் கண்ணியும் பார்க்க.

17. மண்ணினில்—AB, "abroad;" RSV, "தெருவில்" (மறுகில்). "இவண் இசை உடையோர்க்கு அல்லது அவணது உயர்நிலை உலகத்து உறையுள் இன்மை" என்ற புறப்பாட்டின் (50) கருத்தையும் ஒப்பிடுக.

18. ஒளியினின்று இருட்டினுள் ஓட்டினர் அவனை
உலகினின்று ஒழிந்துபோய்த் தொலையத் துரத்தினர்.
19. நாட்டின ரிடையே கேள்கிளை அற்றான்,
வீட்டினில் வாழஒர் எச்சமும் இல்லான்.
20. அதிர்ந்தது மேற்றிசை அவன்கதி கண்டு
திகிலால் கீழ்த்திசை திகைப்புற் றதுவே.
21. கொடியவ னுடைய குடியெலாம் இவையே;
கடவுளை அறியான் இடமிது தானே.''

---

18. ஓட்டினர்—மூலத்தில் உள்ளபடி; ஆங்கிலத்தில் ஓட்டப்பட்டான் என வரும். பொருள் ஒன்றே.

19. நாட்டினர்—"his people."

வீட்டினில்—AB, "in his old haunts;" RSV, "where he used to live."

பேர் சொல்ல ஒரு பிள்ளையும் இல்லாதபடி அடியோடு அழிந்துபோவது பெரிதும் வெறுக்கப்பட்ட நிலையாகும்.

20. கதி—AB, "fate." மூலம், ''நாள்'' அதாவது இறுதி நாள்.

மேற்றிசை, கீழ்த்திசை—மேல், கீழ்த் திசைகளில் வாழ்வோர், அதாவது உலக மெல்லாம். மூலம், ''பின்னால்'' (பின்புறம் மேற்றிசை) உள்ளவர்களும் ''முன்னால்'' (முன்புறம் கீழ்த்திசை) உள்ளவர்களும்.

JB—''அவன் அடைந் திட்ட
துயர முடிவு கேட்டு மேற்றிசை
திடுக்கிடும், கீழ்த்திசை திகிலால் நிரம்பும்.''

21. வில்தாது இங்கு ''கொடியவன்'' என்று பொதுப்படச் சொன்னாலும் யோபைத் தான் தனிப்படக் குறிப்பிடுகிறார். 'பாவத்துக்குத் தண்டனை இவை இவை; இவை யெல்லாம் யோபின் நிலையில் காணக்கிடக்கின்றன; ஆகையால் யோபு பெரும் பாவி' என்பது வில்தாதின் அழுத்தமான வாதம்.

குடியெலாம்—dwellings (AB).

# 19

# என்னை மீட்பவன் வாழ்கிறன்: யோவு

19: [நண்பர்கள் பேசிப் பேசி ஏன் தம்மை வதைக்க வேண்டும், கேலி பேச வேண்டும் என்கிறுர் யோவு (1–5). ஆனுல் தம்மிடம் குற்றம் இல்லே, தம்மைக் கவிழ்த்துக் காரணமின்றிக் கடவுள் கொடுமைப் படுத்துகிறுர், என்று யோவு அறிவிக்கின்றுர் (6–12). உற்றுர், உறவினர், வேலேக் காரர், மனைவி எல்லோரும் தம்மை வெறுத்துவிட்டனர்; நண்பர்களும் கடவுளைப்போல் தம்மை வதைக்க வேண்டுமா என்கின்றுர் (13–22). சாவது உறுதியே எனினும் இறுதியில் தமது நிலே மெய் என நிலேநாட்டப் படும்; தமது காவலன், திக்கற்றவரின் துணே, மீட்டுக் காக்கும் மேலோன் தமக்குச் சாட்சியாய் மண்ணினில் எழுந்து வருவான், 'கடவுளைக் கண்டு கொள்வேன்' என்று யோவு தமது மகா விசுவாசத்தை அறிக்கையிடு கின்றுர் (23–27). நண்பர்கள் வீணுகத் தம்மை வதைத்துக் கடவுளின் கோபத்துக்கு ஆளாக வேண்டாம் என்று யோவு அறிவுறுத்துகின்றுர் (28,29).]

*19:1. அதற்கு யோவு, உரைத்த மறுமொழி:*

*2. ''எத்தனை நாள்தான் எனைவதைப் பீர்கள்,*
*சொல்லால் என்னைக் கொல்லு வீர்கள்?*
*3. பத்துத் தடவை பழித்துவிட் டீர்கள்*
*கூசாது என்னை ஏசிப் பேசி.*

---

*2. வதைப்பீர்கள்*—AB, RSV, "torment."
*கொல்லுவீர்கள்*—AB, "crush;" RSV, "break in pieces." *''வதை'' என்பதற்கு மூலத்தில் உள்ள சொல்* (wgy) *இசை. 51:23. புலம்பல். 1:5,12 ஆகிய இடங்களில் வரும் அதே வினைச்சொல்தான்* (AB). *அவ்விடங்களில் இச் சொல்லைக் ''கொடுமைப்படுத்தல்,'' ''துன்புறுத்தல்'' ''வாதித்தல்'' என வழங்கியுள்ளது தமிழ் இலக்கியக் கழகத்தின் திருத்திய பதிப்பு. எனவே, ''வதைப்பீர்கள்.'' கொல்லுதல் கொடுமைப்படுத்தலைக் குறிக்கும் உலக வழக்கு; இதுவும் இங்கு பொருந்தும். ஏனெனில் இதற்கு மூலத்திலுள்ள வினைச்சொல்* (dk') *இசை. 57:15இல் வரும் அதே சொல்லாகும்; அங்கே மனம் வருந்துவதற்கு அது பயன்பட்டுள்ளது. இங்கே வார்த்தைகளால் தம்மை வருத்துவானேன் என்கிறுர் யோவு. ஆனுல் அது சாதாரண வருத்தம் அல்ல, வதைப்புக்கு இணையான வருத்தம். எனவே 'கொல்லு வீர்கள்.' ஆகவே, வதை, கொல் என்பவை எபிரேயச் செய்யுளுக்கு இயல்பாயுள்ள இணைமையை* (parallelism) *எடுத்துக்காட்டும்.*

*3. பத்துத் தடவை—நாலு பேர் என்பதுபோல; ஒரு முழுமையான எண். ஆகவே, போதுமான அளவு என்று கொள்ள வேண்டுமே ஒழியக் கணக்காகப் பத்துத் தடவை என எண்ணக்கூடாது (காண்க ஆதி. 31:7,41; எண். 14:22).*

4. தப்பே செய்தேன் என்றுகொண் டாலும்
அந்தப் பிழையும் என்னேடு அமர்ந்ததா?
5. வென்றுவிட் டதுபோல வீண்பெருமை யடிப்பீர்கள்;
என்இழிவு என்குற்றம் எண்பித்தது என்பீர்கள்.
6. ஆயின் அறிக,எனைக் கவிழ்த்தவர் கடவுளே,
என்னை இறுக்கும் வலைஅவர் வலையே.
7. 'கொடுமை'என்று அலறுவேன், கேட்பார் இல்லை;
கூக்குர லிடுவேன், தீர்ப்பார் இல்லை.
8. அடைத்தார் பாதை, கடத்தல் ஒல்லேன்;
வைத்தார் எனது வழியில் இருளே.
9. என்னிட மிருந்துஎன் மானம் களைந்தார்;
எனது தலையின் மணிமுடி பறித்தார்.
10. இடித்துத் தகர்த்தார், யான்தொலைந் தேனே;
மரம்போலும் என்நம்பிக்கை
வேரோடும் பிடுங்கிவிட்டார்.

---

4. அந்தப் பிழையும் என்னேடு அமர்ந்ததா?—மூலத்தில் உள்ள கண்ணி உடன் பாடாகவும் கேள்வியாகவும் கொள்ளக் கூடியது. எப்படிக் கொண்டாலும் பல பொருள்பட விளக்கலாம். உடன்பாட்டு வாக்கியமாக வைத்தால், உமக்கென்ன அதைப்பற்றி?/ நான் அல்லவா வைத்திருக்கிறேன் (உமக்கென்ன தெரியும்)?/ அது எனக்கு நினைவிருக்க வேண்டும்? (இல்லையே) எனப் பலவாறு பொருள்படும். கடவுளை நோக்கிக் கூறியது எனில் 7:20இல் சொன்னதுபோல் 'பாவியின் பாவத்தால் கடவுளுக்கு என்ன கெட்டுப்போயிற்று?' எனப் பொருள்படும். இல்லை, கேள்வியாக அமைத்தால், என் பிழை என்னேடே இருந்து வரவேண்டுமா (தண்டனை நீடிக்க வேண்டுமா)?/ அந்தப் பிழைக்கு நான்தான பொறுப்பு? எனப் பொருள்கள் கூற லாம். கடைசியில் சொன்னதே யோவின் கருத்தாகத் தெரிகிறது: பின்வரும் 6ஆம் கண்ணி காண்க.

5. என் இழிவு என் குற்றம் எண்பித்தது—நண்பர்களின் தர்க்கவாதத்தை யோவு சாடுகிருர்: பாவம் காரணம், துன்பம் காரியம்; ஆகவே காரியத்தினின்று கார ணத்தை உய்த்துணர்ந்ததாக நண்பர்கள் சாதிக்கிருர்கள்.

6. கடவுளே நீதியைப் புரட்டுவாரா என்ருர் வில்தாது (8:3). அப்படி நினைக்கவே வேண்டாம் என்பார் எலியூ (34:10). யோவோ 'ஆம், என் காரியத்தில் அவ்வாறு ஆகிவிட்டதே!' என்கிருர்; அதுதான் அவருடைய கேள்வியெல்லாம். தீயவன் தன் வலையிலே விழுகிருன் என்ருர் வில்தாது (18:8); இல்லை, கடவுளே வலை விரித்துத் தம்மை இறுக்குகிருர் என்கின்ருர் யோவு.

7. RSV, ''கூவுகின்றேன், நீதி இல்லை.''

8. JB, RSV—''எனது பாதையின் குறுக்கே சுவர் ஒன்று
எழுப்பிவிட்டார், கடத்தல் இயலேன்.''

9. மானம்—AB; RSV, புகழ். மூலச்சொல் kābôd செல்வத்தையும் குறிக்கும்.

10. JB—''எல்லாப் பக்கமும் என் அரண் தகர்த்தார், நான்தோற் றேனே,''

11. கொதித்துஎழு மேஅவர் கோபம் என்மேல்;
எனைத்தம் பகைவனாய் எண்ணுகின் றாரே.
12. அவர்தம் வீரர் அணிதிரண்டு எழுந்தனர்,
என்னைத் தாக்க முற்றுகை யிட்டனர்,
என்கூ டாரம் வளைத்தனர் பாசறை.
13. உறவினர் என்னைக் கைவிட் டொழிந்தனர்;
அறிமுகம் ஆனோர் அணுகார் ஆயினர்.
14. உற்றமும் சுற்றமும் எல்லாம் போயின;
என்றன் வீட்டார் என்னை மறந்தனர்.
15. வேற்றாள் போல்எனைப் பார்ப்பர்என் அடிமைப்
பெண்கள்; அவர்களுக்கு அன்னிய னானேன்.
16. அடிமையை அழைப்பேன், யாதுஎனக் கேளான்,
இரந்துநான் அவனைக் கெஞ்சுவேன் ஆயினும்.
17. மனைவிக்கு எனது மூச்சு வீச்சம்;
தாஅய் பிள்ளைகள் தமக்குநான் நாற்றம்.

---

12. இக்கண்ணியில் அங்கதம் ஒன்று அமைந்துள்ளதைக் காணலாம். ''இணையிலா ஆற்றலுடைய எல்லாம் வல்ல அவர் அற்பப் புழுவாகிய என்னை அழிக்க எவ்வளவு பெரிய ஏற்பாடுகளைச் செய்கின்றார்!'' என்று புலம்புகின்றார் யோவு.

13. JB—''உடன்பிறந் தார்கள் ஒதுங்கிநிற் கின்றனர்;
உறவினர் என்னைக் காணாது ஒளிவர்.''
SV—''அவர் என் உடன்பிறந்தார்களை ஒதுக்கி வைத்துவிட்டார்.''

14. என்றன் வீட்டார்—AB; RSV, JB—விருந்தினராக என் வீட்டில் இருந்தோர். மூலத்தில் இரண்டாவது அடி மூளியாக உள்ளது. அடுத்த கண்ணியின் முதல் இரண்டு சொற்களைச் சேர்த்துத்தான் அது முற்றுப்பெறுகிறது. அவ்வாறு சேர்த்தே அடிகளை அமைத்துள்ளது AB.

15. பார்ப்பர்—AB, ''நடத்துவர்;'' RSV, ''எண்ணுவர்.''
JB—''பணிசெய் பெண்கள்
வேற்றாள் போல்எனை விழிப்பர் முன்புஒரு
போதுமே காணாப் புதியவன் போல.''

16. JB, RSV—''வேலைக் காரனை விளித்தே னாயின்
ஏன்எனக் கேளான்; இரந்துநான் அவனைக்
கெஞ்ச வேண்டிய கீழ்நிலைக் கானேன்.''

17. முதலடி—AB, JB.
தாய் பிள்ளைகள்—மூலம், ''the children of my womb/body.'' இது உடன் பிறந்தார் என்ற பொருளில் ஆதி. 43:29; நீதிபதி. 8:19 ஆகிய இடங்களில் வந்துள்ளது. RSV, JB மொழிபெயர்ப்பும் அதுவே. அதே சொற்றொடர் தன் பிள்ளைகளையும் குறிப்பது உண்டு (உபா. 28:53 காண்க). AB மொழிபெயர்ப்பு அப்படி. தமிழில் பேச்சு வழக்கில், நெருங்கிய உறவினரைக் குறிக்கத் தாய் பிள்ளைகள் என்று சொல்வது உண்டு.

18. பொடியர்கள் கூட எனைஇகழ் வார்கள்,
என்தலை கண்டதும் கெக்கலிப் பார்கள்.
19. கெழுதகை நண்பர் அனைவரும் வெறுத்தனர்;
எனதுஅன்பு உடையார் எனக்குஎதிர் ஆயினர்.
20. எலும்புகள் மேல்என் தசைகள் அழுகின;
ஈறு நீங்கிஎன் பற்கள் அலைந்தன.
21. இரக்கப் படுங்கள் எனக்குஇரக்கப் படுங்கள்,
என்றன் நண்பர்காள்;
கடவுள் கையால் அடிபடு கின்றேன்.
22. கடவுள்போல் நீங்களும் விரட்டுவது ஏன்எனை?
போதா தாஎனை நீங்கள் குதர்ந்தது?

23. ஆ,என் மொழிகளை எழுதிவை யார்களா,
கல்வெட் டாய்இவை செதுக்கிவை யார்களா,
24. வெட்டிரும்பு அதுவும் ஈயமும் கொண்டு
நின்று நிலைக்கப் பாறையில் பொறித்து?
25. உண்மை, என்னை மீட்பவன் வாழ்கிறன்,

---

18. என்தலை . . . கெக்கலிக்கின்றனர்—JB; RSV, AB, "எழுவேன் எனக்கெதிர் பேசுவர் அன்னர்."

19. கெழுதகை நண்பர்—மூலம், "men of my intimate group."
JB—"அருமை மிக்க நண்பர் அனைவரும்
அருவருப் பால்எனை அணுகக் கூசுவர்;
எனதன் புக்கு நனிஉரி யாராய்
இருந்தோர் தாமும் எனக்கெதி ராயினர்."

20. இரண்டு அடிகளுமே பொருள் கொள்ளக் கடினமாக மூலத்தில் உள்ளன (AB).
முதலடி—RSV, "தோலையும் தசையையும் தொற்றுமென் எலும்புகள்."
JB, "தோலுக்கு அடியில் அழுகும் என்தசை."
இரண்டாமடி—RSV, "பல்லின் தோலளவில் தப்பினேன்."
JB, "எழுந்து தோன்றும்என் எலும்புகள் பல்என."

21. மூலத்தில் இரண்டு அடிகளில் உள்ளது இக்கண்ணி.

23. கல்வெட்டாய்—AB (III Ed.); "செப்பேடு" (AB முந்திய பதிப்புகள்); RSV, "சுவடியில்/ஏட்டில்/புத்தகத்தில்."
JB (23,24)—"ஆ, நான் சொல்லப் போகுமிம் மொழிகளை
எழுதி வைக்கமாட் டார்களா
நினைவுச் சின்னமாய்ப் பதித்துப் பாறையில்
என்றும் நிலைக்க இரும்பின் உளியால்
செதுக்கு கருவியால் வெட்டிப் பொறித்தே?"

25. மீட்பவன்—RSV; AB, "vindicator." மூலச் சொல் gō'ēl. பழிதீர்ப்பவன், பழிவாங்குபவன், விடுவிப்பவன், மீட்பவன் என்னும் பொருள்பட எண். 35:19; உபா. 19:6–12; 2 சாமு. 14:11; லேவி. 25:25,48 முதலிய இடங்களில்

மண்மிசை எழுந்து நிற்பான் பிணையமாய்;
26. என்றன் தோல்கழன்று உரிந்த பின்னரும்,
என்ஊன் கடந்தும் கடவுளைக் காண்பேன்.
27. யான்என் பாங்கர் அவன்காண் குவனே,
என்றன் கண்களே காண்கும் எவனே அல்லன்.
உணர்வும் என்னுள் ஒடுங்குகின் றதுவே!

28. 'எப்படி இவனைத் தொலைப்போம்? எல்லாம்
இவனே காரணம்' என்றுசொல் வீர்களேல்,
29. பின்னை வாள்வரும், முன்நினை யுங்கள்;

---

இச்சொல் வருகின்றது; எனவே கைம்பெண்களுக்கும் திக்கற்றவர்களுக்கும் காவலன், ஒடுக்கப்பட்டோர்க்கு உற்ற துணைவன் என்ற பொருள் பெறுகிறது. பின்னர் இச்சொல்லால் கடவுளைக் குறிக்கலாயினர்; ஏனெனில் எகிப்து நாட்டு அடிமைத்தனத்திலிருந்தும், நாடு கடத்தப்பட்ட நிலையிலிருந்தும், சிதறுண்டுபோன நிலையிலிருந்தும், சிறைப்பட்ட நிலையிலிருந்தும், தம் மக்களைக் காத்து மீட்டவர் அவர் (யாத். 6:6; 15:13; இசை. 41:14; எரே. 50:34; சங். 18:14 காண்க).

உண்மை—"அறிவேன்" என்று மூலச் சொல்லை அப்படியே தருவதைவிட இது தமிழுக்கு இசைந்தது.

பிணையமாய்—AB, guarantor. மூலச் சொல் 'aḥărôn என்பதற்கு அந்தம், இறுதி என்றும் பொருள் கொள்ளலாம். அதனை வினையெச்சமாகக் கொண்டு RSV "கடைசியாக" என்று மொழிபெயர்த்துள்ளது. கடவுளே ஆதியும் அந்தமும் ஆதலால், அப்பொருளில் JB இங்கு 'அந்தம்' என மொழிபெயர்த்துள்ளது (இசை. 44:6 கண்ணியும் பார்க்க).

எழுந்து நிற்பான்—வழக்கில் சாட்சியாக எழுந்து நிற்பதைக் குறிக்கும் சட்ட நுணுக்கச் சொற்றொடர்.

26. இந்தக் கண்ணி மொழிபெயர்ப்புக்கு மிகவும் கடினமானது. பண்டைய மொழிபெயர்ப்புக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கருத்தில் அமைந்துள்ளன. மூலச் சொற்களைத் திருத்தி மொழிபெயர்த்துப் பார்த்தவர்களும் தெளிவு கண்டார்கள் இல்லை. "from my flesh" என்பது மூலச் சொற்றொடர் (Knox). "என் சதையி லிருந்து விடுபட்டு" என்பது தி. ப.; "என் ஊன் இன்றியும்" என்பது AB; "எனது ஊனில் இருந்து" என்பது RSV. மூலச் சொற்றொடரை மாற்றி "அவனால் என் ஊன் மீளப்பெற்று" என்று J. Speer என்பவர் மொழிபெயர்க்கிறார்.

27. (யான்) என் பாங்கர்—என் பக்கத்தில்; on my side (AB, RSV). மூலம், "to/for me." இதனை அப்படியே "எனக்கு அவன்" என்று மொழிபெயர்த்தால் இறைவனோடு அடையும் தனி உறவைக் குறிக்கும். பாங்கர், பக்கம் என்பதன் குறிப்பும் அதுவே.

எவனோ அல்லன்—இது கடவுளையும் குறிக்கும், பேசுபவன் தன்னையும் குறிக்கும் (AB, RSV காண்க).

உணர்வு—மூலம், "my kidneys wear out in my bosom." Bowels and kidneys were considered as the seat of emotions.

28,29. சிதைந்த கண்ணிகளை உருப்படுத்தியுள்ளனர்,

தீமையை அழிக்கும் சினம்ஒன்று உண்டு;
தேவன் அவனைக் கண்டுகொள் வீர்களே.''

---

29. தேவன்—(AB) "Shaddayan;" JB, RSV, ''தீர்ப்பு."

அந்தப் பிழையும் என்னேடு அமர்ந்ததா?" என்று தொடங்கிய வாதம் ''எல்லாம் இவனே காரணம் என்று சொல்லாதீர்கள்" எனப் பொருத்தமாக முடிவதைக் காண்க. பின் என்னதான் இச்சிக்கலுக்கு விடை என்ருல், அது சற்று முன்பு (25–27இல்) சாற்றப்பட்டது. உயிர்த்தெழுதலே விடை.

JB (25–27):

''இதுநான் அறிவேன், என்றன் புரவலன்
வாழ்கின் ருன், அவன் மண்ணகம் மீதினில்
வந்து தோன்றுவான், அவனே அந்தம்.
நான்விழித் ததன்பின் அவன்தன் பாங்கர்
அமர்த்துவான் என்னே; ஊன்உடம் பிருந்தே
காண்பேன் கடவுளை; நான்காண் கும்அவன்
என்பங்கு ஏற்பான்; இந்தக் கண்களே
அவனை உற்று நோக்கும்; அவனும்
ஒட்டா தவன் அலன், கண்டுகொள் வேனே.
அம்ம, என் இதயம் ஆழுமால் என்னுள்."

வல்கேட் (25–27):

''என் மீட்பர் வாழ்கிருர் என்றும், இறுதிநாளில் மண்ணினின்று எழுந்து மீண்டும் என் தோல் போர்த்துக்கொள்வேன் என்றும் அறிவேன். என் ஊனுடனே கடவுளைக் காண்பேன்; நானே அவரைக் காண்பேன், வேறு யாரும் அல்லர்."

கிரேக்கம் (25–27):

''என்னை விடுவிப்பவர் என்றுமுள்ளவர் இப் பாடுபடும் என் தோலினை மீண்டும் சிர்(ஆக்க) மண்ணகம் (உள்ளார்) என்பது அறிவேன். நானே அறிந்ததை, என் கண்ணே கண்டதை—பிறிது எதுவும் அன்று, என் கண்ணே கண்டது—என் பொருட்டுச் செய்தருளியவர் ஆண்டவரே."

சீரியா மொழி (25–27):

''என்னை மீட்பவர் வாழ்கின்ருர், கடைசியில் அவர் மண்ணகத்தில் தோன்று வார் என்பதை நான் அறிவேன். இவை என் தோலும் ஊனும் கொள்பவை, என் கண்கள் கடவுளைக் காணின் ஒளிபெறும்."

# 20

# தொன்றுதொட்டு வரும்இது தெரியுமா?: சோப்பார்

**20:** [யோவின் பேச்சைக் கேட்ட சோப்பார் பெரிதும் கலங்கிவிட்டார் (1–3). தீயோர் வெற்றி பெறுவதுபோல் தோன்றினாலும் அது சிறிது காலத்துக்கே யாகும்; அவர்கள் எவ்வளவு செழிப்பாகவும் செல்வாக்காகவும் வாழ்ந்தாலும் கடைசியில் எருப்போல் அழிவர், கனவாய் மறைவர், கேடு வந்து அவர்களை அடியோடு அடித்துக்கொண்டு போய்விடும் என உறுதியாக அறைகின்றார் சோப்பார் (4–29).]

*20:1. அதற்கு நாமாவூர் சோப்பார் கூறினார்:*

*2. ''அதிர்ந்து நடுங்குவன் இதன்விடை கண்டேன்,*
*பதற்றம் என்னைப் பற்றுவது ஆகலின்.*
*3. வெட்கம் கெட்டநும் மிரட்டல் கேட்டேன்;*
*கற்றஎன் உள்ளம் கண்டது விடையே.*
*4. தொன்று தொட்டு வரும்இது தெரியுமா?*
*மண்ணில் மனிதனை வைத்த நாள்முதல்,*
*5. கொடியவன் குனிப்பு நொடிப்பொழு தேதான்,*
*கடவுளுக்கு அஞ்சான் களிப்புஒரு கணமே.*

---

2. *பதற்றம் . . . ஆகலின்*—AB; RSV, "because of my haste within me."
JB—''*விடை சொல இதற்கு விரையும் என் கருத்துகள்;*
*பதற்றம் என்னைப் பற்றிடின் வியப்பிலை.*"

3. *வெட்கம் . . . கேட்டேன்*—தம்மைக் குதர்ந்தது போதாதா என்று யோவு கூறியதை *(19:22)* வைத்து இவ்வாறு சோப்பார் சொல்கிறார் போலும் (AB). *19:28,29*ஐக் குறிப்பதாகவும் கொள்ளலாம். RSV, ''*எனை இழித் துரைக்கும் கண்டனம் கேட்டேன்.*''

*கற்ற என் உள்ளம்*—மூலம், ''from my intellect a spirit;'' RSV, "out of my understanding a spirit.''

JB—''*எச்சரிக் கைகள் இவை எனக்கு இம்மியும்*
*பிடிக்க வில்லை; விடைசொலி விடுத்தல்*
*எப்படி என்றுஉளம் இயம்பும்என் செவியில்.*''

4. மண்ணில்—பூமியில். RSV, ''*தொன்றுதொட்டு உள்ளது ஒன்று இது தெரியாதா?*''

5. குனிப்பு—மகிழ்ச்சிப் பெருக்கால் துள்ளல்,

6. அவனது பெருமை அடுக்கிவிண் முட்டினும்,
அவனது தலைதான் முகில்சென்று தட்டினும்,
7. அனைத்தும் எருப்போன்று ஆய்அழிந்து ஒழிவான்;
கண்டவர் இன்று'அவன் எங்கே?' என்பார்.
8. கனவாய்ப் போவான்; காண்கிலர் யாரும்;
இரவுமருள் தோற்றம் எனக்கலைந் திடுவான்.
9. பார்த்த கண்இனி அவன்பா ராது;
வாழ்ந்த இடம்இனி அவன்கா ணாது.
10. வறியோர் குறைஅவன் மக்கள் தீர்ப்பார்;
திரவியம் அவன்கிளை திருப்பிக் கொடுக்கும்.
11. இளமை முறுக்கால் வளம்கெழும் அவன்தன்
எலும்புகள் அவனொடு நிலம்சாய்ந் தனவே.
12. இனிப்பாய் அவன்வாய்க்கு இருந்தது தீமை;
அடக்கினான் நாவுக்கு அடியில் அதனை.
13. ஓடி விடாமல் ஒதுக்கிச் சுவைத்தான்;
அண்ணத் தோடுஅதை அளாவ விட்டான்;
14. வயிற்றில் அவ்ஊண் மாறி விட்டது
விரியன் பாம்பின் நஞ்சாய் அவனுள்.

---

6. பெருமை—AB; (JB RSV, height). பண்டைய மனிதனின் இராட்சதச் செருக்கினை விவிலியம் பல இடங்களில் குறிப்பிடக் காணலாம் (எசே. 28:2,17; இசை. 14:13,14; ஆதி. 11:4 காண்க). புராணக் குறிப்புக்கள் உள்ள இம் மரபு ஆதி. 3ஆம் அதிகாரத்தில் காணும் மரபுக்கு இசைவானதேயாகும். செருக்கே மனிதன் வீழ்ச்சிக்குக் காரணம் என்பதை அங்குக் காணலாம் (JB).

7. அனைத்தும்—AB, utterly; RSV, for ever.

JB (4–7): "ஒன்று நீங்கள் உணர்ந்த தில்லையா
மண்ணில் மனிதனை வைத்த நாள்முதல்
தொன்று தொட்டுத் தீயோர் பெருமிதம்
நின்று நிலைத்த தில்லை என்பதும்
பாவியின் மகிழ்ச்சி பறந்திடும் என்பதும்?
தலையே முகில்சென்று தட்ட வானுற
ஓங்கி நிமிர்ந்து நின்றவ னாயினும்
மாய மோஎன மறைவான் மீளான்;
கண்டவர் இன்று'அவன் எங்கே?' என்பார்.

10. JB—"அவனுக்கு இரையாய் நலிந்தோர் தம்மை
அவன்தன் புதல்வர் தேற்றுதல் வேண்டும்;
அவனுடைச் செல்வம் அதனை அவன்தன்
குமரர் திருப்பிக் கொடுத்திடல் வேண்டும்."

கிளை—மூலம், "கைகள்."

11. தீயோர் தமது காலம் வருமுன்னே மாய்வர் (சங். 54:23 காண்க).

12–14. வாய்க்குச் சுவையாகவும் வயிற்றுக்குள் நஞ்சாகவும் இருக்கும் தின்பண்டமாகத் தீமையை வருணித்துள்ளார். சிங்கி (= உலோக நஞ்சு) குளிர்ந்தும் கொல்லும் என்பதையும் காண்க. பழ. 20:17 பார்க்க.

15. விழுங்கிய செல்வம் வெளியே கக்குவான்;
தள்ளுவார் கடவுள்; கொள்ளாது அவன்குடல்.
16. நல்ல பாம்பின் நஞ்சினை உறிஞ்சுவான்;
கொல்லும் தீண்டி விரியனின் நாக்கு.
17. காணுன் அவன்இனி எண்ணெய் ஆறுகள்,
தேனின் வெள்ளமும் வெண்ணெய்ப் பெருக்கும்.
18. பலன்பயன் படாது திருப்பித் தருவான்;
தொகுத்த செல்வம் துய்க்க மாட்டான்.
19. ஏன்?அவன் ஏழையர் குடில்கள் அழித்தான்;
தான்எழுப் பாதபல் மனைபாழ் ஆக்கினுன்.
20. என்றும் தன்வயிறு அடங்கி அறியான்;
ஒன்றும் தப்பவிட் டான்இலை ஆசையால்.
21. தின்று தீர்க்காது எஞ்சியது இல்லை;
நின்று நிலைக்காது அவன்தன் செழுமை.

---

15. முன் சொன்ன உவமைக்கும் இதற்கும் தொடர்பில்லை (AB குறிப்பு).

16. நாக்கு—மூலத்தில் உள்ள சொல்லே. தீண்டி—சேர்த்த சொல்.

17. எண்ணெய்—மூலத்தில் இச்சொல் இல்லை; விடுபட்டிருக்க வேண்டும் என்பது அறிஞர்கள் கருத்து. ஏனெனில் அந்த அடியில் சொல் குறைகிறது (கவிதை ஆனதால் கண்டுபிடிக்க முடிகிறது); எண்ணெய், வெண்ணெய், பால், தேன் ஆகியவை பெருக்கமாக இருப்பது செழிப்பைக் குறிக்கும் (29:6; யாத். 3:8,17 காண்க). ஆயின் மூலத்தில் இரண்டாவது அடியில் தேன், தயிர் ஆகியவற்றின் பெருக்கத்தைக் குறிக்க இரண்டு சொற்கள் உள்ளன; அடி நீளமாகின்றது என்று இவற்றுள் ஒன்றை AB, RSV நீக்கிவிட்டன. அப்படி நீக்க வேண்டிய தேவை இத் தமிழ் மொழிபெயர்ப்பில் இல்லை. வெண்ணெய்—AB, RSV, curd, curds; கருத்து ஒன்றே.

18. RSV—"உழைப்பின் பயனைத் திருப்பிக் கொடுப்பான்,
அதனை அவனே விழுங்கி விடாஅன்;
வணிகத் தால் கை வந்த ஆதாயம்
அவனுக்கு மகிழ்ச்சி அளிக்கமாட் டாது."

JB—"அடைந்தவை கண்டு மகிழ்ந்த முகமும்
வணிகம் தழைத்து வளர்ந்த நாளில்
பார்த்த சொகுசுப் பார்வையும் போயின."

19. முதலடி: RSV, AB—"ஏன்? அவன் ஏழைகளை ஒடுக்கினுன் கைவிட்டான்."
2ஆம் அடி: AB—"தான்கட் டாத மனைகளைக் கொள்ளையடித்தான்."
RSV—"தான்கட்டாத மனைஒன்று கவர்ந்தான்."
JB—"தான்வீடு கட்டான் பிறன்மனை கவர்ந்தான்."
Dahood மொழிபெயர்ப்பே இங்கு பின்பற்றியது (AB குறிப்பு காண்க).

20. RSV—"அவன்பே ராசை அடங்கிய தில்லை"—JB
ஆதலால், இன்றுஅவன் மகிழும் எதுவும் மிஞ்சாது."

JB—"ஆதலால் இப்போது அவனைக் காவா
அவன்சேர்த் திருப்பவை அனைத்தும் தாமே."

22. செல்வமோ நிரம்பி வழியும்; நசிப்பான்;
எல்லாக் கைம்மையும் இறுக்கி நெரிக்கும்.
23. வயிறு நிறைய வாங்கிக் கட்டுவான்.
தமது கடுஞ்சினம் அவன்மேல் கொட்டுவார்,
அவன்மேல், அவன்தன் ஊன்மேல், ஊற்றுவார்.
24. இரும்பின் ஆயுதம் எய்தாது தப்பின்
வெண்கலப் பகழி விரட்டிப் பிடிக்கும்.
25. முதுகின் வழியே வெளிவரும் கணையே,
குடர்வழித் துருத்தும் மின்னலம் முனையே;
அரள வைப்பன அவன்மேல் சாடும்.
26. காரிருள் எல்லாம் காத்துளது அவற்கு;
தின்னும் வீசாத் தீக்கொழுந்து அவனை;

---

22. நசிப்பான்=வருந்துவான்; RSV, "will be in straits;" AB, "stricken."

JB—"நிரம்பித் ததும்பும் அவனுடைச் செல்வம்;
இருந்தும் அவனை இறுக்கம் பற்றுமால்.
கடுந்துயர் குறைவற அவன்மேல் சாடும்."

எல்லாக் கைம்மையும்=சிறுமைகள் எல்லாம்; மூலம், "every miserable hand" meaning "every miserable force" or "the force of every misery" (AB குறிப்பு காண்க).

23. வயிறு . . . கட்டுவான்—AB, RSV, JB—"ஆத்திரம் அனைத்தையும் அவன் மேல் தீர்ப்பார்" (கடவுள்).

கொட்டுவார்—AB, RSV, "will send."

அவன்மேல் . . . ஊற்றுவார்—மூலம், "And he shall rain on him in his flesh." ஆனால், RSV, AB, JB யாவும் இதில் மாற்றங்கள் செய்தே மொழி பெயர்த்துள்ளன:

RSV, "அவற்குஅது உணவாய் அவன்மேல் பொழிவார்;"

AB, "வெஞ்சின நெருப்பு அவன் மேலே பொழிவார்;"

JB, "(வெகுண்டு கடவுள்), அவன்ஊன் மீது
பாயுமாறு பகழிகள் பொழிவார்."

24. பகழி=அம்பு. மூலம், வெண்கல வில். வெண்கலத்தால் வில் செய்தல் இல்லை எனவே RSV அம்பு என மாற்றியுள்ளது. வில் அம்புக்கு ஆகி வரும் என AB வில் என்றே வைத்துள்ளது.

JB—"இரும்பின் ஆயுதம் எட்டா வண்ணம்
தப்பி ஓடிப் பயனிலை; மற்று
வெண்கல வில்லின் கணைகள் துளைக்குமால்."

25. மின்னலம் முனை—the glittering point (RSV), the gleaming point (AB), மூலம், "மின்னல்." உபா. 32:41இல் "எனது வாளின் மின்னல்" என்பது "மின்னும் எனது வாள்" என்ற பொருளில் வந்துள்ளது. மின்னல் என்ற சொல்லை மாற்றுமலே இங்கு மொழிபெயர்த்துள்ளேன்.

16:13இல் யோவு கூறியதை இங்கு நினைவுகூர்க.

அவன்கூ டாரத்து எஞ்சியோர் நலிவர்.
27. வானம் அவன்பழி அம்பல மாக்கும்;
வையம் அவற்குஎதிர் வழக்கிட நிற்கும்.
28. வெள்ளம் அவனது வீட்டைச் சுருட்டும்
வெஞ்சின நாளினில் விஞ்சிப் பொழிந்து.
29. இதுகதி தீயோற்கு இறைவன் குறித்தது,
அவன்தன் உரிமைச் சொத்துஅவர் விதித்தது.''

---

26. வீசாத் தீக்கொழுந்து—மூலம், a fire not blown (by man)'' (AB). இடியை இவ்வாறு குறிப்பிடுகிறுர். அது 1:16இல் ''கடவுளுடைய நெருப்பு'' என வந்தது. நலிவர்—AB; RSV, JB—''பற்றி எரிக்கப்படுவர்.''

27. தீயோனுக்கு விண்ணும் மண்ணும் எதிராகும்.

28. மொழிபெயர்ப்பு ABஐப் பின்பற்றியது. JBயும் கிட்டத்தட்ட இஃதே. RSV, ''அவன்வீட்டு உடைமைகள் கொள்ளை போகும்,
கடவுளின் கடுஞ்சின நாளில் இழுத்துச் செல்லப்படும்.''

29. தீயோன் எனப் பொதுப்படச் சொன்னுர் எனினும் சோப்பார் தமது மனத்தில் குறித்தது யோவையே. இவரும் தீயோர் கூட்டத்தைச் சேர்ந்துவிட்டார் என்பது தான் அவர் மனத்தில் பட்ட வாதமும் வாதனையும்.

# 21

# நினைத்தாலே மேலெல்லாம் நடுங்குகின்றது: யோவு

**21:** [யோவு தாம் கடவுளை எதிர்த்து முறையிட நியாயம் இருக்கிறது என்கிறார் (1–6). தீயோர் அமைதியாகவே செழித்து வாழ்வதைச் சுட்டிக் காட்டுகிறார் (7–18). தீயோருக்கு உரிய தண்டனையை அவர்களுடைய பிள்ளைகள் அனுபவிக்கும் என்று சொல்வதும் தமது கேள்விக்குத் தக்க விடையாகாது என்று குறிப்பிடுகின்றார் (19–21). நல்லவர்களோ தீயவர்களோ எல்லோருக்கும் ஒன்றுபோல் சாக்காடு வருகிறது; தீயவர்கள் கேடு நேராமல் தப்பி அமைதியாகவே இறக்கிறார்கள். வாழ்நாளெல்லாம் துன்பமே கண்டு வெறுத்த உளத்தோடு இறப்பவனுக்கும் முடிவு அதே சாக்காடுதான் (22–26). தீயவன் மாண்டுவிட்டான் என்று குறிப்பிடுவதில் பயனில்லை (27,28). தாம் குறிப்பிடும் அனுபவ உண்மையை வழிப்போவார் எவரும் சொல்வர்; ஆதலால் நண்பர்கள் கூறும் ஆறுதல்களும் விடைகளும் வெறும் பொய் என்று முடிக்கிறார் யோவு (29–34).]

*21:1.* அதற்கு யோவு கூறிய மறுமொழி:

*2.* ''காது கொடுத்துக் கேட்கநான் சொல்வதை;
ஈதுஎனக்கு உங்கள் ஆறுதல் ஆகுக.
*3.* பொறுங்கள், என்னைப் பேச விடுங்கள்;
பேசிநான் முடித்தபின் பேசுக கேலி.
*4.* மனிதனை எதிர்த்தா மனக்குறை எனக்கு?
பின்னைநான் பொறுமை பிழைத்தலா காதோ?

---

*2.* எனக்கு—தெளிவுக்காகச் சேர்த்தது; மூலம் ''உங்கள் ஆறுதல்கள்'' என்பது மட்டுமே. AB, ''the solace you give.'' RSV, மூலத்தில் உள்ளபடி விட்டுள்ளது. நண்பர்கள் பேசாமல் இருந்து தமது முறையீட்டைக் கவனமாகக் கேட்டாலே போதும், அதுவே தமக்கு ஆறுதலாக அமையும் என்பது யோவின் கருத்தாகும்.

*3.* பேசுக—மூலத்தில் இது மட்டும் இக்கண்ணியில் ஒருமையாக உள்ளது; ஒரே ஒரு எபிரேயச் சுவடியில் மட்டும் பன்மையாக இருக்கிறது. சீரியா, கிரேக்க, லத்தீன் மொழிபெயர்ப்புக்களிலும் பன்மையே. ஒருமையே மூலபாடம் என்றால் யோவு இக்கண்ணியில் குறிப்பிடுபவர் சற்றுமுன் பேசி முடித்த சோப்பார் என்று சொல்லலாம். யோவின் மன உறுதி தமக்குச் சற்றும் பிடிக்காமல் பதற்றம் அடைந்து தீயோரின் அதோகதியை விரைந்து படம் பிடித்துக் காட்டிய சோப்பார் இன்னும் தமது வேகம் தணியாமல் மேலும் வாய்திறக்கத் துடித்துக்கொண்டிருந்தார் போலும்.

5. பாருங்கள் என்னைப் பார்த்துப் பதறுங்கள்;
கையால் வாயில் அடித்துக் கொள்ளுங்கள்.

6. நினைத்தாலே திடுக்கிட்டு
மேலெல்லாம் நடுங்குகின்றது.
7. தீயோர் இன்னும் வாழ்வதேன், அவர்கள்
வயதொடு செல்வமும் பெருக வளர்வதேன்?
8. அன்னார் வழிமரபு அருது தொடரும்;
கண்முன் பாகக் கால்வழி நிலைக்கும்.
9. அஞ்ச வருவதொன்று இல்லை அவர்மனை;
இல்லை அவர்களுக்கு இறைவன் பிரம்படி.
10. அவர்தம் காளை பிசகாது பொலியும்,
அவர்தம் பசுவும் தவருது ஈனும்.
11. மந்தைகள் போல்அவர் மகவுகள் பெறுவர்;
அந்தப் பிள்ளைகள் ஆடுவர் துள்ளி.
12. முழவும் யாழும் குழையப் பாடுவர்;
குழலும் இசையக் கும்மா ளந்தான்.

---

5. கையால் . . . கொள்ளுங்கள்—AB; திகைப்பும் வியப்பும் அச்சமும் காட்டும் செயல். RSV, JB—பொத்திக்கொள்ளுங்கள்.

6. மேலெல்லாம்—உடம்பெல்லாம்; மூலம், "என் ஊன்."

7. செல்வமும்—AB; RSV, JB, "வலிமையும்."

8. RSV, "அவர்களுடைய முன்னிலையில் அவர்கள் பிள்ளைகள் நிலைத்திருக்கிருர்கள்."

"அன்னார் வழிமரபு அருது விளங்கும்;
பெற்றோர் தாமும் பிரியாது இருப்பர்;
பிள்ளைகள் அவர்கள் கண்முன் உள்ளனர்" என்று மூவடிக் கண்ணியாக மொழிபெயர்ப்பாரும் உள்ளனர்.

வில்தாது (18:5–21இல்) கூறியது உண்மை அன்று என யோவு இது முதலான கண்ணிகளில் மறுத்துரைக்கிருர். யோவு தம் பத்து மக்களையும் இழந்தவர் என்பதை இங்கு நினைவில் கொள்க.

9. பிரம்படி—கண்டித்துத் திருத்தும் தண்டனைகளைக் குறிக்கும்.

10. தவருது—AB, "without loss."
JB—"அவர்கள் காளைகள் பொலியுங்காலை
பிசகுகள் நிகழ்வ தில்லை; பசுக்களும்
ஈனும் காலம் சினைசிதை யாவே."

11. பெறுவர்—AB; RSV, "send forth."
JB—"அவர்கள் தங்கள் குழவிகள் தம்மை
ஆட்டுக் குட்டிகள் போலத் துள்ளி
ஆட விடுகின் ருர்கள் . . ."

12. யாழ்—நமது நாட்டு யாழ் அன்று; lyre.
பாடுவர்—தீயோர் (7) பாடுவர். அடுத்த கண்ணியின் வினைச் சொற்களுக்கும் "தீயோர்"தான் எழுவாய்.

13. வசதி கொழிக்க வாழ்வர், வாழ்ந்து
சடுதியில் பாதலம் சார்ந்திடு வாரே.
14. இவர்கள்தாம்
கடவுளை நோக்கித் 'தூரப் போஓம்,
உமது நெறிமுறை அறிய விரும்போம்.
15. பரமன்யார், அவர்க்குயாம் பணிசெய் வதற்கு?
அவரை வேண்டியாம் அடையும் பயன்என்?'
என்றுசொன் னவர்கள்.
16. அவர்தம் செழிப்புஅவர் கைகளில் இல்லையா?
தீயோர் கருத்துஅது தீண்டுவேன் அல்லேன்.
17. தீயோர் விளக்கு தீய்வதும், அவர்களை
அழிவு சூழ்வதும், அவரது சினம்எழ
அவர்கள் வருந்தலும் அடிக்கடி நிகழ்பவோ?
18. அலைக்கழி காற்றினில் அகப்படு துரும்பெனப்
புயலினிற் சிக்கிய பதரெனப் போவதும்?

---

13. சடுதியில்—நோய் நொடியாகக் கிடந்து அழுந்தாமல் சட்டென்று, என்பது கருத்து. அதே பொருளில், RSV, JB 'அமைதியாக' என மொழிபெயர்த்துள்ளன.

JB (12,13)—''மேள தாளமும் யாழும் குழலும்
முழங்கும் ஓசைக்கு இசையப் பாடிக்
களிப்பர்; களித்தே வாழ்நாள் முடிப்பர்,
அமைதி யாகவே பாதலம் எய்துவர்.''

14–16. நேர்மையானவன் கடவுளுடைய நெறிமுறைகளை அறிய விழைகின்றான் (சங். 24:4 காண்க), வாழ்வுக்குச் செல்லும் வழியைத் தேடுகின்றான் (சங். 15:11 காண்க). ஆனால் தீயோர் அவற்றை நாடாமல் தேடாமல் இருக்கின்றனர், இறைவன் வேண்டாம் என்கின்றனர், ஆயினும் அவர்களுடைய செல்வச் செழிப்புக்குக் குறைவில்லையே என்று யோவு குறிப்பிடுகிறார்.

15. என்று சொன்னவர்கள்—முந்திய கண்ணியிலிருந்து இங்கு பெயர்த்தது.

16. RSV மொழிபெயர்ப்பைத் தழுவியது. இந்தக் கண்ணிக்கு இந்த இடத்தில் என்ன பொருள் என்ற ஐயம் உண்டு. இடம் பெயர்ந்து தவறுதலாக இங்கு வந்து கிடக்கின்றது என்பார் சிலர். இடைச் செருகல் என்பார் சிலர். சில சொற்களை மாற்றிப் பொருத்தமான பொருள் காண முயல்வார் சிலர்.

எ–டு. JB—''தமதுநற் பேறு தம்இரு கைகளில்
தான்என நின்றவர் அல்லரோ, அவர்கள்
எண்ணித் துணிந்த கருமங் களிலே
இறைவனுக்கு இடம்ஒன்று இருந்தது உண்டா?''

ஆனால், ''தீயோர் தங்களுடைய வாழ்வுக்கெல்லாம் தங்கள் திறமையே காரணம் என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். நிலைமையும் அப்படி நினைக்க இடம் கொடுக்கின்றது. ஆயினும் அது என் கருத்து என எண்ணாதீர்கள்'' என யோவு தம் மனநிலையை விளக்குகிறார் என்று கொண்டால் பொருந்தும். அப்பொழுது அவர் மன உளைச்சலுக்கான விளுவும் விளங்கும்.

17,18. வில்தாது கூறியதை நினைவுப்படுத்தி (18:5,6 காண்க) மறுக்கிறார் யோவு.

19. பிள்ளைகள் படவைத் துள்ளார் கடவுள்?
அவனுக்கு அளக்க வேண்டும், அறிவான்.
20. தன்கேடு தன்கண் தான்கா ணட்டும்;
தலைவர் வெஞ்சினம் தான்பரு கட்டும்.
21. தனக்குப் பிறகு, தன்னுடை வாழ்நாள்
கழிந்தபின் குடும்பக் கவலைப் படுவனோ?
22. கடவுளுக்கு அறிவு கற்றுக் கொடுப்பனு?
உயர்ந்தோர் அவர்க்கே உரைப்பனு அறமே?
23. குறையா வலிமையும் எல்லா வசதியும்
நிறைவாம் உளத்தொடும் இறக்கிறுன் ஒருவன்;
24. கொழுத்த அவன்தொடை குலைய வில்லை,
எலும்புகள் சோறும் உலர வில்லை.
25. இன்னொ ருத்தனே இன்பமே இன்னதென்று
அறியான் கசந்த உளத்தொடு மடிகிறுன்.

---

19. ஒருவனுடைய ஒழுக்கக்கேட்டினுல் மூன்றும், நாலாம் தலைமுறை வரை அவன் பிள்ளைகள் துன்புறுவர் என்ற பண்டைய கொள்கையை யோவு இங்கு குறிப்பிடுகிறுர் (யாத். 34:7; உபா. 5:9 காண்க). பிற்காலத்தில் அதற்குச் சில வரையறைகள் கூறப்பட்டன (உபா. 24:16; எரெ. 31:29; எசேக். 18 காண்க). அக் கொள்கையின் குறைபாட்டை யோவு எடுத்துக் கூறுகிறுர். அருள. 9:1—3 காண்க. இறந்து பாதலம் அடைந்தவன் தன் பிள்ளைகளின் சிறுமை பெருமைகளை அறியான் என்று யோவு ஏற்கெனவே (14:21,22இல்) கூறியதும் கருதுக. (சங்கத். 9:5 காண்க.) (AB).

20. தலைவர்—ஷடாய்.

22. இதுவும் 16ஆம் கண்ணிபோல் இடம் தப்பிக் கிடக்கும் கண்ணி என்பர். யோவு கூறியதன் உண்மையை உணராது படிஎடுத்தவரின் இடைச் செருகற் குறிப்பு என்பாரும் உண்டு. நண்பர்களை இங்கு யோவு குத்திக் காட்டுகிறுர் என்று கொள்வாரும் உண்டு. ஆனுல் 'இது கடவுள் மட்டுமே விடையிறுக்கக்கூடிய மர்மம், எனக்குத் தெரியவில்லையே' என்பது யோவின் வேதனை என்றுல் பொருந்தும்.

உயர்ந்தோர் அவர்—கடவுள் (AB); ''விண்ணவர்கள்'' என்பது RSV, JB.

JB—''ஆனுல் கடவுளுக்கு அறிவுரை கூறி
ஞானம் கற்றுக் கொடுக்கவல் லார்யார்?
உயர்ந்த விண்ணில் உள்ளோர்க் கெல்லாம்
அறங்கூறு அதிபதி அவரே, அன்றே?''

சிக்கலுக்கு இறுதித் தீர்வு தர்க்க நியாய அறிவு நிலையில் இல்லை என்பதை 16,22 கண்ணிகளில் காணலாம்.

23. ஒருவன் சாவுக்கும் அவன் வாழ்க்கைத் தரத்திற்கும் தொடர்பு இருப்பதாகத் தெரியவில்லை; செல்வர் ஏழையர் எல்லோரும் ஒன்றுக அழிக்கப்படுகின்றனர் என்ற கருத்தை யோவு இங்கு குறிக்க வருகிறுர்.

24. தொடை—AB; RSV, உடம்பு. எபிரேயச் சொல்லின் பொருள் முற்றும் தெளிவாகத் தெரிந்திலர் யாரும் (AB குறிப்பு காண்க).

ஈரமுள்ள எலும்புகள் உடல் உரத்துக்கு அடையாளம் என்பர் (காண்க பழ. 3:8).

26. ஒன்றாய் இருவரும் மண்ணிற் கிடப்பர்,
புழுக்கள் அவர்தம் போர்வை யாக!

27. தெரியும் உங்கள் நினைப்புகள் எனக்கு,
நீங்கள் எனக்கெதிர் தீட்டும் சூழ்ச்சிகள்.
28. சொல்வீர்கள் நீங்கள் 'கொடுங்கோலான் தான்வாழ்ந்த
இல்லெங்கே, தீயோன் இருப்புளங்கே?' என்று.
29. வழிப்போ வார்களை வினவிய தில்லையா?
அவர்குறிப் பவைபுதி தாய்ப்பட வில்லையா?
30. 'அழிவுநாள் தீயோர்க்கு இல்லை; அவர்கள்
வெஞ்சின நாளினில் விடுபட் டார்'என.
31. ஆர்அவன் முகத்தெதிர் அவன்வழி உரைப்பார்,
அவன்செயற் படியே அவனுக்கு அளப்பார்?

---

28. யோவின் உடைமைகளைப் பறித்துக்கொண்ட படையெடுப்பாளனைக் குறிப்பது போலும். கொடுங்கோலான்—AB; RSV, JB, "பிரபு."

29. வழிப்போவார்கள்—வழியில் போகிற யாரைக் கேட்டாலும் சொல்வார்களே என்பது குறிப்பு. பல ஊர்கள், நாடுகள் சென்று வந்தவர்கள் என்று கொள்ளத் தேவையில்லை (AB).

JB—"நாலுஊர் சென்றுவந் தவர்களை நீங்கள்
கேட்ட தில்லையா? கேட்டும் அவர்சொல்
பொருள்சரி யாகப் புரியவில் லையா?"

RSV—"அவர்கள் சாற்றுவதை நீங்கள் ஏற்றுக்கொள்வதில்லையா?"

30. சொல் பிறழாமல் பொருள் விளங்கும்படி மொழிபெயர்ப்பதற்குக் கடினமான கண்ணி என்பர். தீயோன் வாழான், அவன் தன் காலம் வருமுன் கல்லறை அடைவான், அவன் அழிவு திண்ணம் என்றெல்லாம் நண்பர்கள் அடுக்கி உரைத்த தற்கு மறுப்பாக யோவு இங்கு பேசுகிறார் என்பது தெளிவு. அதற்கு ஆதாரமாக உலக அனுபவத்தை அவர் சுட்டிக் காட்டுகிறார். 'நாலுபேர்களைக் கேட்டுப் பாருங்கள். என்ன சொல்கிறார்கள்? அழிவுநாள், வெஞ்சினநாள் என்று பெரிய வர்கள் கூறுவதெல்லாம் தீயவர்களுக்கு இல்லை, கடவுள் அவர்களை விடுவித்து விட்டார்—என்று இடக்காகவும் சடைவாகவும் குறைப்பட்டுக்கொள்வதுதான் பொதுமக்களிடையே கேள்விப்படுவதாகும். இது உங்களுக்குப் புதிதாகப் படவில்லையா?' என்பது யோவின் இடிப்பு. ஆகவே, நண்பர்களின் பேச்சு உலக அனுபவத்துக்கு முரணாக உள்ளது என்பது அவர் கருத்து. இப்பொருள் விளங்கு மாறு AB, RSV மொழிபெயர்ப்புக்கள் உள்ளன. தமிழ் இலக்கியக் கழகத்தின் திருத்திய பதிப்பிலும் JBயிலும் உள்ளது வேறு:

JB—"அழிவுநா ளுக்கென விட்டுவைத் துள்ளார்
தீயோன் வெஞ்சின நாள்எடு படுவான்."

இவ்வாறு இருபொருள் படும்படியாகவே ஆசிரியர் இயற்றினார்போலும்!

31. மீண்டும் தமது முக்கிய கருத்துக்கு வருகிறார் யோவு. அவர் உள்ளத்தைக் குடையும் கேள்வி இது. மேலே 6, 7, 19, 20 கண்ணிகளைக் காண்க. இதற்கு விடையை இறைவனுடைய உரையாக வரும் 40:7–14இல் காணலாம்.

32\. தூக்கிச் செல்வர் கல்லறை நோக்கி;
காக்கும் சமாதி காவல் அவன்மேல்.
33\. பள்ள நிலத்து
மண்ணுங் கட்டிகள் மதுரமாம் அவற்கு;
எல்லா மாந்தரும் எய்துவர் அவன்பின்
எண்ணிறந் தார்அவன் முன்நடந் ததுபோல்.
34\. வெற்றுவீண் ஆறுதல் விளம்புதல் ஏனோ?
வெறும்பொய், மோசடி உங்கள் விடைகளே.''

---

32\. தீயோர் பொதுவாகச் சிறப்பாக அடக்கம் செய்யப்படுகிறார்கள், அவர்கள்மேல் பெரிய சமாதி எழுப்பப்படுகிறது என்று நண்பர்களுக்கு யோவு இடித்துரைக்கிறார்.

33\. பள்ள நிலம்—valley; பொதுவாகப் பள்ள நிலத்தில் அடக்கம் செய்வது வழக்கம் (உபா. 34:6 காண்க).

'ஆக எல்லாம் முடிந்தது, இனிமையாக வாழ்ந்தான், இனிதே போய்ச் சேர்ந் தான்; இவனைப்போல எத்தனையோ பேர் இதற்கு முன்னும் நடந்தார்கள், இனியும் கோடானுகோடிப் பேர் நடக்கப்போகிறார்கள்' என்ற சடைவும், கிண்டலும் யோவின் பேச்சிலே ஒலிக்கின்றது.

34\. 'ஆகவே, சும்மா இருங்கள்; கடவுளது நீதியை நிலைநாட்ட உங்களது பித்த லாட்டம் தேவையில்லை' என்கிறார்.

# 22

# இனந்தெரிகின்றதா, இருண்ட வழி இது?: ஏலிப்பாசு

**22:** [இத்துடன் உரையாடலின் மூன்றுவது சுற்று தொடங்குகின்றது. ஏலிப்பாசு, மனிதனுடைய நேர்மையினுலும் பக்தியினுலும் கடவுளுக்கு ஆகும் நன்மை ஒன்றும் இல்லை என்று சுட்டிக் காட்டுகின்றுர் (1–3). பக்திக்காகவா யோவு தண்டனை அடைகின்றுர்? இல்லை (4). உண்மையாகவே, அவர் மிகவும் கெட்டவராக இருக்க வேண்டும்; ஏழைகளையும் விதவைகளையும் அனுதைகளையும் அவர் ஈவிரக்கம் இல்லாமல் நடத்தியிருக்க வேண்டும்; அதனுல்தான் அவருக்கு இந்தத் துன்பமெல்லாம் (5–11). கடவுள் எங்கோ இருப்பவர் என்று நினைத்துக்கொண்டு அவரைப் புறக்கணித்து மனம் போன போக்கில் செல்வது தீயோர் வழி; தீயோரைக் கடவுள் தண்டியாமல் விடார் (12–20). ஆகவே யோவு தமது குற்றங்களுக்கு மனம் நொந்து இறைவனுக்குப் பணிந்து, பொன்னையும் பொருளையும் மதியாமல் கடவுளையே மதித்துப் போற்றட்டும், அப்போது மீண்டும் நலம் பெறுவார், மற்றவர்களுக்காகவும் கடவுளிடம் வேண்டும் பெரும் பேறும் உடையவராவார் என்று முடிக்கின்றுர் ஏலிப்பாசு (21–30).]

*22:1. அதற்குத் தேமாஊர் ஏலிப்பாசு கூறினுர்:*

*2. ''மானிடன் கடவுளுக்கு ஆன நன்மைஎன்?*
*ஞானியும் அவருக்கு ஒருபயன் ஆவனே?*
*3. நல்லவர் நீங்கள், தலைவர்க்கு என்நலன்?*
*உங்கள் நடத்தை உத்தமம், அவர்க்குஎன்?*

---

2. நன்மை—AB; RSV, ''ஆதாயம், இலாபம்.''

ஞானியும் . . . ஆவனே?—AB மொழிபெயர்ப்பைத் தழுவியது.

JB, (RSV)—''ஞானியின் ஞானமும் ஞானிக்கே பயன்.''

மனிதனை ஏன் கடவுள் இவ்வளவு அக்கறையாய்க் கண்காணிக்க வேண்டும், அவனை அவர் சும்மா விட்டுவிட்டால் என்ன என்று யோவு கேள்வி கேட்டதை நினைவில் கொண்டு (7:20 காண்க), ஏலிப்பாசு பேசத் தொடங்குகிறுர். உண்மை, கடவுளுக்கு மனிதனுல் எவ்வகை இலாபமும் இருக்க முடியாது; மிகச் சிறந்த மனிதனும்—அதாவது ஞானியும்—தன் பேரறிவால் அவருக்குச் செய்யக்கூடிய நன்மை ஒன்றும் இல்லை.

3. (நல்லவர் நீங்கள்) 'எனில்' என்பது தொக்கி நிற்கிறது. அடுத்த அடியிலும் இப்படியே. தலைவர்—ஷடாய்.

4. உங்கள் பக்திக் காகவா உங்களைக்
கண்டிக் கின்றார், தீர்ப்பிடு கின்றார்?
5. பெரிதே அன்றோ உங்கள் தீமை?
வரையிலை அலவோ உங்கள் பழிகள்?
6. முறையின்றி—உடன்பிறப் புகளின் அடகுகொண் டீர்கள்;
உடையிலார் உடுப்பினை உரிந்துவிட் டீர்கள்.
7. தகைத்தவன் தனக்குத் தண்ணீர் தரவிலை;
பசித்தவர்க்கு உணவு மறுத்துவிட் டீர்கள்.
8. வையம் சொந்தமாய் ஆளும் வலியவர்
மண்வாழ் வோருள் மாபே றுடையவர்!
9. விதவைகள் வெறுங்கையாய்ப் போகவிட் டீர்கள்;
அனாதைகள் கைகளை முறித்துவிட் டீர்கள்.

---

JB (3–5): ''ஒப்பில் லாதவர் உங்கள் நேர்மையால்
பெற்றுக் கொள்ளும் நன்மை என்ன?
உங்கள் நடத்தை உத்தமம் எனினே
அவருக் காகும்ஆ தாயம் யாது?
உங்கள் பக்திக்காக உங்களைத்
தண்டிப் பாரோ, இழுத்துக் கொண்டுபோய்த்
தீர்ப்பிடு வாரோ? மாட்டார். உங்கள்
வகைவகை யான தீமைக் காகவே,
தொகை வரம்பு அறியாக் கொடும்பழிக் காகவே.''

5. இரண்டாமடி RSV, ''உங்கள் பழிகளுக்கு எல்லையே இல்லை.''

6. முறையின்றி—AB; RSV, "for nothing."
JB—''உடன்பிறப் புகளிடம் வலியவாங் கினீர்கள்
அடகுகள் தேவை அற்றவை நீங்கள்.''
அடகாகக் கொண்ட ஆடையைப் பொழுது அடையுமுன் திருப்பிக் கொடுத்திட வேண்டும் என்பது சட்டம் (யாத். 22:26 காண்க).

உடையிலார் உடுப்பு—உடையில்லாதவருக்கு ஏது உடுப்பு என்று கவிநயம் தெரிந்தோர் கேளார்.

பிறருக்குக் காட்டவேண்டிய அன்பைக் காட்டாமை, நீதியைப் புறக்கணித்தல் ஆகிய குற்றங்களை யோவு செய்திருக்கவேண்டும் என்று ஏலிப்பாசு முடிவுகட்டிப் பேசுகிறார். அத்தகைய தீமைகள் பொல்லாப் பாவங்கள் என்பதே இறைவாக்கினர்களின் அறிவுறுத்தலும்.

8. இது யோவைச் சொல்லாமல் சொல்லி இடித்துரைப்பதாகும். எளியவர் நிலங்களை அடித்துப் பிடித்துப் பறித்துக்கொண்டவர் என்ற குறிப்பு உண்டு. விளக்கமாக மொழிபெயர்க்கிறது JB:
''வறியவர் நிலங்களைக் குறுக்கிக் குறுக்கி
ஒன்றும் அற்றவர் ஆக்கி உங்கள்
தோழனை அவற்றில் கொண்டு வைத் தீர்கள்.''
RSV—''வலிமை உடையவன் கையினில் நிலமாம்,
அவன்தய வுடையவன் அதிலே குடியாம்.''

9. முறித்து—AB, JB; RSV, "நசுக்கி," ''நைத்து.''
யாத். 22:21; உபா. 24:17; இசை. 1:17 காண்க.

10. ஆகையால் கண்ணிகள் உங்களைச் சுற்றின;
திடுக்கென வரும்கிலி நடுக்குகின் றதுவே.
11. கண்ணே தெரியாக் காரிருள் சூழ்ந்தது;
தண்ணீர்ப் பெருக்கு தலைக்குமேற் போயது.

12. விண்ணின் மேலவர் அல்லரோ கடவுள்?
உச்சிமீன் காண்க, எத்துணை உயரம்!
13. ஆகையால் சொல்வீர்கள், 'அறிவரா கடவுள்?
கார்முகில் ஊடுஅவர் கணக்கிட முடியுமா?
14. முகில்கள் தடுக்கும், முடியாது காணல்;
ககனத்து ஓரம் நடக்கிறார்' எனவே!
15. இனந்தெரி கின்றதா, இருண்ட வழிஇது
பயனிலாப் பதடிகள் பயின்ற பாதை?
16. அடிப்படை யதனை வெள்ளம் அடித்திடக்
குறித்தநாள் முன்னரே பறிபட் டொழிந்தனர்,
17. கடவுளை நோக்கி, 'விடுக! பரம்பொருள்
எமக்குஎன் செய்ய முடியும்?'என் றவர்கள்.

---

10. நடுக்குகின்றது—AB; RSV, "overwhelms." 19:6 காண்க.

11. JB, (RSV)—"ஒளியும் இருளாய் மாறிவிட்டது, உங்கள் கண்கள் கூசுகின்றன, வெள்ளம் வந்து உங்களை மூழ்கடிக்கின்றது." பாதல நிலை இது. 38:34 காண்க.

12. விண்ணின் மேலவர்—RSV; AB, "உச்சி வான் உள்ளவர் அல்லரோ கடவுள்?"

13. அறிவரா?—AB, RSV, JB, "கடவுளுக்கென்ன தெரியும்?"

12, 13 Dahood: "விண்ணின் மேலவர் அல்லரோ கடவுள்?
உயர்ந்த உடுக்களின் உச்சியுங் காண்பவர்;
எனினும் சொல்வீர்கள், 'இறைக்குஎன் தெரியும்?
அடர்முகில் ஊடுஅவர் ஆள முடியுமா?' என."

14. தடுக்கும்—AB, மறைக்கும்.
ஓரம்—மூலம், 'வட்டம்'; RSV, "கூரைமேல்."

15. இருண்ட வழி—ABயை ஒட்டியது. கடவுள் எல்லாவற்றையும் கடந்து உள்ளவர் (12) என்ற உண்மையைத் தீயவர்கள் தங்கள் சார்பாகத் திரிப்பர்; கடவுளே இல்லை என்றும், இருந்தாலும் மனிதரைப்பற்றி அவருக்குக் கவலை இல்லை என்றும் கூறுவர். கடவுள் எல்லாவற்றுக்கும் மேலாக இருப்பதால் எல்லாவற்றையும் அறிபவர் எனப் பக்தியுள்ளோர் காண்பர். யோவு தீயோர் போலச் சொன்னதாக நினைத்துக்கொண்டு ஏலிப்பாசு பேசுகிறார். ஆகவே அவர் போம்வழி தீயோர் வழி, இருண்ட வழி என்கிறார். ஆனால் வழக்கமான மொழிபெயர்ப்பு 'பழைய, தொன்மையான வழி' என்பதாகும்:

JB, (RSV)—"இன்னுமா நீங்கள் தீயோர் சென்ற
தொன்மை வழியில் தொடருவீர்கள்?"

16. அடிப்படை—முன் சொன்ன 'பயனிலாப் பதடிகளுடைய' அடிப்படை. அடிகளை முன்பின்னாக மாற்றியுள்ளேன், தெளிவு கருதி. எழுவாய் 17ஆவதிலுள்ள "என்றவர்கள்,"

18. இவர்மனை நன்மை நிரப்பினர் அவரே:
பக்தியற் றார்மனம் பற்றே னுக!
19. நல்லோர் பார்ப்பர், பார்த்து மகிழ்வர்,
நவையிலார் எள்ளி நகைப்பர் அவர்களை,
20. 'அவர்கள் வாழ்வு அற்றது பாரீர்;
அவர்கள் வெறுக்கை அழல்உண் டது' என.

21. இணங்குக அவரோடு, எய்துக அமைதி;
திருவே உங்களைச் சேரும் அதனால்.
22. அவர்வாய் அறிவுரை அகத்தில் ஏற்க;
அவர்சொல் நெஞ்சொடு பதித்து வைக்க.
23. மீள்க அவர்பால், சீர்பெறு வீர்கள்;
அகத்தின் தீமையை அகற்றித் தொலைக்க.
24. பொன்னைப் புழுதியில் போடுக, உவரியை
ஓடைக் கூழாங் கற்களொடு வீசுக.

---

18. இதுவும் இடைச்செருகல் என்று ஐயுறுவார் உளர்; ஆனால் இதை இடைப் பிற வரல் என்று கொள்வது பொருத்தமாகும்: ஏலிப்பாசு இடையில் தமது விருப்பத்தைச் சொல்லிக்கொள்கிறார், தாம் எடுத்த வாதத்துக்கு அது அவசிய மன்று என்றாலும்.

JB மொழிபெயர்ப்பு வேறு:

"இவர்கள் தங்கள் எண்ணங் களிலே
அவருக்கு இடமிலை யாக விலக்கிப்
போயினர் எனினும்இத் தீயவர் வீடுகள்
சீர்பல நிரம்பச் செய்தவர் அவரே."

20. அவர்கள்—AB; RSV, "நம் எதிரிகள்." பாரீர்—RSV.
"திண்ணமாய்" (AB, RSV) இங்கு விடப்பட்டது.
வெறுக்கை—செல்வம் என்பது பொருள்; இந்த இடத்தில் 'surplus' என்ற AB மொழிபெயர்ப்புக்கு மிகப் பொருத்தமாகும்.

21. திரு—Blommerde takes the feminine nominal form ṭôvāh as a divine title, "the Good One." "then your gain will be the Good One" (AB). இவ்வகையில் நாம் இங்கு "திரு" என்பதற்குப் புது வண்ணம் சேர்த்துப் பொருள் கொள்ளல் வேண்டும்.
RSV—"அதனால் உங்களை அடையும் நன்மை."

22. அகத்தில்—தமிழில் சேர்த்தது, வலியுறுத்தும் பொருட்டு.
JB, "மகிழ்வாய் ஏற்க."

23. சீர் பெறுவீர்கள்—AB; மூலம், "you will be built (up)."
JB, RSV, LXX—பணிந்த உளத்தொடு பரமனிடத்தே திரும்புவீர்களேல்...
அகத்தின்—மூலம், "உங்கள் கூடாரத்திலிருந்து."

24. உவரி—ஓஃபீர் என்னும் இடத்திலிருந்து வந்த தங்கத்துக்கு அந்த ஊரின் பெயரே ஆகு பெயராக வழங்கலாயிற்று. இந்தியா, அரேபியா, ஆப்பிரிக்கா எனப் பல இடங்களில் அந்த உவரி ஊரைக் காண முயல்வர்; இன்னும் முடிவு இல்லை.

25. தலைவனே உங்கள் தங்கம் ஆகுக,
மலையாய் அடுக்கிய வெள்ளி ஆகுக.
26. அப்போது ஐயன்பால் அகமகிழ் வீர்கள்;
கடவுள்பால் முகத்தை நிமிர்த்து வீர்கள்.
27. நீங்கள் வேண்ட, அவரும் கேட்பார்;
நேர்ந்த நேர்ச்சி நிறைவேற்று வீர்கள்.
28. ஆணை யிடுவீர்கள் அதன்படி நடக்கும்;
உங்கள் பாதை ஒளிமய மாகும்.
29. தாழ்த்துவர்; உயர்த்துதல் தங்கள் ஆணையேல்
தாழ்ந்தவன் தன்னைத் தாமும் காப்பார்.
30. களங்கமுற் றானைக் கட்டவிழ்த் திடுவார்;
கறையிலா உங்கள் கைகளால் பிழைப்பான்.''

---

25. மலையாய்—AB, ''piled high''; மூலத்தில் உள்ள அரும்பதத்துக்கு ஊகமாகக் கொண்ட பொருள்.

26. ஐயன்—ஷடாய்.
முகத்தை நிமிர்த்துவீர்கள்—அகத்தில் ஐயமின்றித் துணிந்து. 10:15; 11:15 காண்க.

28. ஆணையிடுவீர்கள் . . . நடக்கும்—AB; JB—''எடுப்பதெல்லாம் இனிது நடக்கும்.''

29, 30. AB மொழிபெயர்ப்பைப் பின்பற்றியவை. ஆனால் மூலத்தில் இருப்பதை மாற்றி வேறு பொருள்படத் தருகின்றன JB, RSV.

JB—''ஏனெனில், பெருமை யடிப்பவன் பிதற்றல்வீ ணாகக்
கவிழ்த்துப் போடும் அவரே, கண்களைத்
தாழ்த்திநிற் பவனைக் காப்பாற்று பவரும்.
ஒருவன் மாசற் றோனெனின் அவனை
விடுவித் தருள்வார், உங்களுக்கும்
விடுதலை அளிப்பார், உங்கள்
கைகள் கறைபடா திருப்பின் அவரே.''

AB கூறும் விளக்கம் வேறு. நேர்மையுள்ளவன் வேண்டுதலைக் கடவுள் கேட்பார்; நல்லவர்கள் நலம் கருதித் தீயவர்களைக் காக்க வேண்டுமென்று கேட்டாலும் இணங்குவார், அதற்காகத் தமது மனத்தை மாற்றிக்கொள்ளவும் தயங்கார் என்ற கருத்தை அடிப்படையாகக்கொண்ட கண்ணிகள் இவை. (ஆதி. 18:21–33; எசேக். 14:13–20 காண்க).

ஆக, மனிதன் நல்லவனாக நடந்தால் அதனால் கடவுளுக்கு நன்மையில்லை, அம் மனிதனுக்கும் மாசற்ற பிறருக்குமே நன்மை என்று அழகாக முடித்துரைக்கிறார் ஏலிப்பாசு.

# 23

# இருட்டில் திடுக்கென மறைந்து போகேனு?: யோவு

**23:** [யோவினது புலம்பலுக்கெல்லாம் அவர் துன்பம் குறைந்தபாடில்லை, முன்னிலும் கூடுதலாகவே தோற்றுகிறது. எனவே யோவு கடவுளை நேரில் கண்டு வழக்காட விரும்புகிறுர்; தமது வழக்கு வெல்லும் என்பது குறித்து அவருக்குச் சிறிதும் ஐயம் இல்லை (1–7). ஆனுல் கடவுளை எங்கே காண்பது (8,9)? யோவின்மேல் குற்றம் இல்லை என்பது கடவுளுக்குத் தெரியுமே; ஆயினும் இன்னது செய்வதென அவர் முடிவெடுத்துவிட்டால் அவர் திருவுளத்தை யாரால் மாற்ற முடியும் (10–13)? இந்த நினைப்புத்தான் யோவைப் பெரிதும் விலவிலக்கச் செய்கின்றது; தாம் செத்துத் தொலையக் கூடாதா என்று விழைகின்றுர் (14–17).]

*23:1. அதற்கு யோவு உரைத்த மறுமொழி:*

*2. ''இன்றும் எதிர்ப்பாய் எழும்என் பேச்சு;*
*என்றன் கைம்மைநான் புலம்பியும் கடுஞ்சுமை.*
*3. எங்கே அவரைக் காண்பது, அவர்தம்*
*இருக்கைமுன் செல்வது யான்அறி யேனு?*
*4. வழக்கினை அவர்முன் எடுத்துவைப் பேனே,*
*வாய்நில் லாவே ஞாயவா தங்கள்.*

---

*2. இன்றும்—எனவே உரையாடல் பல நாள்களாக நடந்திருக்க வேண்டும். இம்முதலடி AB மொழிபெயர்ப்பை ஒட்டியது; அது மூலத்தில் உள்ளபடி இயற்றிய தாகும். எனினும் மூலபாடம் பொருள் முற்றும் விளங்கக் கடினமாக உள்ளது, சிதைந்திருக்கலாம் என்கிறது AB.*

*இரண்டாவது அடியும் கடினமே. மூலம்: ''என் புலம்பல்மேல் என் கை கனமாக உள்ளது.'' கிரேக்கம், சீரியாமொழி, RSV ''அவர் கை'' என மாற்றி யுள்ளன. ''என் புலம்பல்மேல்'' என்பதன் பொருள் ''நான் புலம்பினுலும்.'' AB, RSV—''என்னை அவர் கை அழுத்தும் நான் புலம்பியும்.''*

*''என் கை'' என்பதை மாற்றுமல் நான் மொழிபெயர்த்த வழி வருமாறு: 20:22இல் ''கை'' என்பது ''force, power'' என்ற பொருளில் வந்துளது (AB); அங்கு கைம்மை (=சிறுமை) என்று பொருத்தமாக அமைந்தது. வலிமை கொடுமையாக, கைக்க வைப்பதாக, சிறுமையாக மாறுவது எளிதே. 16:6இல் ''பேசினுல் என் வலி தணிவதில்லை'' என்முர். இங்கு ''என்றன் கைம்மை நான் புலம்பியும் கடுஞ்சுமை'' என்கிறுர். இது எனது ஊகமே தவிர முடிவு அன்று.*

*3, 13:3 காண்க.*

5. எனக்குஅவர் மறுமொழி என்ன சொல்வார்
என்றுநான் காண்பேன், எண்ணி அறிவேன்.
6. * ஆள்வைத்து எதிர்வழக் காடு வாரோ?
மாட்டார், அவரே என்சொல் கேட்பார்.
7. ஆரா யலாம்அங்கு அவரொடு நேர்மையான்;
சீராய் நீதி வெளிப்படச் செய்குவேன்.
8. முன்னே போனுல் அவர்அங்கு இல்லே;
பின்னே செல்லினும் அவர்காண் கில்லேன்;
9. இடப்புறம் தேடினும் என்கண் தென்படார்;
வலப்புறம் திரும்பினும் பார்ப்பேன் அல்லேன்.
10. ஆயின்என் நடைதான் அவர்க்குத் தெரியுமே;
புடமிட அவர்எனைப் பொன்போல் துலங்குவேன்.
11. பற்றின அவர்தம் பாதைஎன் கால்கள்;
பிறழ்ந்திலேன் அவர்நெறி, நடந்துளேன் அதன்படி.
12. அவர்நா உரைத்த ஆணைகள் மறந்திலேன்;
அவர்வாய் மொழிகளை அகத்தினில் போற்றினேன்.

13. மனம்வைத் தார்அவர், மாற்றவல் லார்எவர்?
எனநினைத் தாரோ இயற்றுவார் அதனை.

---

5. காண்பேன்—மூலத்தின்படி முதலடியில் இருக்க வேண்டிய சொல்.

6. முதலடி AB மொழிபெயர்ப்பை ஒட்டியது. கடவுள் சார்பாய் வழக்காடத் தமது நண்பர்கள் மூவரையும் போன்ற யாரும் அவருக்குத் தேவையில்லை என்ற குத்தலும் இதில் இலைமறை காய்போல் அடங்கியுள்ளது.

JB, (RSV)—''என்னொடு புரியும் இந்தவா தத்தில்
தம்முடை ஆற்றல் அனைத்தையும் என்னிடம்
காட்டு வாரோ? மாட்டார். வழக்கிடும்
எனக்குஅவர் செவிசாய்த் தாக வேண்டும்.''

7. இரண்டாமடி AB மொழிபெயர்ப்பு.

JB, (RSV)—''கண்டிப் பாகஎன் வழக்கு வெல்லும்.''

8,9. முன், பின், இடம், வலம், முறையே கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு.

10. யோவு தாம் மட்டும் கடவுளை நேரில் பார்த்துத் தமது வழக்கை எடுத்துரைத்தால், அவர் அதன் நியாயத்தைக் கட்டாயம் ஒப்புக்கொள்வார் என்று உன்னியவர், ஆனல் அவருக்குத் தாம் சொல்லித்தான் தெரிய வேண்டுமா, அவர்தாம் தமது வாழ்க்கை முழுவதையும் நன்கு அறிந்திருக்கிருரே என்பதை இங்கு கருதுகிருர்.

13. மனம் வைத்தார்—AB; RSV, ''மாற்றமற்றவர்.''

JB—''ஆயின் ஒன்றுஅவர் அறுதிசெய் திட்டால்
ஆர்அவர் மனத்தை மாற்ற வல்லார்?
எண்ணிய தெல்லாம் இயற்றி முடிப்பார்.''

என=என்ன.

14. எனது தண்டனை இயற்றி முடிப்பார்;
இனும்பல வைத்துளார் இதுபோல் வனவே.
15. ஆகையால் அவர்முன் அலமரு கின்றேன்,
நினைப்பேன், நினைத்ததும் பதுங்குவேன் அவர்க்கு.
16. என்உளம் குன்றவைத் திட்டார் கடவுள்;
அரளவைத் திட்டார் ஐயர் என்னை.
17. இருட்டில் திடுக்கென மறைந்துபோ கேனு?
இருள்அடர்ந்து என்முகம் தனைமூ டாதா?

---

16. ஐயர்—ஷடாய்.

17. CCDஐப் பின்பற்றிய AB மொழிபெயர்ப்பு.

'நான் எவ்வளவுதான் புலம்பியும் என் துன்பம் தணியவில்லை'' என்று யோவு கூறுவதாகத் தொடங்கிய இந்த அதிகாரம், ''நான் திடுமென்று செத்துப்போகக் கூடாதா?'' என்ற ஏக்கத்தோடு முடிவதன் பொருத்தம் காண்க.

24 முதல் 27 முடிய உள்ள அதிகாரங்கள் குழம்பிக் கிடக்கின்றன என்பது அறிஞர்கள் அனைவரும் ஒப்புக்கொள்வதாகும். ஆனுல் எந்தப் பகுதி எந்த இடத்தைச் சேர்ந்ததாம் என்பது பற்றி அவர்களுக்குள் கருத்து வேறுபாடு உண்டு.

வில்தாதின் மூன்ருவது உரை (25ஆம் அதிகாரம்) மிகவும் சுருக்கம்; அது அவருடைய முந்தைய உரைகளைப் போலவும் இல்லை. யோவின் மறுமொழியாக உள்ளவற்றில் பெரும்பகுதி (26:5–14; 27:8–23) அவர் மறுத்துரைத்த நண்பர்களின் கருத்துக்களாக உள்ளன. சோப்பாரின் மூன்ருவது பேச்சைக் காணேம்.

மாறிக் கிடக்கும் பகுதிகளை JB, AB இரண்டும் கிட்டத்தட்ட ஒன்றுபோல் இடம் மாற்றி முறைப்படுத்தித் தொகுத்துள்ளன. இங்கு நான் பின்பற்றியது AB முறைவைப்பாகும்.

# 24

# கடவுளோ எதுவுமே வசையெனக் கருதார்: யோவு

**24:** [வன்முறையும் எளியாரை வலியார் வாட்டலும் உலகில் தாண்டவமாடு கின்றன. ஏழைகள் படும் கொடுமைகள் பல. இருந்தும் கடவுள் எதுவுமே தவருக இல்லை என்பதுபோல் இருக்கின்ருரே. கொலையும் களவும் செய்பவர்கள் வேறு; இவர்கள் இருளை விரும்புபவர்கள், ஒளி எனில் அஞ்சி ஒளிப்பவர்கள் (1–17, 21) என்கிருர் யோவு.

24:18–20, 22–25 யோவின் பேச்சாகப் பொருந்தவில்லை; அவற்றை 27:23 உடன் இணைத்திருக்கக் காணலாம்.]

*24:1.* ''*காலம் என்பவை கடவுள்வைத் திலரா?*
*அவர்அறிந் தார்அவர் நாள்கள்ஏன் அறிகிலர்?*
*2.* *தீயோர்—எல்லைக் கல்லை எடுத்துப் போடுவர்,*
*மந்தையோடு ஆயனை மடக்கிச் செல்வர்,*
*3.* *அனுதையின் கழுதையை ஓட்டிப் போவர்,*
*விதவையின் எருதினை அடகாய்க் கொள்வர்,*

---

*1. காலம் . . . வைத்திலரா?*—NEB மொழிபெயர்ப்பைத் தழுவியது. காலம் என்பதற்கு RSV, ''times of judgement'' (*தீர்ப்பு நாள்கள்*); AB, times. *தீர்ப்பு* என RSV சேர்த்தது விளக்கத்துக்காக. ஆயின் times, days என்பவை முன்னுரையில் (*1:6; 2:1* காண்க) வரும் நாள்களாக, தீர்மானக் காலமாக இருக்கலாம் என்பது AB கருத்து. ஆனல் இங்கு யோவு மனத்திலுள்ள கேள்வி ஏன் இன்னும் தீயோர்கள் அழியாமல் இருக்கின்றனர் என்பதாகும்; கடவுள் தண்டனைத் தீர்ப்பு வழங்கு நாள், வெஞ்சின நாள், அழிவு நாள் உண்டு என்கிருர்களே, அது எப்போது, அது ஏன் அவருடைய அடியார்களுக்குக் குறித்துக் காட்டப்படவில்லை என்பதுதான் யோவு மனத்தைக் குடைந்து அரிக்கும் வினு. இதே போக்கில்தான் அவர் உலகத்தின் அக்கிரமங்களைச் சுட்டிக்காட்டிக் கடவுளோ எதுவுமே பிழைபட்டதாக எண்ணுமல் இருக்கிருரே என்று வினவுகிருர் (*12*). இறைவனுடைய பதிலை *40:7–14*இல் காணலாம்.

*கடவுள்*—மூலம், ''ஷடாய்.''

*அவர் அறிந்தார்*—கடவுளை அறிந்தவர்கள், அவருடைய அடியார்கள். எபிரேயத்திலும் ''his knowers'' என்பதே; AB, ''his friends.''

*2. தீயோர்*—மூலத்தில் தொக்கிநிற்கும் எழுவாய்; கிரேக்கத்தில் சேர்க்கப்பட்டுள்ளது; JB, ''*சிலர்.*''

*மந்தை . . . செல்வர்*—இதுவும் கிரேக்க மொழிபெயர்ப்பைப் பின்பற்றியதே. எபிரேய மூலம்: ''*மந்தை கைப்பற்றுவர், பற்றி மேய்ப்பர்*''—இச்செயல் அத்தீயோரின் திண்ணக்கத்தைக் காட்டும் (AB).

9. மார்பினின்று அனாதை மகவினைப் பறிப்பர்,
ஏழையின் பால்குடி குழவியை இழுப்பர்.
21. மகவிலா மலடியின் வாய்பறித்து உண்பர்;
விதவைகட்கு அவர்கள் உதவார் ஒன்றும்.
4. ஏழையை நெறியினின்று இடித்துத் தள்ளுவர்,
உலகின் வறியோர் ஒளிந்திட ஓட்டுவர்.
5. ஓட்டப் பட்டோர் காட்டுக் கழுதைபோல்
உணவு தேடி ஓடுவர் பாலைவாய்;
அவர்தம் பிள்ளைகட்கு அருத்தும் பாழ்நிலம்.
6. கயவனின் வயலில் கதிர்அறுப் பார்கள்,
கொடியவன் முந்திரிக் கொடியினில் பொறுக்குவர்.
7. ஆடை யின்றிக் கழியும் இரவு;
வாடையில் போர்த்தத் துணிஒன்று இல்லார்.
8. மலையினில் எழுதரு மழையினில் நனைவர்;
ஒதுங்கிடம் இலர்அவர் பாறையோடு ஒண்டுவர்.
10. உடம்பில் உடுத்தத் துணியிலாது அலைவர்;
கதிர்க்கட்டு எடுத்துச் சுமப்பர், பசியொடு.

---

9. இந்தக் கண்ணி இந்த இடத்தில்தான் பொருந்தும் என AB இங்கு வைத்துள்ளது. RSV இதனை அடைப்புக் குறிக்குள் இட்டுள்ளது.

ஏழைகளுக்கு இரங்குவதுபோல அவர்களுக்குக் கடன் கொடுத்து, அவர்கள் தம் கடனை அடைக்க வசதியில்லாமல் இருக்கையில், ஈவிரக்கம் இன்றி அவர்களுடைய சின்னஞ் சிறுர்களை அடிமைகொள்ளும் கொடிய வழக்கம் இங்கு குறிக்கப்படுகிறது போலும்.

பால்குடி குழவி—கிரேக்கத்தைப் பின்பற்றிய AB மொழிபெயர்ப்பு.

JB—"தந்தையை இழந்த பிள்ளைகள் தங்கள்
நிலம்பறி போக இருப்பர்; ஏழைகள்
அடகுக் காக ஆடையும் பறிபோம்."

21. கண்ணி இடமாற்றம் AB; ஆயின் ஒருமை வினைகளைப் பன்மை வினைகளாக்கியது RSVயைப் பின்பற்றி.

கடனைத் தீர்க்கும் முகமாக அடிமையாய்க் கொடுக்கக் குழந்தை இல்லாத விதவையரை ஈவிரக்கமற்றோர் பட்டினி போடுவர் என்பது கருத்து.

4. ஏழை ஒழுங்காய் வாழ்வதற்கு இடமில்லாமல் போகும், பேராசைக்காரர்களின் செய்கைகளால்.

5. ஓட்டப்பட்டோர்—தெளிவு கருதிச் சேர்த்தது.

AB—Like an onager in the steppe they go, To their task of finding food; The desert yields bread for their young.

மொழிபெயர்க்கக் கடினமான ஒரு கண்ணி இது என்பர்.

7. ஆடையின்றி இரவைக் கழிப்பர் எனக் கொள்க. "ஆடையின்றி" என்பதோடு "நிர்வாணமாய்" என்ற சொல்லும் மூலத்தில் உண்டு.

10. "துணியிலாது" என்பதோடுகூட "நிர்வாணமாய்" என்ற சொல்லும் மூலத்தில் உள்ளது—"மகவிலா மலடி" (21) என்பது போல.

11. எந்திரக் கற்களில் எண்ணெய் எடுப்பர்;
ஆலைகள் ஆடியும் அவர்நா வறளும்.
12. எழுமே நகர்களில் இறப்போர் முனங்கல்,
குத்துண் டோரின் குரல்வளைக் கூவல்:
கடவுளோ எதுவுமே வசையெனக் கருதார்.

13. ஒளியினை எதிர்த்துக் கிளர்ந்து முண்டுவோர்
அதன்வழி தன்னை அறியா தவர்கள்,
அதனுடை நெறிகளில் நிற்கவும் மாட்டார்.
14. பொழுதுஅடைந் ததன்பின் எழுவான் கொலைஞன்
ஏழை பாழையைக் கொலைசெய் திடவே.
15. காமுகன் கண்கள் கருக்கல்காத் திருக்கும்;
'எந்தக் கண்ணும் எனைப்பார்க் காது'என
முகத்தினை மறைத்து முக்கா டிடுவான்.
14இ. இரவிற் கள்வனும் இவன்ஒப் பவனே;
16. இருட்டில் கன்னம் இடுவான் வீடுகள்.

---

11. இக்கண்ணியும் மூலத்தின் பொருளைத் திட்ப நுட்பமாய் உணர்ந்து மொழி பெயர்க்க மிகவும் கடினமான ஒன்று என்பர்.

ஆலைகள்—கொடிமுந்திரியின் சாறு பிழியும் ஆலைகள் (JB, RSV).

முதலடியை JB, ''அவர்களுக்கு எண்ணெய் எடுக்கும் கல்லும் இல்லை'' என மொழிபெயர்த்துள்ளது.

ஏழைகள் எண்ணெய்க்கு எங்கு போவார்கள், எந்திரக் கற்களில் பிறர் எண்ணெய் எடுத்தபின் ஒட்டிக்கொண்டிருப்பதைத்தான் தோய்த்து எடுக்கவேண்டும் என்பது கருத்தாக இருக்கலாம்.

எந்திரக் கற்கள்—நம் நாட்டுச் செக்குப்போன்றவை அல்ல.

12. குரல்வளை—AB; மூலச் சொல்லின் அடிப்படைப் பொருள் இது (AB). RSV, ஆவி; இது அச்சொல்லுக்கு ஆகிவந்த பொருள்.

வசை—AB; மூலச்சொல் tiplāh என்பது (1:22 குறிப்பு காண்க).

இரண்டு எபிரேயச் சுவடிகளில் மட்டும் tefillāh (வேண்டுதல்) என உள்ளது (AB). எனவே, ''கடவுளோ அவர்களின் வேண்டுதல் கருதார்.'' tiplāh என்பது புகழ் என்பதற்குக் கிட்டத்தட்ட எதிர்ச்சொல் என்கிறது AB. எனவே வசை (× இசை) என்றால் சரியாக இருக்கும். மாற்று: ''கடவுளோ ஒன்றுமே பிழை எனக் கருதார்.''

13–17. கொலைஞரும், காமுகரும், திருடரும் பகல் வெளிச்சத்தை விட்டு இரவு இருட்டையே விரும்புபவர்கள். இக்கண்ணிகளில் வரும் ஒளியும் இருளும் இவ்வாறு பகல் வெளிச்சத்தையும் இரவையும் குறித்தாலும் அவை முறையே நன்மையையும் தீமையையும் சுட்டுவனவாகும் என்பது தெளிவு.

14–16. AB 14இன் மூன்றாமடியைத் தனியே பிரித்து 15, 16 கண்ணிகளுக்கு இடையில் வைத்துள்ளது; 16ஆவது கண்ணியின் முதலடியோடு அது பொருந்திச்

பகலில் அடைத்துக் கிடப்பார் உள்ளே
ஒளியினை இவர்கள் அறியா தோரே.
17. காலையே இவர்க்குக் காரிருள் வேளை;
இருளின் கிலிஇவர் நன்குஅறிந் தோரே.''

---

செல்வது ஆகையால். 14இ, 16அ இரண்டும் சேர்ந்து ஒரு கண்ணியாகச் செல்கின்றன; ஆனால் MT அவ்வாறு இல்லை.

''எல்லாக் காலமும் இறைவன் கையில்தானே; அவருடைய காலங்களில்தானே உலகில் இத்தனை அக்கிரமங்களும் நடக்கின்றன'' என்பது யோபின் வினவும் வேதனையுமாகும். கடவுளை அறிந்தவர்களாகிய அவருடைய நண்பர்களுக்கு ஏன் அவர் குறித்துள்ள தீர்ப்புநாள் தெரியவில்லை என்ற இடக்கும் அவர் கேள்வியில் அடங்கியுள்ளது.

# 25

# மனிதன் எம் மாத்திரம்?: வில்தாது

**25:** [தீயோர் உலகில் செய்கின்ற அக்கிரமங்களைக் கடவுள் கவனிக்காதவர்போல் இருக்கிறாரே என யோவு கேட்டதற்கு விடை சொல்ல முனைகிறார் வில்தாது.
**26:** எல்லாம் வானிலே அவர் அமர்த்தி அடக்கி அமைதி உண்டாக்குவார்; அவரது ஆட்சிக்கும் மாட்சிக்கும் முன்னால் மற்றவை ஒன்றுமில்லை. அவரது
**5–14** ஒளி தனக்கு இல்லை என்று எவனாவது சொல்ல முடியுமா? (1–3) கடவுள் முன் எல்லோரும் குற்றம் உள்ளவர்களே (4–6). எங்கு சென்றாலும் கடவுளுக்குத் தப்ப முடியாது (26:5,6). அவரது ஆற்றல் பெரிது: வானமும் வையமும் படைக்க அவருக்கு உதவி தேவைப்படவில்லை (7); மழை மேகங்களும், முழுமதி நாளில் கிரகணம் பிடிப்பதும், அடிவானத்து அழகும், மலைகளும் நிலநடுக்கமும் அவருடைய ஆற்றலுக்கு அடையாளங்களாக உள்ளன (8–11); அவர் படைப்புக் காலக் கடலினை வென்றவர், பறவை நாகத்தைக் கொன்றவர் (12,13). இவையெல்லாம் அவரது பேராற்றலின் சிறு சிறு அறிகுறிகளே; யார் அவ்வாற்றலின் தன்மை முழுவதையும் கேட்டு உணர முடியும்? (14) என அழகாக எடுத்து ஓதுகின்றார் வில்தாது.]

*25:1. அதற்கு சுவாஊர் வில்தாது கூறினார்:*

*2. "ஆட்சியும் மாட்சியும் அவருடை யனவாம்;*
*அடக்கி அமைதி ஆக்குவார் விண்ணில்.*
*3. அளவிட முடியுமா அவர்தம் படைகளை?*
*எவன்மேல் அவர்ஒளி எழுவ தில்லை?*
*4. கடவுள்முன் எங்ஙனம் மனிதன்நல் லவனாம்?*
*பெண்ணிடம் பிறந்தவன் மாசிலா தவனாம்?*

---

*2. மாட்சி—கும்ரான் சுவடி;* AB, "reverence"; RSV, "fear."
*அவர்—கடவுள்.*
*அமைதியாக்குவார்—காண்க இசை. 24:21 தொடர்.; 34:5; 51:9; திருவெளி. 12:7–12.*

*3. படைகள்—காண்க இசை. 40:26; சீராக் 43,10.*
*எவன்மேல் . . . எழுவதில்லை—*AB, RSV; *எபிரேய மூலத்தில் உள்ளபடி.*
JB—*"பதுங்கியிருக்கும் அவர்தம் படைக்குத்*
*தப்பிவிட் டேன்எனத் தான்தற் புகழத்*
*தக்கவன் எவனே?"*

JB மொழிபெயர்ப்பு இங்கு கிரேக்க மொழிபெயர்ப்பை ஒட்டியது. கும்ரான் ஏட்டிலும் கிரேக்க மொழிபெயர்ப்புப் போன்று உள்ளதாகத் தெரிகிறது (AB).

*4. 4:17, 15:14–16 பகுதிகளில் ஏலிப்பாசு கேட்ட கேள்விதான். இதன் உண்மையை யோவும் மறுக்கவில்லை (9:2; 14:4 காண்க). சங்கத். 7:21 காண்க.*

5. திங்கள் அவர்முன் தன்னொளி மங்கும்;
உடுக்கள் அவர்தம் பார்வைக்கு அழுக்கே.
6. அப்படி யிருக்க மனிதனெம் மாத்திரம்!
அவனொரு கிருமி, அவன்மகன் ஒருபுழு!

26:5. நிலத்தின் கீழே நெளியும் ஆவிகள்,
கலங்குமே நீர்களும் நீர்வாழ் வனவும்.
6. பாதலம் அவர்கண் பார்வைக்கு ஒளிப்பதில்;
பாழிடம் தன்னை மறைப்பதொன் றில்லை.
7. வெற்று வெளிமிசை வடதிசை விரித்தார்;
வெறுமைமேல் தூக்கி நிறுத்தினர் ஞாலம்.
8. புனலினைக் கொண்டலுள் பொதிந்து முடிவார்;
முகில்களும் அதன்நிறை யாற்கிழி யாவே.
9. மதியின் முழுமுகம் மறைப்பார், தமது
முகிலினை அதன்மேல் மூடி விரிப்பார்.

---

5. அழுக்கு—AB, RSV, "not clean."

6. 'அவன் மகன் எம்மாத்திரம்' என்பது மூலததில் தொக்கி நிற்கிறது.

26:5. ஆவிகள்—பாதாளவாசிகள்; எபிரேயச் சொல் ''ரெப்பாயிம்.'' ஆங்கிலத்தில் shades என்று மொழிபெயர்ப்பர். தமிழில் (திருத்திய பதிப்பு) நிழல்கள் (இசை. 14:9), அரக்கர் (இசை. 26:14), இறந்தோர் (சங். 87:10), பாதாளம் (பழ. 2:18) என மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. இறந்தோர், வலுவற்றோர் (JB).

நீர்களும் நீர் வாழ்வனவும்—பாதாளலோகம் நீர்நிறைந்தது என்பது 2 சாமு. 22:5, யோனா 2, சங். 87:3–7 முதலிய இடங்களில் காணக் கிடக்கிறது (AB).

6. பாழிடம்—எபிரேயம்' āvaddôn, (=destruction, ruin); இதுவும் பாதாளத்தைக் குறிக்கும் சொல்லாகும்.

7. வடதிசை—மூலம் ''ஸபோன்.'' பழைய ஏற்பாட்டில் வடதிசை இவ்வாறு குறிக்கப்பெறுகிறது. சீரியா நாட்டின் கடற்கரையில் உள்ள ஜெபல் எல் அக்ரா (வழுக்கை மலை) தான் ஸபோன் மலை என்பர். அது பாலத்தீனத்துக்கு நேர் வடக்கே உள்ளது. பண்டைய புராணங்களில் இறைவன் வாழும் பெரு மலை என அது கொண்டாடப்பட்டது; வானவர் மன்றம் கூடும் மலை என்று வருணிக்கப்பட்டது. இசை. 14:13 காண்க.

வெறுமை மேல் . . .ஞாலம்—வான்வெளி வரம்பில்லாமல் விரிந்துள்ளது என்ற கருத்தினை உள்ளடக்கிய வாசகம் திருநூல் முழுவதிலும் இது ஒன்றேயாம் (JB). உலகம் (=ஞாலம்) ஓர் உருண்டை, இது அந்தரத்தில் அமைந்துளது என்ற பித்தாகொரஸ் கொள்கை இங்கு காணக்கிடக்கின்றது என்பர் சிலர். ஆனால் அதற்கு ஆதாரம் இல்லை. 38:6,7 காண்க. பூமியைத் தூண்கள் தாங்குவன; தூண்களைத் தாங்குவன யாவை? இத்தகைய பழைய கருத்துக்களே அங்கு துலங்குகின்றன (AB). ஆனால் திருநூல் விஞ்ஞானம் கற்பிக்க வந்ததா, இல்லையே?

8. நிறையால்—மூலச் சொல், ''அவற்றின் (நீரின்) கீழ்.''

10. வாரியின் மேலே வட்டம் வரைவார்,
ஒளியும் இருளும் ஒன்றும் எல்லையாய்.
11. விண்ணின் தூண்கள் அதிர்ந்து நடுங்கும்;
அவைஅவர் அதட்ட அசந்து நிற்கும்.
12. அமர்த்தினர் ஆழியை அவர்தம் ஆற்றலால்;
அழிந்தது ராகாவ் அவர்தம் சூழ்ச்சியால்.
13. மூச்சு—கடல்அகப் படுத்திய பையா யிற்று;
கை—பறந்திடு பாம்பினைக் குத்திவாங் கிற்று.
14. இவைஅவர் ஆற்றலின் இணுக்குக ளேயாம்;
எத்துணை மென்குரல் அவர்பால் கேட்பது!
அவர்வன் முழக்கம் அறியவல் லார்யார்?''

---

10. வட்டம்—பழ. 8:27 காண்க; ஆங்கு குறிப்பிடப்படும் ஆதிக் கடலின் அடி வானம் போலும். ஆதி. 1:4,7,14 காண்க.

11. விண்ணின் தூண்கள்—விண்ணின் தூண்கள், அடித்தளங்கள் என்பவை வானத்தைத் தாங்கி நிற்பனபோல் தொலைவில் தோன்றும் மலைகளாம் என்று இன்று பொதுவாகப் பலரும் விளக்குவர் (AB).

12. அமர்த்தினர்—AB, RSV. இசை. 51:15, எரே. 31:35 ஆகிய இடங்களில் 'கலக்குதல், கொந்தளிக்கச் செய்தல்' என்னும் பொருளில் வந்துள்ள அதே வினைச் சொல்தான் இங்கும் வந்துள்ளது. ஆயினும் அச் சொல் அதற்கு நேர்மாறான பொருளையும் தரக்கூடியது (The Revised Version, 1885 குறிப்பு). இந்த இடத்துக்கும் இப்பொருளே பொருந்தும். மேலே காட்டிய இசை., எரே. ஆகமங்களிலும் இப்பொருளே உகந்தது, ஏனெனில் அப்பகுதிகள் அமளியை அடக்கி ஆக்கம் செய்யும் கடவுளது வலிமையைச் சுட்டிக்காட்டி இசுரவேல் மக்களுக்கு ஆறுதல் அளிக்கும் பகுதிகள் என AB கருதுகிறது.

சூழ்ச்சி—AB, "cunning"; RSV, "understanding."
அழிந்தது—AB; RSV, "smote."
ராகாவ்—9:13 குறிப்பு காண்க.

13. மூச்சு . . .பையாயிற்று—இது ABயைப் பின்பற்றிய மொழிபெயர்ப்பு. கடவுளின் மூச்சு எனவும், கடவுளின் கை எனவும் கண்டு கொள்க.

RSV, JB—''வானம் விளக்கிற்று அவர்தம் காற்று/மூச்சு.'' இதன்படி விளக்கம் கூறுவோர், சூரியனைப் பாம்பு விழுங்குவதால் கிரகணம் உண்டாவதையும் அந்தப் பாம்பினை அழித்ததும் வெளிச்சம் உண்டாவதையும் குறிக்கும் கண்ணி இது என்பர். ஆனால் AB இப் பகுதியை இசை. 27:1, 51:9 ஆகியவற்றோடு ஒப்பிட்டுப் பார்த்து, கடல் தெய்வத்தையும் அதன் படைத் துணையையும் அழித்த கதையே இங்கு குறிப்பு எனக் கொள்கிறது. கண்ணியின் சொற்கள் அதற்குத் தக்கபடி பிரிந்து பொருள் தந்ததை AB குறிப்பில் கண்டுகொள்ளலாம்.

பறக்கும் நாகம்—லெவியத்தான்; 3:8; 41:1; இசை. 27:1; திருவெளிப். 12:3 காண்க.

14. ஆற்றல்—AB குறிப்பு காண்க; RSV, JB—''வழிகள்.''

# 26

# வாய்மை கைவிடேன்: யோவு

# 27

# (கடவுளிடம் தீயவனின் உரிமை: சோப்பார்)

26: [தமது கேள்வி என்ன என்று சிறிதும் உணர்ந்து கொள்ளாமல் வில்தாது
இப்படியெல்லாம் பேசுகிறாரே என்று கண்ட யோவு இடக்காக ''ஆம்,
1-4 உம்மைத்தான் கடவுளுக்கு உதவியாக வைக்க வேண்டும்! உற்ற ஆலோசனை
27: கள் சொல்லி உதவுவீர்!'' என்று கூறி விடுகிறார் (26:1–4). இது அவரது
வேதனைக்கு இடையில் வந்த நகைப்பு. இனி அவர் தொடர்ந்து தமது
24: கதையை விவரிக்கத் தொடங்கி (27:1), இறைவன்மேல் ஆணையிட்டுத் தமது
மாசின்மையை வலியுறுத்துகிறார் (27:2–7). (இதன் தொடர்ச்சியாக
18-20; அமைவனவே 29 முதல் 31 முடிய உள்ள அதிகாரங்கள். இடையில் 27:8
22-25 முதல் உள்ளவை யோவின் கருத்தாக ஒத்துவரவில்லை. அவற்றை,
சோப்பாரின் மூன்றும் உரையாக இங்கு தந்துள்ளோம்.) சோப்பார் பக்தி இல்லாதவர்களின் கதியைப் பற்றி மீண்டும் எடுத்துரைக்கிறார். சாகும் தறுவாயில் அவனுக்கு என்ன பற்றுக்கோடு இருக்கும்? அவன் என்றென்றும் கடவுள் திருமுன் இன்பமாக வாழ்வானா? (8–10) கடவுளின் வல்லமையைக் கேளுங்கள்; ஏன், நீங்களே கண்டதுதான் அது. காணாதது போல் யோவு பேசுவது வீண் (11,12). தீயவனுக்குக் கடவுளிடம் உள்ள உரிமை என்ன? அவன் குழந்தைகள் எத்தனை பேர்களாயினும் அத்தனை பேர்களும் பட்டினிக்கு இரையாவர், வாளுக்கு இரையாவர். அவனது சுற்றமும் மனையும் செல்வமும் நில்லா (13–19). அவனைப் பேரச்சம் பிடித்து அல்லும் பகலும் வாட்டும் (20–23). அவன் அகாலமாய் இறந்து போவான். அவனை அதன் பின் யாரும் நினையார் (24:18–20). உறுதியாகத் தோன்றிய வாழ்வு ஒரு நொடியில் அழிந்து போகும். இல்லை என்று சொல்லுங்கள், பார்ப்போம் (24:22–25) என முடிக்கிறார் சோப்பார்.]

*26:1. அதற்கு யோவு கூறினார்:*

*2. ''ஆற்றல் அற்றவர்க்கு ஏற்ற துணைவரே!*
*எய்த்த கைகளுக்கு ஏன்ற தோழரே!*
*3. அறியார்க்கு அறிவுரை அழகாய்ச் சொன்னீர்!*
*ஆலோசனைகளை அள்ளி வழங்கினீர்!*

---

*2–4. இதுவரை இம் மொழிபெயர்ப்பில் கையாண்ட முறைப்படி இங்கு 'சொன்னீர்கள்', 'வழங்கினீர்கள்', 'நீங்கள்' என்று மரியாதைப் பன்மையையே*

4. எவர்துணை கொண்டோ இயம்புதல் இச்சொல்?
யாருடை மூச்சோ நீர்வெளி யிட்டது?''

27:1. யோவு மீண்டும் தமது பாட்டைச் சொல்லலானுர்:

2. ''உரிமை எனக்கு வழங்க மறுக்கும்
மெய்யங் கடவுள் அவர்மேல் ஆணை,
உயிரே எனக்குக் கசக்க வைத்த
உயர்வற உயர்ந்தோன் அவன்மேல் ஆணை,
3. எனக்குஉயிர் இருக்கும் வரைக்கும், இறைவனின்
மூச்சுஎன் நாசியில் ஓடும் வரைக்கும்,
4. உண்மை அலாதன என்வாய் உரையாது,
வஞ்சகம் யாதும் என்நா வழங்காது.
5. ஒருக்காலும் உங்கள் பேச்சு
சரிதான் என்று சாற்றவே மாட்டேன்;
இறக்கும் வரைக்கும்என் வாய்மையைக் கைவிடேன்.
6. நீதிலேன் நீதிலேன் என்பேன் மாறிடேன்;
உள்ளம் உறுத்துவ தில்லைஎன் வாழ்வெலாம்.
7. என்பகை யாளி தீயோ னுவான்;
என்எதி ராளி முறைகெட் டவனும்.''

---

எதிர்பார்க்கலாம். ஆயின், இடக்காக வெளிவரும் இக்கூற்றுக்களில் அது தேவையில்லை என விடுத்தேன்.

யோவின் பேச்சு இவ்வாறு கிண்டலாகத் தொடங்கி 27:2—7 பகுதியுடன் நன்கு இசைந்து செல்கிறது.

1. பாட்டை—மூலச் சொல் 'மாஷால்' மொழிபெயர்க்கக் கடினமான ஒன்று. அதன் அடிப்படைப் பொருள் ஒப்பு, உவமை என்பதாம். பழமொழி ஆகமத்திலுள்ளவை இவ்வகையினவே. (நமது ''ஒப்பாரி''யும் இத்தகைய உவமை அழகு நிறைந்ததே என்பது கருதத் தக்கது.)

இங்கு பாட்டை என்பதைப் பாடு, ஐ என்று கொண்டாலும் சரி, பாட்டு, ஐ என்று கொண்டாலும் சரி.

2. மூலம் இரண்டே அடிகளில் உள்ளது.
உரிமை—AB, RSV; JB, தி. ப. ''நியாயம்,'' ''நீதி.''
உயர்வற உயர்ந்தோன்—ஷடாய்.

3. உயிர்—மூலம், ''மூச்சு;'' AB, "life".
மூச்சு—AB, JB; RSV, ''ஆவி''.

5. மூலம் ஈரடிகளே.

7. யோவு இவ்வாறு சபிப்பாரா என்பது கேள்வி. இது ஒரு பழமொழி போலும், அதைப் பயன்படுத்தி யோவு தம் நண்பர்களுக்கு உணர்த்துகிறுர் என்பது AB விளக்கம்.

[அதற்கு நாமாஊர் சோப்பார் கூறிய மறுமொழி:]

8\. ''பற்றிலான் யாது பற்றுவான் சாகுநாள்,
அவன்உயிர் கடவுள் அழைத்துக் கொள்ளுநாள்?
9\. கேட்பரோ அவன்தன் கூக்குரல் கடவுள்
அலங்க மலங்க அவன்பொறி கலங்குநாள்?
10\. ஐய னிடத்தே அகங்களி கூர்வனு?
கடவுளை எல்லாக் காலமும் அழைப்பனு?
11\. கடவுள்கை வன்மையைக் கற்பிப்பேன் உங்கட்கு;
பரமன்வைத் திருப்பதை மறைக்கநான் மாட்டேன்.
12\. காண்க, நீங்கள் யாவரும் கண்டதே;
வீண்வெற் றுரைஏன் விளம்பு வீர்களோ?
13\. கடவுள்பால் தீயவன் தனக்குள உரிமையும்
பரமன்பால் கொடியவன் பாகமும் இதுவே:
14\. அவன்—மகவுகள் பெருகினும் மடிவர்கள் வாளால்,
வயிறுஅவர் நிரம்ப வாய்கொளல் இல்லார்.

---

8–23. இப்பகுதி சோப்பாரின் பேச்சாக ஊகிக்கப்பட்டுள்ளதால், ''அதற்கு நாமா ஊர் சோப்பார் கூறிய மறுமொழி'' என்று எழுதிச் சேர்க்கவேண்டியுள்ளது. JB 13ஆம் கண்ணியிலிருந்தே சோப்பார் பேச்சு தொடங்குவதாகக் கொள்கிறது. அதன் படி 8–12 கண்ணிகளில் யோவு கூறுவதன் கருத்து 'சாகுநாளிலும் எனக்கு நம்பிக்கை உண்டு; கடவுள் அப்போதும் என் குரலைக் கேட்பார். அவரே எனக்கு இன்பம் என இருந்தவன் நான், அவரை எப்போதும் வேண்டியவன்' என்பதாம். 12ஆம் கண்ணியில் ''நீங்கள் யாவரும்'' (RSV, AB) என வருவது JB விளக்கத்துக்கு ஓரளவு ஆதாரமாகலாம்.

8\. பற்றிலான்—கடவுட் பற்று இல்லாதவன்.

9\. அலங்க . . . நாள்—சாகும்பொழுது.

11\. JB—''இல்லை; கடவுள் வல்லமை எப்படிச்
செயல்படு வதுஎனக் காட்டுகின் றேன்யான்;
உயர்வற உயர்ந்தவர் உன்னிய நோக்கம்
மறைத்து மர்மமாய்ப் பேச மாட்டேன்.''

12\. JB—''ஈதெலாம் நீங்களே உணர்ந்திருந் தால்இவண்
வீணே ஆவியைக் கொடுத்து
வெற்றுரை யாடி யிருக்கமாட் டீர்கள்.''

13\. தனக்குள்ள உரிமையைக் கடவுள் மறுப்பதாக யோவு கூறியதற்கு இது மறுப்பு.

14\. வயிறு . . . இல்லார்—AB, ''His offspring will not have food enough.''
RSV, ''and his offspring do not have enough to eat.''
கும்ரான் சுவடி, ''வாயைத் திறப்பர் வயிறோ நிரம்பார்.''

15. அவன்பின் ேனார்களைச் சாவே புதைக்கும்,
அவர்தம் விதவையர் அழமாட் டார்கள்.
16. மண்ணை போல்அவன் வெண்பொன் குவிக்கினும்,
களியே போல்அவன் துணிகள் அடுக்கினும்,
17. அடுக்குக, அடுக்கின நல்லார் உடுத்துவர்,
வெள்ளியை மாசிலார் கொள்ளுவர் பங்கு.
18. கட்டுவான் வீடது காவன் மனையே,
காவற் காரனின் சாவடி அதுவே.
19. கடைசியாய் ஒருநாள் படுப்பான் செல்வனாய்,
கண்விழித்து எழுவான் காசற் றவனாய்.
20. அவனைக் கிலிகள் அமுக்கும் பகலில்,
சுழல்காற்று இரவில் தூக்கிக் கொடுபோம்;
21. கீழ்காற்று அடித்துக் கீழே தள்ளும்,
பேர்த்து வாரித் தூர்த்து வீசும்.

---

15. சாவே—எபிரேய மூலம்; RSV, JB ''அழிபிணி''; AB, ''கல்லறை.''
AB: அவன் பின்னோர் கல்லறையில் அடக்கம் செய்யப்பட மாட்டார்கள். கல்லறை அடக்கம் இல்லாமையும் விதவையர் புலம்பாமையும் பெருங் கேடாகக் கருதப்பட்டன.
அவர்தம்—RSV, their; AB, his.

16. மண் = தூசி. வெண் பொன் = வெள்ளி. களி = களிமண்.

18. காவன் மனை—JB, (RSV) ''அவன்தனக் காக அமைக்கும் வீடு
சிலந்திக் கூடே, காவல் விடுதியே.''
எபிரேய மூலத்தின் சொல் 'āsh என்பதை moth, சிலந்திப் பூச்சி என மொழி பெயர்ப்பதே வழக்கம். ஆனால் இங்கு அதற்கு இணையாக அடுத்த அடியில் வரும் சொல் guard. AB 'āsh என்பதற்குக் காவலாளி என்று அரபி மொழியிலிருந்து பொருள் உய்த்துணர்ந்துள்ளது. ஆகவே அதன் மொழிபெயர்ப்பு:
"He builds like a watchman his house,
Like a hut (which) the guard makes."
watchman, guard ஒன்றுக்கொன்று இணை; house, hut ஒன்றுக்கொன்று இணை; 'āsh என்பதை ஆசிரியர் 4:19இல் moth என்ற பொருளில் ஏற்கெனவே பயன்படுத்தியிருக்கிறார். படிப்பவர் மனத்தில் முதலில் அப்பூச்சியும் சிலந்திக் கூடுபோன்று நொய்மையான வீடுமே நினைவுக்கு வரும்; மேலே காட்டிய இணைச் சொற்களைக் கண்ட பின்னரே உண்மைப் பொருள் விளங்கும் என்கிறது AB. தமிழில் காவன் மனை என்னும்போது காவல் மனை என்றே படும்; காவன் என்றால் சிலந்திப் பூச்சி என்னும் பொருளும் உண்டு, ஆகையால் சிலந்திக் கூடும் கருத்தில் உறுத்த வேண்டும்!

19. கண்விழித்து எழுவான்—AB, RSV, கண்ணைத் திறப்பான்.
ஒருநாள்—தெளிவுக்காகச் சேர்த்தது.

20. பகலில்—AB; 'வெள்ளமாய்' என மொழிபெயர்ப்பதே வழக்கம்,

21. தூர்த்து = சுத்தமாகப் பெருக்கி,

22. விடாமல் அவனை விரட்டும், அதன்கைப்
படாமல் ·தப்பிப் பறக்க விழைவான்.
23. அவனை நோக்கி அதுகை கொட்டும்;
இடத்தி விருந்துஅவன் எடுபடச் சீறும்.
24:18. நீர்மேல் விரைந்து பறந்திடு வானே,
பார்மேல் அவன்நிலம் சாபத் தீட்டு;
முந்திரிக் கொடிப்புலம் விழித்திட மாட்டான்.
19. வெம்மை, வறட்சி உண்ணும் பனி,புனல்;
தீதுசெய் தோரைத் தின்னும் பாதலம்.
20. பெற்ற வயிறு மறக்கும் அவனை;
உற்ற புழுஇனிது உறிஞ்சும் அவன்மேல்;

---

*22,23.* மொழிபெயர்க்கக் கடினமான கண்ணிகள். கீழ்காற்று, கடவுள், பிறர் இவர்களில் யாரையும் எழுவாய் ஆக்கி உரைக்கலாம். ஆயினும் கீழ்காற்று என்பதே பொருத்தமாகக் கொண்டு AB மொழிபெயர்த்துள்ளது.

JB—"இரங்குவார் இன்றி இலக்கா யினனே;
ஓங்கிய கைகளுக்கு ஓடித் தப்ப
நேர்ந்ததே. அவனது வீழ்ச்சி கண்டு
கைகொட்டு வார்கள் களித்துநாற் புறத்தும்
சீழ்க்கை ஒலியே கேட்கும் எதிர்கொள."

*24:18–20, 22–25.* இவையும் திட்பமாகப் பொருள் விளங்காத கடினமான கண்ணிகளாகும். இவற்றை யோவின் வார்த்தையாக வைத்துக்கொள்ள விரும்புவோர் யோவு தம் நண்பர்களின் கருத்துக்களைக் கிளிப்பிள்ளைபோல் சொல்லிக் கிண்டல் செய்கிறுர் என்பர். சிலர், இவ்வாக்கியங்களின் வினைமுற்றுக்களை வியங்கோள் வினையாக்கி விடை காண முயல்வர். எளிய வழி, சோப்பார் வாய்ப்பிறப்பாக இப்பகுதியை வைப்பது (காண்க AB).

*18.* நீர்—பாதாளம் நீரும் சேறும் நிறைந்தது எனக் கண்டோம்,

அவன்—RSV, இங்கு எல்லா இடங்களிலும் '"they" என மொழிபெயர்த்துள்ளது. ஆனுல் ஒருமையும் பன்மையும் மயங்கி வருவதாக AB மொழிபெயர்த்துள்ளது; உரையாடல் ஆதலால் அது இயல்பே.

*19.* வெம்மையும் வறட்சியும், பனியும் புனலும் என விரித்துரைத்துக் கொள்க. இது மூலத்தில் உள்ளபடி RSV மொழிபெயர்ப்பு. AB வறட்சியையும் நீரையும் (புனல்) விட்டுவிட்டது.

*20.* AB மொழிபெயர்ப்பு இது மூலத்தை ஒட்டியது. RSVயில் வயிறு 'ஊர்ச் சதுக்கம்' என்றும், புழு 'அன்னுர் பெயர்' என்றும் மாற்றப்பட்டுள்ளன.

இவணம் = இவ்வண்ணம், இப்படி.

தீமை—RSV, JB; AB, "தீயோன்."

JB *(18–20)*: "பகலின் ஒளிக்குப் பயந்து தலை தெறிக்க
ஓடுவான், உயர்ந்த மேடுகள் மீதுசெல்
பாதையில் நடக்கப் பதுங்குவான்; அவன்தன்
வீட்டு நிலங்கள் சாபத் தீட்டு.

எவரும் அவனை நினையார் இனிமேல்;
இவணம் தீமை இறுமே மரம்போல்.
22. வலியவன் தனைத்தம் வலிமையால் ஈர்ப்பார்;
எழுவான், வாழ்வினை அவன்நம் பானே?
23. மேவி யிருக்கும் காவலும் தருவார்;
ஆயின் அன்னுர் நடத்தையே அவர்கண்.
24. உயர்ந்தே ஒருநொடி இருந்தார், போனுர்;
கிடந்தார் பறிபடு கீரை யானுர்;
உலர்ந்தார் பயிர்க்கதிர் ஒப்பச் சாய்ந்தார்.
25. இப்படி இலையென எதிர்த்துரைப் பவர்யார்?
என்சொல் பதர்என எண்பிப் பவர்யார்?''

---

வெம்மையும் வறட்சியும் மிகுந்து தண்ணீர்
வற்றிப் போகும், வயலில் எஞ்சிய
பயிரும் கருகிப் போகும். அவனைப்
பெற்ற வயிறும் மறக்கும்; அவன்பெயர்
இனிஒரு நாளும் எவரும் நினையார்.
இடியே றுண்ட மரம்போல்
தீமை இடிந்து நொறுங்குமிவ் வாறே.''

22. JB—''ஆயின், தறுகண் அரசரும் தப்ப முடியா
வன்பிடி உடையார் அவர்எழ, ஏமமாய்த்
தோன்றிய வாழ்வு தான்எடு பட்டதே.''

23. JB—''உறுதி அலாத உறுதியை நம்பிக்
கட்டுவானைக் கட்ட விட்டார்;
ஆயின் அவன்நடை அனைத்தையும் கண்டார்.''

மேவியிருக்கும் = நம்பியிருக்கும். காண்க, ''ஏமம் ஆர்ந்த நின்பிரிந்து, மேவல் சான்றன எல்லாம்'' (பரிபாடல் 4:34,35).

24. இருந்தார், போனுர், கிடந்தார், ஆனுர், உலர்ந்தார், சாய்ந்தார் தீயோர் என்பது கருத்து.

# 28

# ஞானப் புகழ் மாலை

**28:** **[(ஞானத்தின் சிறப்பைப் புகழும் பாமாலை ஆகிய இந்த அதிகாரம் யோவின் வாயால் வருவதாகத் தொகுக்கப்பட்டுள்ளது. அது பொருந்தாது என்பர் அறிஞர். அது எவ்வாறுயினும், அடுத்து வரவிருக்கும் யோவின் பேருரைக்கு முன்னதாக இதனை அமைத்திருப்பது நூலின் உட்பொருள் உண்மையை உணர வாசகர்களை ஆயத்தம் செய்வதற்காகும் எனக் கொள்ளலாம்.) இவ்வையகத்தின் செல்வங்கள் எல்லாவற்றையும்விட ஞானம் மேலானது, மனிதன் சொந்த முயற்சியால் அதைக் காண முடியாது, பக்தி உள்ளவருக்கே அது கிட்டும் (1–28).]**

*28:1. வெள்ளிக்குப் பிறப்பிடம் காளவாய் உண்டு;*
*பொன்னுக்குப் புடமிடும் இடமும் உண்டு.*
*2. இரும்பினை மண்ணிற் பிரித்தெடுப் பார்கள்;*
*கல்லினை உருக்கி வார்ப்பர் தாமிரம்.*

---

*1. காளவாய்*—AB *குறிப்பு காண்க.* RSV, JB—*வெள்ளிக்குச் சுரங்கம் உண்டு. மூலச்சொல்* môtsā *என்பது புறப்படுமிடம், வாயில், வெளிவரும் வழி என்ற பொருளில் பழைய ஏற்பாட்டில் பலவிடங்களில் பயின்று வந்துள்ளது; சுரங்கம் என்ற பொருள் வேறு எங்கும் இல்லை என* AB *குறிப்பிடுகிறது. பழமொழி 17:3இல் ''வெள்ளிக்கு மூசையும் பொன்னுக்கு உலையும்'' என வருவது கண்டு* Dahood *இங்கு இச்சொல்லை ''உருக்குமிடம்'' என மொழிபெயர்த்துள்ளார்.*

*பாலத்தீனத்தில் வெள்ளிச் சுரங்கம் இல்லை. அவர்கள் தார்சீசு என்னுமிடத்திலிருந்து வெள்ளி இறக்குமதி செய்தார்கள். உலை, சூளை, காளவாய் எனப் பொருள்படும் அக்காடிய மொழிச் சொல்லிலிருந்து உருவான பெயர் தார்சீசு. ஸ்பெயின், வட ஆப்பிரிக்கா, சார்டீனியா தீவு ஆகியவற்றில் பினீசியர்கள் சுரங்கங்கள் வைத்திருந்தனர். திருநூலில் குறிப்பிடப்படும் தார்சீசு ஸ்பெயினில் தார்த்தேசுஸ் எனப்பட்ட இடமாக இருக்கலாம் என்பர்* (AB).

*பொன்—தங்கம் பாலத்தீனத்தில் அரிதாகவே அகப்பட்டது; அதனை அவர்கள் ஓஃபீர் (உவரி?), சாபா எனும் தொலைவான வெளிநாட்டு ஊர்களிலிருந்து இறக்குமதி செய்தனர் (இசை. 13:12; 1 அரச. 10:11; சங். 71:15).*

*2. இரும்பும் செம்பும் பாலத்தீனத்தில் நிறைய உண்டு (உபா. 8:9 கூறுவது உயர்வு நவிற்சி அணி அன்று). வெள்ளி உருகிப் பாய்கிறது என்று இரவில் சுட்டிக் காட்டுகிறோமே அந்த விண்வீழ் கற்களிலிருந்துதான் மனிதன் முதலில் இரும்பைக் கண்டான் என்பர். எகிப்திலும் மெசப்பொத்தேமியாவிலும் இரும்புக்கு விண்பொன் என்ற பெயர் நிலவியது. கி.மு. 3000 ஆண்டு வாக்கிலே மண்ணின் தாதிலிருந்து இரும்பு எடுக்கக் கற்றுன் மனிதன். ஆயினும் இவ்வழக்கம் பரவ கி.மு. 1300 ஆயிற்று* (AB).

*கல்லினை . . . தாமிரம்—மொழிபெயர்க்கக் கடினமான ஓர் அடி. ''கடினமான கற்கள்'' என்பது மூலம்.* JB: *''உருக்கிய கற்கள் கொடுக்கும் தாமிரம்,''*

3. இருளுக்கு இறுதி காண்பான் மனிதன்,
மூலை முடுக்கெலாம் தோண்டித் துளைப்பான்,
இருளாய்க் கிடக்கும் கருங்கற் பாறை
4. குடைவான் யாரும் குடியிராக் காட்டில்.
ஆள்நட மாட்டம் அயர்த்த இடத்தில்,
தொங்குவன் எட்டாத் தொலைவினில் ஊசல்.
5. உணவு விளையும் நிலமே, நிலத்தின்
அடியிலோ மாறுதல் எரியுண் டதுவென.
6. நிலத்தின் கற்கள் நீல மணிதரும்;
தரையின் தூசி உறைவது தங்கம்.

---

3. சுரங்கங்களில் வேலை செய்வோர் விளக்குகள் கொண்டு சென்றதைக் குறிக்கின்றார் போலும்.

மூன்றும் அடி அடுத்த கண்ணியில் போய் முடிகிறது.

RSV—''இருளுக்கு இறுதி காண்பான் மனிதன்—JB.
கடைசி எல்லை வரைக்கும் தேடுவான்
காரிருட் குள்ளே உலோகத் தாது.''

JB—''இருளாய்க் கிடக்கும் கருங்கற் பாறையை
அடிவரை ஆழமாய்த் துளைக்கும் காலை.''

4. சுரங்கத்தினுள் செல்பவர் மேலேயிருந்து கயிற்றில் கட்டி இறக்கப்படும் காட்சி இங்கு குறிக்கப்படுகிறது. இச்சுரங்கங்கள் எங்கோ, ஆள்நடமாடாத எட்டாத் தொலைவில் உள்ளன. இவ்வாறெல்லாம் மெய்வருந்திப் பாடுபட்டு இரும்பு, செம்பு, வெள்ளி, தங்கம் முதலிய பற்பல அரிய செல்வங்களைத் திரட்டி வருகின்றான் மனிதன். இதன் குறிப்புப் பொருள் முழுவதும் பின்னால் 12இல் விளங்கும்.

JB—''சுரங்கம் தோண்டுவர் சுடர்விளக் காளர்
அடிவைப் பதற்குப் படிஒன்று இல்லா
இடங்களில், மக்கள் எட்டாத் தொலைவினில்
அந்தரத் தினிலே தொங்குவர் ஆங்கண்.''

5. எரியுண்டதுவென—நூபியாவின் தங்கச் சுரங்கங்களில் பாறையைக் குந்தாலியால் எளிதில் பிளக்கும் பொருட்டுக் கல்லைத் தீயில் வாட்டுவார்கள், அதனால் அது எளிதில் உடையும் எனக் கி.மு. முதல் நூற்றாண்டு இறுதியில் வாழ்ந்த தியதோருஸ் சிக்குலுஸ் எழுதி வைத்துள்ளார். அத்தகைய செயலை இங்கு ஆசிரியர் குறிப்பிடுகிறார் என்பர். AB கூறும் விளக்கம் வேறு. எரிமலைகளையும் விண்வீழ் கற்களையும் உலோகத் தாதுக்களை உருக்கும் தீயின் செயலையும் கண்ட மனிதன் அரிய மணிக் கற்கள் பாறையில் உருவாகியிருப்பதைப் பார்த்ததும் அவையும் நெருப்பினால் ஆனவை எனக் கருதியிருப்பான். பதுமராகம், புட்பராகம், வைரம், பளிங்குக்கல், கோமேதகம், படிகப் பச்சை, நீலம், மாணிக்கம், மரகதம் என எசேக். 28:13இல் பெயர் குறித்துள்ளவையும் அதற்கு அடுத்த கண்ணியில் ''நெருப்பின் கற்கள்'' எனச் சொல்லியிருப்பதும் சுட்டுவன ஒரேபொருள்களாகவே தோன்றுகின்றன. ஆகையால், இங்கு ''எரியுண்டது என'' என்று கூறியது பூமிக்கு அடியில் பாறைகளில் படிந்து கிடக்கும் பலவகை மணிகளைக் கருத்தில் கொண்டேயாம் எனத் தெரிகிறது (AB).

6. நிலத்தின், தரையின்—AB; RSV, ''அதன்.''

7. பாதை ஊன்உண் பறவைகள் அறியா,
பருந்தின் கண்கள் பார்த்ததும் இல்லை.
8. ஆணவ மாக்கள் காலடி படாதது,
நாகம் ஊர்ந்த தில்லை அவ்வழி.
9. கனற்கற் பாறையில் கைவைப் பான்அவன்,
பெருங்கல் மலைகளைப் பெயர்த்துப் புரட்டுவான்.
10. பாறையிற் சுருங்கைப் பாதைகள் குடைவான்;
அரியன அனைத்தும் அவன்கண் தென்படும்.
11. ஆற்றின் தோற்றுவாய் ஊற்றுகள் ஆய்வான்;
தேற்றம் ஆக்குவான் தெரியா திருந்தவை.
12. ஆயின் ஞானம் அஃதுளவண் காண்பது?
அறிவின் உறைவிடம் அதுதான் எங்கே?

13. அதனுடை இருப்பிடம் அறிந்திலன் மனிதன்,
வாழும்இவ் வையத்து யாங்கணும் காணுன்.
14. 'என்னுள் இல்லை' என்னும் ஆழி,
'என்னிடம் இல்லை' என்னும் மாக்கடல்.

---

7,8. சுரங்கங்கள் ஆள்நடமாட்டம் அற்ற எட்டாத் தொலைவினில் உள என்று மேலே சொன்னதை ஒப்புநோக்குக.

8. ஆணவ மாக்கள்—மூலம், "sons of pride;" AB, proud beasts (41:34 காண்க).

நாகம் . . . அவ்வழி—AB; RSV, JB, "அரிமா நடந்ததில்லை அவ்வழி." மூலச் சொல் saḥal என்பது பொதுவாகச் சிங்கம் (=அரிமா) என்றே பொருள்படும். செமித்திய மொழிகளில் ஒரே அடிச் சொல்லின் வழித்தோன்றிய சொற்கள் வெவ்வேறு பொருள்களைக் குறித்தல் உண்டு. எடுத்துக்காட்டாக, எபிரேயச் சொல் nāḥāsh (=நாகம்), அக்கேடியச் சொல் nêshu (=சிங்கம்) இரண்டும் ஒரே மூலத்தி னின்று தோன்றியவை; பொருள்தான் வெவ்வேறு. எதியோப்பிய மொழியில் 'arwē என்பது அரவம் (நாகம்) ஆகவும், எபிரேயத்தில் 'aryeh, 'arî என்பது அரிமா ஆகவும் உள்ளன. இங்கு வரும் saḥal பறவை நாகத்தையே குறிக்கலாம் என்று மோவிங்கல் என்பார் கூறியதை AB ஒருவாறு ஏற்றுக்கொண்டுள்ளது.

9. அவன்—மனிதன்.

10. பாதைகள்—நைல் நதியை ye'ôr என்ற சொல்லால் குறிப்பர்; அதன் பன்மை ye'ôrim என்பதே இங்கு பாதைகள் எனப் பெயர்க்கப்பட்டுள்ளது. எகிப்திய மொழியில் அது yrw எனப்படும். (யாறு, ஆறு, வழி என்பவற்றையும் ஒப்பு நோக்குக.) மாற்று: பாறையிற் சுருங்கை ஆறுகள் குடைவான்.

12, 20. ஞானம், அறிவு—இரண்டும் ஒன்றாகவே எண்ணப்படுவதைப் பழமொழி. 1:2,3; 4:5; 9:10; 16:16 ஆகிய இடங்களிலும் காணலாம். அறிவு என்பதை உய்த்துணர்வு, பகுத்தறிவு, விவேகம் என்றும் குறிப்பிடலாம்.

13. இருப்பிடம்—வழி என்றும் விலை என்றும் மொழிபெயர்ப்பர் பலர்.

14. ஆழி, கடல்—பூமியின் அடிவயிற்றில் தோன்றுவதாகக் கருதப்படும் படைப்புக் காலக் கடல்கள். அவ்வளவு ஆழமாகத் தேடினாலும் ஞானம் அகப்படாது என்கிறார்.

15. கட்டித் தங்கம் கொடுத்துவாங் கொணுது;
வெள்ளியும் அதற்கு விலைநிறை யாது.
16. உவரித் தங்கம், அரியகோ மேதகம்,
நீலமும் அதனைக் கொள்ள வாரா.
17. பொன்னும் பாசியும் அதன்நிகர் அல்ல,
பசும்பொன் கலங்களும் பண்டமாற் ருகா.
18. பவளமும் பளிங்கும் பகர வேண்டுமோ?
மதிப்பினில் முத்தினை விஞ்சும் ஞானம்.
19. எதியோப் பியாவின் புட்ப ராகமா?
செம்பொன் கொடுத்தும் வாங்கவொண் ணுதே.
20. ஆயின் ஞானம் தோன்றும் இடம்எது?
அறிவின் உறைவிடம் அதுயாங் குளது?

21. உயிர்கட் கெல்லாம் கண்களுக்கு ஒளிந்தது;
உயரப் பறப்பவை தமக்கும் மறைந்தது.
22. அதலமும் மரணமும் 'அதனைப் பற்றிக்
கேள்விப் பட்டோம்' என்றுதான் கிளக்கும்.
23. அதற்கு வழியினை அறிந்தவர் கடவுள்;
அதனுடை உறைவிடம் அவர்க்குப் பழக்கம்.
24. அவர்—மண்ணக எல்லைகள் கண்ணுள் வைத்தநாள்,
வானின் கீழ்உள யாவும் பார்த்தநாள்,
25. காற்றுக்கு ஒருநிறை கணித்துக் கொடுத்தநாள்,
நீரினை அளவினுல் முகந்து விடுத்தநாள்,
26. மழைக்குக் காடி வகுத்து வைத்தநாள்,
இடியொடு பொழிபெயல் தடம்அ மைத்தநாள்,

---

16. உவரி—22:24 குறிப்பு காண்க.

17. பாசி—பாசி மணி.

18. இரண்டாமடி JB, "ஞானத் தோடு காணின் முத்து
கடலுள் மூழ்கி எடுப்பது வீணே."
முத்து—RSV, JB; AB—"மாணிக்கங்கள்."

22. அதலம்—AB, "perdition;" 26:6இல் "பாழிடம்" என அமைந்தது.
கேள்விப்பட்டோம்—நேரில் உணர்ந்தறியவில்லை.
கிளக்கும்=சொல்லும்.

24. விண்ணையும் மண்ணையும் கடவுள் தமது ஞானத்தாலும் அறிவினுலும் படைத்தார் (பழ. 3:19).

26. காடி—AB, "groove." 38:25 காண்க.
பெயல்=மழை; AB, "thundershower."
RSV—"மழைக்குக் கட்டளையிட்டபோது, இடியின் மின்னலுக்கு வழி வகுத்த போது."

27. அன்றே அஃது அவர் எண்ணி அறிந்தார்,
ஆய்ந்து பார்த்தார், ஆழம் கண்டார்.
28. மனிதனை நோக்கிவாய் மலர்ந்தார்: ''காண்பாய்,
ஆண்டவர்க்கு அஞ்சுதல் அதுவே ஞானம்;
தீமையை விட்டு நீங்கலே அறிவு.''

---

**28.** இக்கண்ணி இடைச் செருகல் என்பது AB கருத்து. அதற்கு அது கூறும் காரணங்கள் பல. முதலடி செய்யுளின் அளவுக்குக் குறைகின்றது. மேலும், கடவுள் என்பதற்குக் கையாண்டுள்ள சொல் 'dny இந்நூல் முழுவதிலும் வேறு எங்கும் இல்லை. ஞானம் மனிதனுக்கு எட்டாதது என்று வருணித்த பிறகு, பக்தி ஞானத்தைத் திடீரென்று இக்கண்ணி குறிப்பிடுகிறது. கடவுள் உலகத்தைப் படைத்துக் காத்துவரும் ஞானம் மனிதனுக்கு எட்ட ஒண்ணாததுதான். ஆயினும், அந்த ஞானமும் இந்தப் பக்தி ஒழுக்கம் உள்ளவர்களுக்குக் கடவுள் அருளால் கிட்டும் என்பது இக்கண்ணியின் கருத்தெனக் கொள்ளலாம்.

# 29

# காண்பேனே இனி அந்த நாள்?: யோவு

**29:** [கடவுள் அருளால் தாம் சீரும் சிறப்புமாக வாழ்ந்த முன்னைய நிலைமையை யோவு ஏக்கத்தோடு நினைவு கூர்கின்றார் (1–6). பெருமதிப்புக்கு உரியவன், ஏழை பங்காளன், தாழ்ந்தோர் காவலன் என எல்லோரும் தம்மை நாவாரப் புகழத் தாம் இன்பமாய் வாழ்ந்த காலத்தை யோவு எண்ணிப் பார்க்கின்றார் (7–10; 21–25; 11–17). கடைசிவரை அந்தப் பேரும் புகழும் சீரும் சிறப்பும் நீடிக்கும் என்று தாம் கண்டிருந்த கனவையும் (18–20) எடுத்துரைக்கின்றார்.]

*29:1. யோவு மீண்டும் தம் பாட்டைக் கூறலானார்:*

*2. ''காண்பே னேஇனிக் கடந்த நாளினை,*
*கடவுள் எனக்குக் காவல் புரிந்தநாள்,*
*3. எனது தலைக்குமேல் அவர்விளக்கு ஒளிர்ந்தநாள்,*
*இருட்டிலும் யான்அவர் ஒளிவழி நடந்தநாள்,*
*4. வாழ்வின் இளமை வயங்கிப் பொலிந்தநாள்,*
*கடவுள் என்மனை கட்டி எழுப்புநாள்?*
*5. அன்று பரமன் என்னோடு இருந்தனன்;*
*என்னைச் சுற்றிஎன் குழந்தைகள் இருந்தன;*
*6. என்கா லடிகள் வெண்ணெய் தோய்ந்தன;*
*பாறைகள் எண்ணெய் ஆறாய் ஒழுகின!*

*7. நகரின் வாயில் நான்செல் காலை,*

---

1. 27:1 காண்க.

2. நாளினை—AB, RSV, மாதங்களை.

4. AB மொழிபெயர்ப்பைப் பின்பற்றியது; ஆயின் RSV, JB போன்றவற்றுக்கு மாறுபட்ட பொருள் அன்று.
மனை—குடும்பத்தை என்பது கருத்து.

6. செல்வச் செழிப்பைக் குறிக்கிறார்.
பாறை—எண்ணெய் பிழியும் எந்திரக் கல்லைக் குறிப்பது போலும்.

7. ஊர்ப் பொது விவகாரங்களையும் வழக்குகளையும் ஆராய்ந்து குறை தீர்க்கவும் முறை செய்யவும் பெரியவர்கள் கூடுவது நகரின் வாயிலில், அங்குள்ள சதுக்கத்தில். அதுவே மன்று. சதுக்கம் பயிரின் கதிர்க்கட்டுகளைக் கொண்டுவந்து அடித்துத் தானியத்தைப் பிரிக்கும் களமும் ஆகும்.

மன்றில்என் இருக்கைக்கு ஏகிய காலை,
8. என்னைக் கண்டதும் இளைஞர் ஒதுங்குவர்,
முதிர்ந்த வயதினர் எழுந்து நிற்பர்,
9. பெருங்குடி மக்கள்தம் பேச்சை நிறுத்துவர்,
கரங்கொடு வாயினைப் புதைத்து நிற்பர்;
10. அதிகாரம் உடையார் குரலும் அடங்கும்;
அவர்நா அண்ணத் தோடுபோய் ஒட்டும்.
21. எப்போது பேசுவேன் என்றுகாத் திருப்பர்;
யான்சொல வந்ததை அமைதியாய்க் கேட்பர்.
22. பேசிநான் முடித்தபின் மேல்பே சார்கள்;
பொழிந்தன அவர்கள்மேல் என்வாய் மொழிகள்.
23. மழைக்கோ என்ன எனக்குக்காத் திருப்பர்,
பிந்திய மழைபிடிப் பார்போல் 'ஆ' என.
24. புன்னகை புரிவேன், தமக்கா என்பர்;
என்முகப் பொலிவினை இழக்க மாட்டார்.

---

கிரேக்க மொழிபெயர்ப்பில் ''வாயில்'' என்பதற்குப் பதிலாகக் ''காலை'' (morning) என்ற சொல் உள்ளதாம். கும்ரான் சுவடியிலும் "...morning(s) in the gates of the city,'' என வருகிறதாம். ''This reading is puzzling,'' says AB, ''since an extra word for morning would make the original line metrically overweighted.'' இங்கு தமிழில் காணும் காலை விடியற்காலம் அன்று, நேரம், போது என்பதே எனச் சொல்லத் தேவையில்லை.

10. அவர் நா . . . ஒட்டும்—நாவசைக்க முடியாதவராவர்; யோபினிடம் அவர்களுக்கு அவ்வளவு மதிப்பு, மரியாதை.

குரலும் அடங்கும்—எபிரேய மூலத்திலுள்ளதை அப்படியே மொழிபெயர்த்துள்ள கும்ரான் சுவடியின் பாடம்: ''அதிகாரம் உடையார் குரலும் ஒளியும்.''

21–25. கண்ணிகள் இந்த இடத்தில் இருப்பதுதான் நல்ல பொருத்தம் (JB, AB).

21. காத்திருப்பர்—சங். 36:7; புலம்பல் 3:26 காண்க.

சொ(ல்)ல வந்தது—AB, RSV, (my) counsel.

22,23. உலகம் வாழ உதவும் மழை போன்றது கடவுள், அரசர், வரம் பெற்றோர் கூறும் வார்த்தை (உபா. 32:2; பழ. 16:15; ஓசே. 6:3 காண்க).

ஆ என—வாயைப் பிளந்தவாறு. அருள் மொழி கேட்கப் பக்தியுடையான் இவ்வாறே ஆவலாயிருப்பான் (சங். 118:131).

24. பல வகையாகப் பொருள் படவும், பல வகையில் பொருள் கெடவும் மொழிபெயர்க்கப்பட்டுள்ள கண்ணி இது என்று AB குறிப்பிடுகிறது. JB விளக்கமாக மொழிபெயர்த்திருப்பதே போல்,

''அவர்களைப் பார்த்துநான் முறுவல் செய்தால்
அப்படி யாஎன அசந்து போவர்''

என்பதே இதன் பொருள். யோபின் முகமலர்ச்சியைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பதே அவருடைய நண்பர்களுக்கு இன்பமாக இருக்கும்.

25. அவர்கட்கு—நான்வழி தேர்ந்தேன் நாயகன் ஆனேன்;
பாசறை உறையும் வேந்தென வாழ்ந்தேன்;
பாதைநான் சொல்வேன், படருவர் அவ்வழி.
11. கேட்ட செவிகள் என்னைப் புகழ்ந்தன;
பார்த்த கண்கள் எனைப்பா ராட்டின;
12. வந்துமுறை யிட்ட வறியவர், ஏதிலார்
விடுதலை அடைய மீட்டேன் ஆதலால்.
13. நொந்து கெட்டவர் வாழ்த்தினர் என்னை,
விதவையர் உள்ளம் குளிர்ந்தனர் என்னால்.
14. அறம்அணிந் தேன்,அஃது என்னை அணிந்தது;
அங்கியும் பாகையும் ஆயதுஎன் நீதி.
15. குருடருக்குக் கண்ஆனேன்;
முடவருக்குக் கால்ஆனேன்.
16. ஏழைக்குத் தகப்பனா யிருந்தேன், ஊருக்குப்
புதியவன் வழக்கும் நன்குஆ ராய்ந்தேன்.
17. கொடியோர் பல்லை உடைத்தேன், அவர்வாய்க்கு
இரையா னோரை எடுத்து விடுத்தேன்.

18. ஆகவே எண்ணினேன், 'புகழொடு போவோம்,
பனையின் பலநாள் நெடிது வாழ்ந்து,

---

25. மூன்றாமடி AB திருத்தி மொழிபெயர்த்துள்ளது; JBயும் அப்படியே. திருத்தாத மூலத்திலுள்ளபடி RSV, ''அழுவாரைத் தேற்றுவான்போல.''

11. புகழ்ந்தன—JB; AB, ''வாழ்த்தின''; RSV, ''வாழ்த்தப் பெற்றவன் என்றன.''

12,13. 22:6–9இல் ஏலிப்பாசு சாட்டிய பழிகள் தம்மைச் சாரா என்று யோபு சுட்டுகின்றார். ஏழைகள், கைம்பெண்கள், திக்கற்றவர்கள் இவர்களைக் காப்பதே ஆள்வோரின் முதற் கடன்.

13. நொந்து கெட்டவர்—destitute (AB); மூலம், "one perishing." எனவே RSV, JB, ''சாகக் கிடப்பார் (வாழ்த்தினர் என்னை)''.
விதவையர் . . . என்னால்—கிரேக்கம், ''விதவையர் வாய் என்னைப் பாராட்டியது''; கும்ரான் சுவடி, ''விதவையர் வாய் எனக்காக (இறைவனை) மன்றாடியது.''

14. பாகை=தலைப் பாகை.

15. எரேமி. 31:8 காண்க. கண் தெரியாதார், கை கால் வழங்காதார், கருவுற்றிருப்போர் ஆகியோரைச் சிறப்பாகப் பாதுகாக்க வேண்டும்.

16. யாத்திரா. 22:21 காண்க.

17. பல்லை உடைத்தேன்—சங். 3:7, 57:6, 123:6 காண்க.
எடுத்து விடுத்தேன்—AB; RSV, ''அவர்கள் விட்டுவிடும்படி செய்தேன்.''

18. புகழொடு—JB; AB, ''பழுத்த வயதொடு''; RSV, ''எனது கூட்டில்''; தி. ப., ''என் கூடாரத்தில் அமைதியாய்.''
பனையின்—JB; AB, RSV, தி. ப., ''மணல்போல.''

19. எனதுவேர் நீர்வரை எட்டிப் பரவும்,
என்தழை பனிநீர் தங்கி நிற்கும்,
20. என்னோடு என்புகழ் என்றும் பசுமையாம்,
என்கை வில்லும் அருது விளங்கும்'—என.

---

20. AB மொழிபெயர்ப்பு. RSV, "என்றும் புதிதென இலங்கும்என் கைவில்." வில் முறிந்தவன் ஆற்றல் அற்றவன் என்பது குறிப்பு (ஓசே. 1:5 காண்க).

AB (18) "எண்ணினேன், 'பழுத்த வயதொடு துஞ்சுவேன்,
மணல்போல் பலவாய் வாழ்நாள் பெருக.'"

JB (19–20): "எனதுவேர் நீர்வரை எட்டும்; என்தழை
இரவுவீழ் பனிநீர் தங்கி நிற்கும்.
என்னோடு என்புகழ் என்றும் மங்காது
என்கை வில்லும் புதுவலுப் பெறும்" என.

# 30

# இன்று நான் கேலியாய்ப் போனேன்: யோவு

**30:** [ஆனால் இப்பொழுது நாட்டின் கழிசடையானவர்களும் தம்மைப் பார்த்து இகழ்ந்து பேசும்படியும் தமக்குத் தொல்லை கொடுக்கும்படியும் ஆயிற்றே என்று யோவு வருந்துகின்றார் (1–14). அருவருக்கத் தக்க நோயும் புண்ணும் நோவும் ஆகி, கடவுளால் வரும் அச்சங்களால் அலைப்புண்டு, சாவை எதிர்நோக்கியிருக்கும் தமது இன்றைய நிலைமையை (15–31) அவர் எடுத்துரைக்கின்றார்.]

*30:1.* “ஆனால் இன்றுநான் கேலியாய்ப் போனேன்
எனக்குஇளை யோர்க்கே; இவர்தந் தையரை
என்றன் ஆட்டு மந்தை நாய்களோடு
ஒன்றாய் விடவும் உடன்பட் டிரேனே.
*2.* என்ன பயனும் எனக்குஅவர் கைத்திறம்?
தெம்பெலாம் இழந்து தேய்ந்த உடம்பினர்;
*3.* வறுமையும் பட்டினி வயிறுமாய் மெலிந்து
சருகுகள் கறித்துத் திரிவோர் அவர்கள்

---

*1.* உடன்பட்டிரேன்—AB, RSV, “disdained”; அவ்வளவு கேவலமானவர்கள் அவர்கள்; ஏன் என்பதை அடுத்து (2–8) விளக்குவார்.

‘நாயினும் கேடாக’ என்ற தமிழ் வழக்கும் இங்கு நினைவுகூரத் தக்கது.

*3.* மெலிந்து—3:7இல் ‘‘பாழாய்ப்போக’’ என்றும், 15:34இல் ‘‘மலடு’’ என்றும் வந்த அதே சொல்; ‘‘சக்தி அற்ற’’ என்பது பொருள்.

JB—‘‘இல்லாமையும் பசிப்பிணியும், தேய்க்கத் தேய்ந்த சீவன்இல் உடம்பினர்.’’

பட்டினி வயிறு—RSV, hard hunger; AB, பசி அன்று உணவுக் குறைபாடே இங்கு வந்த கருத்து எனக் குறித்துள்ளது.

சருகுகள் கறித்துத் திரிவோர்—AB, gnawing the dry ground; RSV, they gnaw the dry and desolate ground. இங்கு ‘‘தரை’’ என்ற சொல் மூலத்தில் காணப்படாதது, அடியின் அளவு குறைவாயிருப்பது கண்டு மொழிபெயர்ப்பாளர்கள் சேர்த்தது. கும்ரான் சுவடியில் சிதைந்துள்ள இவ்வடியை மொழிபெயர்த்தோர் ‘அவர்கள் தம் பசியில் பாழ் நிலத்துக் கீரையைத் தின்ன விழைவர்’ என்று பொருள் படுத்தியுள்ளனர். கறித்து என்று பெயர்த்துள்ள மூலச் சொல்லுக்கு ‘go away, flee’ என்ற பொருளும் உண்டு; Roaming the arid steppe என்பது Targum (AB).

இரவே பொட்டலாய் வறண்ட நிலத்தே;
4. புதரிடை உப்புக் கீரையைப் பறிப்பார்;
வாரியற் புல்லின் கிழங்கினைத் தின்பார்;
5. ஊர்க்குள் அவர்களை ஒருவரும் விடாஅர்,
கண்டால் கள்வரே என்னக் கத்துவர்.
6. ஓடைப் பள்ளம், பாறைப் பிளவு,
உறைவிடம் அவர்க்குத் தரையகக் குழிகள்.
7. புதரிடை ஏங்கிப் புலம்புவர் கனைத்து;
முட்செடிக்கு அடியில் முடங்கிக் கிடப்பர்.
8. அறிவிலார் மக்கள், பெயரிலாப் பூச்சிகள்,
நாட்டின் கழிசடை யாய்நலிந் தோரே.
9. இவர்களுக்கு இன்றுநான் தெம்மாங்கு ஆனேன்;
ஊஉர் வம்புக்கு ஓர்இலக்கு ஆனேன்.

---

இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டு ஆக்கியது "சருகுகள் கறித்துத் திரிவோர்."

இரவே பொட்டலாய் வறண்ட நிலத்தே—AB, By night in desolate waste; ஆயின், இங்கு night என்பது (last) night என AB குறிக்கிறது; RSV அடிக் குறிப்பு ground yesterday waste என்கிறது. ஆகவே, இவர்களுக்கு முன்பே முந்திய நாள் இரவே இவர்களைப்போல் வேறு சிலர் கீரை முதலியவற்றைப் பறித்துப் பொட்ட லாக்கி விட்டிருக்கின்ற நிலம் என்பது ஆசிரியரின் கருத்தாகத் தெரிகிறது. எனவே தான், ஷி தமிழாக்கம்.

4. முதலடி—AB; RSV, JB, "உப்புக் கீரையும் காட்டுப் புதர்களின் இலைகளும் பறிப்பார்."

இரண்டாமடி—தி.ப., JB; AB, RSV, "வாரியற் புல்லின் வேரினால் (குளிர்) காய்வர்." அவ்வேரில் நல்ல கங்கு விழும் என்கிறது AB. அவ்வேர் தின்னத் தக்க தன்று என்றும் AB குறிப்பிடுகிறது; ஆயின், பசிக்கொடுமையால் அதனைத் தின்பர் என்னலாம்.

5. ஊர்க்குள்—AB, "community;" RSV, "among men;" மூலச் சொல் gēw என்பதற்கு "உள்ளே, நடுவே" என்ற பொருள் சீரியா மொழியில் உள்ளதை AB சுட்டிக் காட்டுகிறது.

விடார்—AB, RSV, துரத்துவர்.

கத்துவர்—"ஊர் மக்கள்" தொக்கி நிற்கும் எழுவாய்.

7. ஏங்கிப் புலம்புவர் கனைத்து—AB, RSV, "bray."

JB—"முட்புதர்க் கிடையில் நெருக்கியிருந்து, புலம்பி அழுவதும் கேட்கலாமே."

8. மூலம்: "sons of a fool, also sons of no name" (AB).

நாட்டின் . . . நலிந்தோரே—AB, RSV வாக்கியங்களை அப்படியே மொழி பெயர்த்தால், "நாட்டினின்று அடித்துத் துரத்தப்பட்டோர்."

9. தெம்மாங்கு—மூலம், "song." சங். 68:12 காண்க.

வம்புக்கு—மூலம், "word;" RSV, "byword."

10. சீயென வெறுப்பர்என் கிட்ட வரார்என்
முகத்தில் காறித் துப்பவும் தயங்கார்.
11. எனதுநாண் கழற்றி எனைஅவர் தாழ்த்தலால்
இவர்கள் வாய்க்குக் கடிவாளம் இல்லை.
12. என்வலப் புறத்தே எழும்இவர் கும்பல்;
அப்படி இப்படி அலையப் பண்ணுவர்;
தாக்கி அழிக்கத் தூம்வழி பார்ப்பர்;
13. மறிப்பர்என் பாதை, குலைப்பர்என் தன்னை;
அவர்களைத் தடுப்பார் ஆரும் இல்லை.
14. அகன்ற உடைப்பிற் புகுவார் போலத்
திரண்டு வருவர் திமுதிமு வென்று.

---

10. இரண்டாமடி—JB, RSV; AB, "From my face they spare no spit."

11. JB, RSV மொழிபெயர்ப்புக்களைத் தழுவியது. AB மூலத்தை மாற்றியிருப்பது இங்கு வேண்டாத வேலை: My cord *they* lose and afflict me, cast off restraint before me. நாணினைக் கழற்றி விட்டுக் கீழே கிடத்தப்பட்ட வில்லுக்கு யோவு தம்மை ஒப்பிடுகின்றார்.

12. JB—"என்வலப் புறத்தே எழும்இவர் கும்பல்; கல்லே இவர்கள் ஆயுதம்; எறிய, என்னை நோக்கி எட்டுவைப் பார்கள்."

கும்பல்—மூலச் சொல் நுட்பமாகப் பொருளறியக் கடினமானதாம்; pirḥāḥ= break forth (from the womb), sprout. கும்பி, குப்பென்று கிளம்பு முதலியன நினைவில் வருகின்றன.

அப்படி . . . பண்ணுவர்—AB, "trip my feet;" RSV, "they drive me (my feet) forth;" NEB Note, "they let loose my feet;" JB Note, "they stone me with weapons."

13. JB—"எவ்வழி தப்பவும் ஒருவழி வையார்; தாக்குவர் ஒருவரும் தடுப்பாரில்லை." மூலத்தில் இது மூன்று அடிகளாக இருந்திருக்கும் என்பார் உண்டு.

14. JB—"அகன்ற பிளவு வழிநுழை வார்போல்
வந்து நெருக்குவர்; கற்குவி யலின்கீழ்
உருண்டு கிடப்பேன்."

இரண்டாமடி—AB, "Amidst a *tempest* they roll on." But notes "the figure is not entirely clear. It may be that the word denotes here the crash of the breached masonry." RSV, "amid the *crash* they roll on." RSV அடிக் குறிப்பு: Hebrew, "as *like* a wide breach . . ." எனவே இப்படியும் அமைக்கலாம்:

"பெரும்பிள வுற்று மதில்சரிந் ததுபோல்
வந்து சாடுவர் திமுதிமு வென்று."

பிறிதோரிடத்தில் AB, இரைச்சலைக் குறிக்கும் சொல் ஒன்று புயலைக் குறிப்பதாக வந்திருப்பதை எடுத்துக்காட்டுகிறது. ஒருவேளை அந்த ஓசையே இங்கு குறித்தது போலும். அவ்வாறுயின் திமுதிமு என்பது முற்றும் பொருத்தமாகும்,

15. திகில்கிலி என்மேல் படையெடுப்பு ஆயின;
பறந்தது காற்ருேடு எனது மதிப்பு;
மறைந்தது முகிலென எனது வாழ்வு.
16. வற்றியது இனிஎனது ஆவியும், என்னை
வருத்த மான நாள்கள் வவ்வின.
17. இரவுஎன் எலும்பினை உருக்கி எடுக்கும்;
என்னைப் பியப்பன உறக்கம் அறியா.
18. கெட்டியாய் என்றன் ஆடையைப் பற்றும்,
கழுத்துப் பட்டையாய் இறுக்கிச் சுற்றும்.
19. சேற்றில் அழுந்தச் செய்து விட்டார்;
புழுதியும் சாம்பலும் போல்ஆ னேனே.

20. கூப்பிடு கின்றேன், கேட்க மாட்டீர்;
முன்நிற் கின்றேன், என்னைப் பாரீர்.

---

15. மதிப்பு—AB; JB, RSV, மானம்.

16. வற்றியது—AB, emptied; RSV, poured out. 'ஆவி வற்றியது' பேச்சு வழக்கு மாகும்.

ஆவி—soul; மூலச் சொல் nefesh என்பதற்கு மூச்சு, உயிர், பசி, தாகம், உணர்ச்சி எனப் பல பொருள்கள் உண்டு; ஒருவர் திறன்கள் முழுமையும் அதில் அடங்கும்; ஆவியை உடம்பின் வேருய்த் தனிப் பொருளாகக் கருதுவது திருநூலின் மரபு அன்று என AB குறிக்கிறது.

வருத்தமான நாள்கள்—AB, RSV, "days of affliction." அவருக்கு வருத்த மாக இருக்கிறது என்ருல் அவர் உயிர் போகும் நிலையில் உள்ளார் என்பது பேச்சு வழக்கு; அதுவும் இங்கு பொருத்தமே.

18. தி.ப. மொழிபெயர்ப்பு இது எளிமையாகவும் பொருத்தமாகவும் தெரிகிறது. ஆயின், இது மொழிபெயர்க்க முடியாதபடி கடினமானது. "(எனது பிணியின்) பெரு வலியால் எனது ஆடை மாறியது; என் மேலுடையின் கழுத்துப் பட்டைபோல் அது என்னை இறுக்கிச் சுற்றியது" என்பது KJ. இதுதான் மூலமும். ஆனுல் கிரேக்கத்தில் 'மாறியது' 'பற்றியது' ஆயிற்று; RSV-யும் அதுவே. முதலடியில் பற்றியது என இருந்தால் இரண்டாமடியில் 'சுற்றியது' இணையாகாது, இது 'பிடித்தது' ஆக வேண்டும் என AB மாற்றியுள்ளது. பற்றியதும் பிடித்ததும் யார், எது? மூலத்தில் எழுவாய் தொக்கி நிற்கிறது. கடவுள் என்கிறது AB. எனவே, "பெருவலி கொண்டென் ஆடையைப் பற்றினுர், மேலுடைக் கழுத்துப் பட்டையைப் பிடித் தார்" என்பது AB மொழிபெயர்ப்பு.

19. AB—"வீசிச் சேற்றினுள் எறிந்தார் கடவுள், . . ." முந்திய அடியின் குறிப்பு காண்க. மூலத்தில் எழுவாய் தொக்கி நிற்கிறது. தொக்கி நிற்கும் எழுவாய் கடவுள் என்பதற்கு ஆதாரமாக, அடுத்த அடியில் யோபு கடவுளை நோக்கிப் பேசுவதைக் காட்டலாம்.

20–23. கடவுளை முன்னிலையாக்கிக் கதறுகிருர் யோபு.

20. என்னைப் பாரீர்—RSV, பார்க்க மாட்டீர்; ஆனுல் எதிர்மறைச் சொல் மூலத்தில் இல்லை. AB, you stand (and look at me) என இவ்வடியின் முதற் பகுதியை மாற்றியுள்ளது, சீரியா மொழிப் பாடத்தைப் பின்பற்றி.

21. எனக்குநீர் கொடியவர் ஆகிப் போனீர்;
புடைக்கின் றீர்எனை வலியஉம் கையால்.
22. தூக்குவீர் மேலே காற்றில்நான் மிதக்க;
போக்குவீர் சீறும் புயல்அலைக் கழிக்க.
23. தெரியும், மீண்டுஎனைச் சாவிடம் விடுப்பீர்;
உயிர்வாழ் வனவெலாம் ஒன்றுசேர் இடமதே.

24. பாழாம் நிலையில் பரதவித்து அழைக்கும்
ஏழைமேல் எவரும் கைவைப் பார்களா?
25. விதியிலார் கண்டுநான் அழுத தில்லையா?
வெறுங்கையர்க்கு என்உயிர் அழுங்கிய தில்லையா?
26. இன்பம் காண்பேன் என்றுநான் நம்பினேன்,
துன்பமே வந்தது;
ஒளிகாண் பேன்என எதிர்பார்த் திருந்தேன்,
இருளே அடைந்தது.
27. இடையறுது எனது வயிறு கொதிக்கும்;
எதிர்கொள நிற்பன இன்னு நாள்களே.
28. கதிரோன் இல்லை, கருகினேன் செல்வேன்;
எழுவேன் குழுவில் அழுவேன் இரந்து.

---

21. புடைக்கின்றீர்—முறத்தில் இட்டுப் புடைப்பது இங்கு உவமையோ? அடுத்த அடியில் வரும் தூக்குதலும் போக்குதலும் அதற்குப் பொருத்தமே.

22. மிதக்க—மிதத்தல் (மிதப்பு) இனிமையே.

23. மீண்டு—1:21 குறிப்பு காண்க.

24. மொழிபெயர்ப்புக்காக அடிகளை முன்பின்னுக மாற்றியுள்ளேன்.
JB—''இழந்துவந்து என்னிடம் முறையிட்டு அழுத
ஏழைமேல் யான்கை நீட்டியது உண்டா?''

25. விதியிலார்—AB, ''hapless;'' மூலம், ''the hard of day;'' day=fate. காண்க 3:1 குறிப்பு.
இரண்டாமடி—AB, RSV; 'ஏழையர்க் கென்னுயிர் இரங்கிய தில்லையா' என்றும் அமைக்கலாம்; ஆனுல் அது அவ்வளவு அழுத்தமாக இல்லை.

26. JB-யைப் பின்பற்றியது.
AB, RSV:—''ஆயின்நான்—இன்பம்எதிர் பார்த்தக்கால் துன்பம் வந்ததே,
ஒளிவருமென் றிருந்தக்கால் இருள்வந் தடைந்ததே.''

27. வயிறு—AB; RSV, ''உள்ளம்.'' எபிரேய மரபில் வயிறு உணர்ச்சிகளின் உறைவிடமாகும்.
மாற்று: ''ஓய்வுஅறி யாதுஎன் உள்ளம் கொதிக்கும்;
நேர்எதிர் நிற்பன பேரிடர் நாள்களே.''

28. வெயிலால் நான் கருகவில்லை, உள்ளத்து வேதனையால் கருகினேன் என்பது கருத்து.
இரந்து=உதவி வேண்டி.

29. ஊளை நரிக்குநான் உடன்பிறப்பு ஆனேன்,
நெருப்புக் கோழியின் தோழனுய்ப் போனேன்.
30. கறுத்தது என்மேல்; தோலும் உரியும்;
காய்ந்து தீயும் கனலாய் எலும்பு.
31. அரற்றுதற்கு இசைய ஆயிற்று என்யாழ்;
ஒப்பாரி வைப்பார்க்கு ஒத்ததே என்குழல்.

---

29. ஊளை—தெளிவுக்காகச் சேர்த்தது. நரியின் வருத்தம் தோய்ந்த ஊளையும், தீக்கோழியின் ஊளை முதலிய ஒலிகளும் யோபு தம் புலம்பலையும் அழுகையையும் அவற்றின் செயலோடு ஒப்பிடத் தூண்டுகின்றன.

30. மேல்=மேனி. Dahood மொழிபெயர்ப்பு வேறு:

"கரிச்சட் டியினும் கறுத்தது என்தோல்;
அனற்காற்று அதனினும் பொசுக்கும்என் எலும்புகள்."

31. விரைவில் சாகப் போகிறேம் என்ற எண்ணம் தலைதூக்கியுள்ளது. இதற்கா கடவுள் தம்மைப் படைத்தார் என்ற ஏக்கமும் கலந்து வருகிறது.

# 31

## இனி மேலோன் பேசட்டும்: யோவு

**31:** [இனி, யோவு தாம் இன்னின்ன தீமைகள் செய்திருந்தால் இன்னின்ன கேடுகள் தமக்கு நேரட்டும் என்று தாம் செய்யாத பழிபாவங்களின் பட்டியல் ஒன்று தொகுக்கிருர். கள்ளப் பார்வை கூடாது எனத் தமது கண்ணுக்குத் தடை விதித்ததையும், அநியாய வழியில் சொத்து சேர்க்காத தையும், தமது நிலத்தின் குடியானவர்களை நெறிதவறி நடத்தாத தையும், பிறன் மனை நாடாத பேராண்மையையும், அடிமைகளையும் ஏழை களையும் விதவைகளையும் தவருக நடத்தாததையும், செல்வத்தில் பற்று வைக்காததையும், சூரியனையும் சந்திரனையும் தெய்வமென்று வணங்காத தையும், தமது பகைவரின் துன்பம் கண்டு மகிழாததையும், சோதோம்–கொமோராவின் பாவங்களுக்கு இடம் கொடுக்காததையும் எடுத்துக்கூறி, இனிக் கடவுளே தம் மீதுள்ள குற்றச்சாட்டை எழுதி நீட்டட்டும் என்று பெரிய ஏக்கத்தோடு அமர்கின்ருர் யோவு (1–40).]

*31:1.* *"கண்களுக்கு என்னேடு ஓர்உடன் படிக்கை;*
*கன்னி ஒருத்தியை எங்ஙனம் காணும்?*
*2.* *வானின் கடவுள் வழங்கும் பங்குஎன்?*
*விண்ணின் பரமன் விதிக்கும் உரிமைஎன்?*
*3.* *திடுமெனுங் கேடு தீயோர்க்கு அன்ருே?*
*கொடுந்துயர் கொடுமை புரிந்தவர்க்கு அன்ருே?*
*4.* *என்வழி அவர்தம் கண்விழி இல்லையா?*
*என்அடித் தடமெலாம் அவர்கணக்கு இல்லையா?*

---

*1. கண்களுக்கு—மூலத்திலும் நான்காம் வேற்றுமை உருபுதான் உள்ளது; வழக்க மாக இருக்க வேண்டியது மூன்றும் வேற்றுமை உருபு 'ஓடு.' "கண்களோடு நான் உடன்படிக்கை செய்துகொண்டேன்" என்ருல் கண்களைத் தனக்குச் சரிநிகராக வைத்து ஒப்பந்தம் செய்ததாகப் பொருள்படும். மேல்நிலையில் உள்ளவன் கீழ் நிலையில் உள்ளவனேடு ஒப்பந்தம் செய்து சில தடைகளை, நிபந்தனைகளை விதித்துச் சுமத்திக் கட்டுப்படுத்துவதுபோல் யோவு தம் புலன்களை அடக்கி ஆண்டு வந்தார் என்பது குறிப்பு* (AB).

*கன்னி ஒருத்தியை*—RSV, JB; AB *'மடமையை' என்று திருத்தியுள்ளது. ஆயினும், இங்கு 'கன்னி' என்றது எரெமியா இறைவாக்கினர் கண்டித்த விண்ணரசி வணக்கத்தைக் குறிக்கலாம் என்கிறது* AB *(எரெ. 7:18; 44:16–19). சுக்கிரன் நட்சத்திரத்தை விண்ணரசி என்று மக்கள் வணங்கியதுபோல் யோவு செய்யவில்லை; பின்ஞல் சூரியன், சந்திரன் பற்றி அவர் கூறுவதும் காண்க.*

*எங்ஙனம் காணும்?—காணது என்பது கருத்து.*

5. பொய்ம்மையை நோக்கிநான் போனது உண்டா?
மோசடிக்கு என்கால் முனைந்தது உண்டா?
6. நேரிய துலாக்கோலில் வைத்தென்னை நிறுக்கட்டும்,
நிறைகுறை யேன்என்பது இறைவர்க்குத் தெரியட்டும்,
7. நெறிபிறழ்ந்து என்கால் அடிகள் திரிந்தவோ,
நெஞ்சம்என் கண்களின் பின்சென் றதுவோ,
கைகள் கறைபடிந் தனவோ ஆயின்,
8. யான்விதை விதைக்கப் பிறன்அறுத்து உண்க,
பூண்டற ஒழிக வேரொடும் என்கிளை.
9. பெண்களின் மையல் என்மனம் கொண்டதேல்,
பிறன்மனைக் கதவிடை யான்ஒளிந் திருந்தனேல்,
10. என்மனை யாள்இன் னொருவனுக்கு அரைக்க,
மற்றவர் சாய்க மனையவள் மேலே.
11. இழிந்த காமத் தீவினை அதுவாம்,
அறத்தின் தண்டனைக்கு ஆன பழியாம்,
12. அழிவு வரைக்கும் அவியா அழலாம்,
ஆக்கம் அனைத்தையும் அடியோடு அழித்திடும்.

38. என்பழி கூவிஎன் நிலம்கிடந்து அரற்றுமேல்,
உழுத சால்கள் ஒருங்கிருந்து அழுமேல்,

---

5. பொய்ம்மை—RSV, ''falsehood;'' AB, ''vanity;'' Dahood, ''idol''—மூன்றுக்கும் ''பொய்ம்மை'' பொருந்தும். பொய்ம்மையும், மோசடியும் பொதுப்பட எல்லாப் பாவங்களையும் குறிப்பனவாக இங்கு வந்துள்ளன என்பது AB.

6. நிறை குறையேன்—மூலத்தின் சொல்லும் இத்தகையதே (Dahood) (=full weight); integrity (RSV). நிறை=கற்பு, நீதி, சால்பு.

7. கைகள் கறை—மாசில்லாத உள்ளம் உடையவர் கைகளும் மாசின்றி விளங்கும் (சங். 23:4 காண்க).

8. என் கிளை—AB; RSV, ''என்க்கென வளர்வது.''

10. அரைக்க—மாவரைப்பதைக் குறிக்கும் என்பர் சிலர்; அது அன்று; உருவகமாகக் குறித்தது. இது அடுத்த அடியில் விளக்கம்.

11,12. இவை இடைச் செருகல் என்பார் உளர்.

12. அவியா அழல்—உபா. 32:22, பழ. 6:27–29 காண்க.

ஆக்கம்—AB, income; RSV, increase; JB, தி. ப., விளைச்சல்களையெல்லாம். ஆக்கம் என்பது பொதுவாகச் செல்வம் எனினும் மென்மேலும் பெருகும் பெருக்கமே அதன் சிறப்புப் பொருள்.

அழித்திடும்—AB; RSV, ''தீய்த்திடும்.''

38–40 கண்ணிகள் இந்த அதிகாரத்தின் இறுதியில் வருவது யோபின் சூளுரை நுனிக் கரும்புபோல் முடிவதாகச் செய்கிறது என்று அறிஞர்கள் அவற்றை வேறு இடங்களுக்கு மாற்றுவார்கள். JB 15ஆம், 16ஆம் கண்ணிகளுக்கிடையில் அமைத்துள்ளது. AB 8, 9 கண்ணிகளுக்கு இடையில் வைத்துள்ளது.

38. அநீதி பூமிக்கும் பொறுக்காது; காண்க ஆதி. 4:10; அபாக். 2:11,

39. கூலி கொடாமல் அதன்விளைவு உண்டனேல்,
குடியா னவர்தம் உயிரைக் குடித்தனேல்,
40. கோதுமை விளைநிலம் முட்செடி வளர்க,
வாற்கோ துமைபோய் வன்களை பற்றுக.
13. அடிமை வேலை யாட்களின் உரிமையை
அவர்முறை யிடுகையில் யான்இகழ்ந் திருந்தனேல்,
14. ஏதுநான் செய்வேன் இறையவன் எழுகையில்?
ஏதுநான் சொல்வேன் அவர்எனைக் கேட்கையில்?
15. அன்னை வயிற்றில் என்னை ஆக்கிய
அவரே அல்லரோ அவனையும் ஆக்கினர்?
ஒருவரே அல்லரோ எமைஉரு வாக்கினர்?
16. ஏழையர் குறைகளுக்கு இரங்கா திருந்தனு,
கைம்பெண் கண்பஞ்சு அடைய விடுத்தனு,
17. தனித்துஎன் உணவு தான்கொண் டேனு
திக்கற் றவர்க்குஒரு பங்கும்ஈ யாமல்,
18. மதலைப் பருவம் முதலே கடவுள்
தந்தைபோல் போற்றி வளர்த்த நானே,

---

*39. குடியானவர்—மூலச் சொல், ''உடையவர், சொந்தக்காரர்'' என்று பொருள் படக்கூடும்; ஆனல் இங்கு குறிக்கப்படுவோர் உரிமையாளர் அல்லர், உழுது பயிரிடும் குடியானவர்களே என்பது அறிஞர்கள் கருத்து.* RSV, *''உடையவர்.''*

*13. அடிமை வேலையாட்களின்—மூலம், ''அடிமை வேலைக்காரன், வேலைக்காரி.''*

*14. எரெமியா 34:15–22 காண்க.*

*எழுகையில்—தீர்ப்பளிக்க, தண்டனை வழங்க எழுந்து வருகையில்.*

*15. மூலம் ஈரடிகளாக உள்ளது.*

*அன்னை—தெளிவுக்காகச் சேர்த்தது.*

*உலக மக்கள் அனைவருக்கும் கடவுள் ஒருவரே தந்தை, ஆகவே எல்லோரும் உடன்பிறந்தவர்கள் என்பது கருத்து. பழ. 17:5, 22:2; எபேசி. 6:9 காண்க.*

*16, 17. ஏலிப்பாசு 22:6–9இல் கூறிய குற்றச்சாட்டுகளை யோவு இங்கு கடவுள்மேல் ஆணையாக மறுக்கிறர்.*

*18.* JB *மொழிபெயர்ப்பு இது. 'நான் பிறந்தநாள் முதல் கடவுள் எனக்குத் தந்தையாயிருந்து என்னைத் தமது அறநெறியில் நடத்தி வந்துள்ளார்' என்பது கருத்து. ஆனல் மூலம் அவ்வளவு எளிதாகப் பொருள் விளங்குவது அன்று. அதனை* AB, "For from my youth he grew up (with) me as a father/And from the womb of my mother I guided her" *எனத் தருகிறது. அதன்* (AB) *திருத்தமும் மொழிபெயர்ப்பும்:*

*''இல்லை; எனது இளமை முதல் தந்தைபோல் அவனை வளர்த்தேன், மதலைப் பருவமுதல் அவளுக்கு வழிகாட்டினேன்.''*

தாய்வயிற் றிருந்து பிறந்த நாள்முதல்
அவர்நெறிப் படுத்தி யருளிய நானே?
19. உடையிலாது ஒருவன் மடியக் கண்டோ,
ஏழைமேல் துணியிலாது இருக்கக் கண்டோ,
20. அவனுடை அரைஎனை வாழ்த்த வில்லையா,
என்னுடை மறிகளின் மயிர்வெது வெதுப்பால்?
21. மன்றிலே எனக்குத் துணைஉண்டு என்று
கண்டுநான் அனாதைமேல் கையோங் கினனோ,
22. என்றன் தோள்கள் இறங்கித் தொங்குக,
முழங்கை மூட்டு முறிந்து கழலுக.
23. கடவுளால் வரும்இடர் கலக்கிடும் என்னை;
ஆற்றேன் அவர்தம் மாண்பின் முன்னே.
24. தங்கமே கதிஎன நான்இருந் தேனோ,
செம்பொன் எனக்குஅரண் என்றுசொன் னேனோ?
25. வளம்இது பெரிதுஎன மகிழ்ந்துபோ னேனோ
செல்வம்என் கைமிகச் சேர்த்து வைத்தநாள்?
26. ஒண்சுடர்க் கதிரோன் காட்சியும், வெண்மதி
விண்படர்ந்து ஏகும் வீறும் கண்டுநான்
27. கள்ளமாய் உள்ளம் பறிகொடுத் திட்டு
முத்தம்வாய் அரும்பக் கையெடுத் தேனோ?

---

RSVயின் மொழிபெயர்ப்பும் முதலடி அப்படியே; இரண்டாமடி:
''அவன் தன் தாய்வயிற்றில் உதித்த நாள்முதல் அவனுக்கு வழிகாட்டினேன்.''
காண்க 29:12,13; மத். 19:20.

21. உரக்கக் கூச்சலிட்டோ, கைவரிசையைக் காட்டியோ எதிர்ப்பை அடக்குவதற்கு ஆட்களைத் திரட்டிவைக்கும் வழக்கத்தைக் குறிப்பிடுகிறார் போலும், ஆசிரியர். செல்வாக்குள்ள பெரியவர் ஒருவர் ஆதரவு இல்லாமல் ஏழைக்கும் அனாதைக்கும் விதவைக்கும் ஊர் மன்றில் நீதி கிடைத்தது அரிது.

அடிகளை முன் பின்னாக மாற்றியது மொழிபெயர்ப்புக்காக.

22. முதலடி—AB, RSV, ''எனது தோள் வீழ்க தோள் பட்டையின் நீங்கி.'' ஆனால் தோள், தோள்பட்டை என்பவற்றுக்கு இணையாக வந்துள்ள சொற்கள் இரண்டுமே தோளைத்தான் குறிக்கும் (AB).

24,25. காண்க சங். 39:4, 48:10–13, 70:5, 77:7; பழ. 11:28; எரே. 17:7; சீரா. 31:5–10; மத். 6:27.

26–28. படைப்பின் அழகிலே மயங்கி நின்று படைத்தவரை நினையாது போதல் பாவம்.

27. முத்தம் . . . கையெடுத்தேனோ?—மூலம், "my hand kissed (to) my mouth" (AB). முத்துதல் பழமையான ஒரு தொழுகைப் பழக்கம் என்றும் AB குறிப்பிடுகிறது. AB further notes that if the line refers to the "wafting" of a kiss, the translation will be easily enough, "my hand kissed from my mouth."

28. அதுவும் பழிசேர் பாவமா யிருக்கும்,
அண்ணலாம் கடவுளை எண்ணுப் பொய்ம்மையாய்.
29. பகைவன் கேடுறப் பார்த்து மகிழ்ந்தனு,
அகங்களித் தேனு அவன்இடர்ப் படுகையில்?
30. பொல்லாங்கு என்வாய் சொல்லவிட் டேனு,
சாகட்டும் அவன்எனச் சாபமிட் டேனு?

31. என்வீட்டு ஆடவர் இயம்பியது உண்டா,
'இன்புற மாட்டமா இவர்ஊன் கொண்டு?' என?
32. வேற்றூர் தெருவில் உறங்கிய தில்லையே;
வழிப்போ வார்க்குஎன் வாயில் திறந்ததே.
33. ஆதாம் போன்றுநான் அறம்பிறழ்ந்து ஒளியவும்
மடியில்என் குற்றம் மறைக்கவும் உண்டா?
34. கும்பலின் ஆர்ப்பரிப்பு என்னைக் குலைக்கினும்,
இனத்தார் ஏளனம் என்னை நடுக்கினும்,
கதவைத் திறந்துநான் யாரையும் காட்டிலேன்.

---

கை எடுத்தல் மேற்சொன்ன இரு வகை விளக்கங்களுக்கும் பொருந்துவது காண்க; முத்திய பின்னும் கையை எடுக்கலாம், முத்துவதற்கும் கையை எடுக்கலாம். ஆனல் தமிழ் மரபில், முத்தம் தொழுகையைக் குறிப்பதில்லை ஆதலால், ''கையெடுத்தல்'' (=கும்பிடல்) அவசியமாகிறது.

28. அண்ணலாம் கடவுளை—God on high (AB); God above (RSV);
God who is higher than all (Knox);
உன்னதக் கடவுளை (தி. ப.).

அண்ணல்=தலைமை (திருக்கோவையார் 256).

''அங் கதிரோனவனை அண்ணலாக் கருத வேண்டா'' என்ற அப்பர் தேவாரமும் (IV:411) இங்கு நினைவுகூரத் தக்கது. வான் கணமாகிய சூரிய, சந்திர, நட்சத்திரக் கூட்டங்களைத் தொழ வேண்டாம், வேண்டாம் என்று இறைவாக்கினர்கள் இசுரவேல் மக்களுக்கு எடுத்து எடுத்துச் சொல்லிக் கண்டித்தார்கள்; மக்களில் பெரும்பாலோர் அவர்கள் சொல்லைக் கேட்கவில்லை.

29. பகைவன் கெடக் கண்டு மகிழ்வது பழைய ஏற்பாட்டு மக்களிடம்—இன்றைய உலகிலும்—இயற்கையாகவும் தாராளமாகவும் காணக் கிடப்பதாகும். ஆனல் அவ்வாறு செய்ய வேண்டாமென யாத். 23:4,5; லேவி. 19:18; பழ. 20:22, 24:17–20, 25:21,22 ஆகியவை வலியுறுத்துகின்றன. மத். 5:43–48, உரோ. 12:14 வேண்டும் மனப் பண்பு இன்னும் பெரிது.

31–34 கண்ணிகள் AB மொழிபெயர்ப்பைப் பின்பற்றியவை. இங்கு சொல்லப் படும் பாவங்கள் சோதோம்—கொமோரா மக்களின் அருவருப்பான இழிசெயல் களாகும். நீதிபதிகள் காலத்திலுங்கூட அவ்வழக்கம் காணப்படுகிறது (நீதிபதி. 19 காண்க).

34. யாரையும்—ABயின் திருத்தம்; மூலம், ''பேசாமல், வாயைத் திறக்காமல்.''
காட்டிலேன்—மூலம், ''வெளியே செல்லவில்லை''; AB, ''விட்டிலேன்.''

35. ஓ, எனக்கு ஒருவர் உளரா கேட்க?
முடித்தேன், காண்க; இனி மேலோன் பேசட்டும்;
என்வழக் காளி எழுதி நீட்டட்டும்;
36. தோள்மேல் அணிவேன், கோன்தலைப் பாகைபோல்
கட்டிக் கொள்வேன் தலையினைச் சுற்றிநான்,
37. என்அடித் தடமெலாம் எண்ணிக் காட்டுவேன்;
இளவர சேபோன்று எதிர்கொள் வேனே.''

40இ. யோவின் பேச்சு முடிந்தது.

---

35. என் வழக்காளி—மூலத்திலுள்ள சொல்லும் ''man of my controversy.''
முடித்தேன் காண்க—AB, Behold my signature (literally mark, the final letter tāw).

36. குற்றவாளி விடுதலை ஆனதற்கு அடையாளமாக அவனது அழுக்கு ஆடையைக் களைந்துவிட்டு வெள்ளை வழங்குவர், தலைப்பாகையும் வழங்குவர், விடுதலைத் தீர்ப்பை எழுதியும் வைப்பர் (சக்கரி. 3:3–5, 8,9). அறமே பாகை (29:14).

31,33,34: JB (RSV)—''ஊன்வயிறார இவர்ஊட் டாமல்
போனவன் ஒருவன் உண்டோ என்றுஎன்
வீட்டில் உள்ளோர் பேசிய தில்லையா?''
''பிறர்க்குஎன் தீமை மறைத்து நடந்தனா
உளத்தில் பழியினை ஒளித்து வைத்தனா?
ஊர்அலர் தூற்றும் என்பதற்கு அஞ்சி
மற்ற வீட் டார்கள் நகைப்புக்கு நடுங்கி
வீட்டுக்கு வெளியே தலைகாட் டாமல்
ஊமையாய் இருந்திட ஆனதும் உண்டா?''

## III. எலியூவின் உரை

# 32

# பேசினாலன்றி என் நெஞ்சு ஆறாது

**32:** [யோவு தமது மாசின்மையை ஆணையிட்டு அறுதி செய்துவிட்டதால், நண்பர்கள் மூவரும் வாய் பேசாமல் இருக்கின்றார்கள். இந்தக் கட்டத்தில் எலியூ என்னும் இளைஞர் ஒருவர் தாம் பேசவேண்டும் என்று முனைகின்றார் (1–5). பெரியவர்களுக்கு அறிவுரை சொல்லத் துணிந்த தம்மைப் பொறுத்தருள வேண்டும் என்ற அடக்கத்துடன் பேசத் தொடங்குகின்றார்; ஞானம் வயதால் வருவதன்று, அது கடவுள் அருளும் வரம் என்று நினைவுறுத்துகின்றார் (6–9). யோவின் வாதத்துக்கு அவர்கள் மறுமொழி சொல்லத் தெரியாமல் வாயடைத்துப் போனதால், தாம் விடை சொல்ல முன் வருவதாகக் கூறி, தாம் பேசா விட்டால் தமது நெஞ்சு வெடித்து விடும் என்கின்றார். நடுவு நிலைமை கோணாமல், பசப்புதல் இல்லாமல் பேசப் போவதாகக் கூறுகின்றார் (10–22).]

*1. யோவின் கண்ணுக்கு அவர் மாசற்றவராகவே இருந்ததால், அந்த மூன்று பேர்களும் அவருடன் சொல்லாடுவதை விட்டுவிட்டார்கள். 2. ஆனால் பூசின் இனத்தவர் பாரக்கேல் மகனார் ராமினது கிளையினர் எலியூ என்பவருக்குக் கோபம் உண்டாயிற்று. கடவுள் செய்வது சரி என்று சொல்லாமல் யோவு தமது நிலை*

---

*1. மூன்று பேர்களும்—நண்பர்கள் என்பதற்குப் பதில் இவ்வாறு குறிப்பிடுவது காண்க. இந்தப் பகுதி வேறொருவரால் இயற்றப்பட்டிருக்கவேண்டும் என்பதற்கு உரிய பலவேறு அறிகுறிகளில் இம் மாற்றமும் ஒன்று என்பர். கிரேக்க மொழி பெயர்ப்பு 'நண்பர்கள்' என்றே இங்கும் குறித்துள்ளது (AB).*

*யோவின் கண்ணுக்கு—'அவர்கள் கண்ணுக்கு' என்ற பாடம் ஒரு எபிரேயச் சுவடியில் உள்ளது. அதன்படி, யோவின் சொல்லை நண்பர்கள் ஏற்றுக்கொண்டார்கள் என்று பொருள்படும்.*

*2. பூசின் இனத்தவர் பாரக்கேல் மகனார் ராமினது கிளையினர் எலியூ—முன்னுரையில் இவ்வாறு குலம் கோத்திரம் குறிக்கப்படவில்லை என்பதைக் காண்க. யோவின் குலம் ஊசு என்பவரிடமிருந்து தோன்றியதாகக் கருதப்படுவது போல அவரது (ஊசு) உடன் பிறந்தாரான பூசு என்பவரிடமிருந்து எலியூவின் குலம் தோன்றியதாகக் கருதப்படுகிறது. பாரசீக வளைகுடாவில் இன்று பாரீன் என்னும் பெயரில் உள்ள தீவில் பாசு என்ற ஊர் இருந்ததாகக் கல்வெட்டுகள் உள்ளன. பாரக்கேல் என்ற சொல்லுக்குக் ''கடவுள் வாழ்த்தியருளினார்'' என்றும், எலியூ என்பதற்கு ''அவர் என் இறைவர்'' என்றும் பொருள்களாம் (AB).*

நியாயமே என்று நின்றதால், அவருக்குச் சினம் மூண்டது. 3. அந்த நண்பர்கள் மூவரும் மறுமொழி சொல்லத் தெரியாமல் நின்று விட்டதால் கடவுளைக் குற்றவாளி ஆக்கிவிட்டார்கள் என்று அவர்கள்மீதும் அவர் கோபம்கொண்டார். 4. அவர்கள் தமக்கு மிகவும் மூத்தவர்களாக இருந்ததால் அவர்கள் பேசும்பொழுது குறுக்கே பேசாமல் காத்துக்கொண்டிருந்தார். 5. ஆனால் இப்பொழுது மறுமொழி சொல்ல அவர்களால் இயலவில்லை என்று கண்டதும் எலியூவுக்குச் சினம் பொங்கியது. 6. இவ்வாறாக, பூசினுடைய இனத்தவர் பாரக்கேல் மகனார் எலியூ பேசலானார். அவர் சொன்னார்:

''நானோ இளைஞன்; நீங்கள்
வயது முதிர்ந்த பெரியீர்;
ஆகையால் கூசினேன் அஞ்சினேன், எனக்குத்
தெரிந்ததை உங்கள்முன் செப்புவ தற்கு.
7. 'முதுமை பேச வேண்டும்; முதிர்ந்த
அகவை உணர்த்தும் ஞானம்'என்று இருந்தேன்.
8. ஆயின் அதுநம் அகத்துள ஆவியே;
ஒப்பிலான் ஆவியே உய்த்துணர்வு அளிப்பது.
9. பெரியோர்கள் எல்லாரும் ஞானியரும் ஆகார்;
முதியோர்கள் சரியாக உணர்வோரும் ஆகார்.
10. ஆக 'எனக்குச் செவிசாய்த் தருள்க;
நானும் என்உரை நவிலுவன்' என்பேன்.

---

3. கடவுளைக் குற்றவாளி ஆக்கிவிட்டார்கள்—AB மொழிபெயர்ப்பு; RSV, ''யோவின் நிலை தவறு என்று சொன்னபோதிலும் அதை எண்பிக்கக்கூடிய மறுமொழி எதுவும் தெரியாதவர்களாகி விட்டார்கள்.'' மூல பாடம் 'கடவுள்' என்பதே ('யோவு' அல்ல) என்றும், படி எடுத்து எழுதியவர்கள் செய்த பதினெட்டுத் திருத்தங்களில் இங்கு 'கடவுளை' 'யோவு' என்று மாற்றியது ஒன்றாகும் என்றும் யூத மரபு கூறும் (AB).

8. அது—ஞானம்.

ஒப்பிலான் ஆவி—இறைவனது ஆவியே உயிர் ஊட்டுவது (ஆதி. 2:7), ஞானம் அருள்வது (ஆதி. 41:38). வயது ஆக ஆக ஞானமும் தானே வரும் என்பது அன்று (காண்க சீராக். 25:2–6). பக்தி இன்றி ஞானம் வராது (பழ. 1:7, 2:6, 10:31; ஞாஞ. 1:5–7, 7:22–23, 9:17; 1 கொரிந். 2:6).

9. JB: ''பழுத்த வயதும் ஞானம் பயவாது;
நீண்ட வாழ்வும் நியாயம் உணர்த்தாது.''

10. செவி சாய்த்தருள்க—பெரும்பாலான எபிரேயச் சுவடிகளில் இவ்வினைச் சொல் ஒருமையில் உள்ளது (AB).

என் உரை—AB; RSV, ''எனது கருத்து (opinion)''; JB, தி. ப., ''யான் அறிந்ததை'', ''என் அறிவை.''

11. நீங்கள் பேசிட நான்காத் திருந்தேன்;
உங்கள் நியாயம் முழுவதும் கேட்டேன்
சொல்ஆய்ந்து நீங்கள் தொடுத்தஅப் போது.
12. நினைவு சிதருது கேட்டேன்; நீங்கள்
யாரும் யோவுசொல் மறுத்திட வில்லை;
அவர்சொல் அடிபட மறுசொல் சொலவிலை.
13. 'கடவுளே கண்டிக் கட்டும், மனிதனல்
இயலாது; ஞானம் இது'என் பீர்களோ?
14. என்னோடு சொல்லாடி யிருந்தால் அவரிடம்
உங்களைப் போல உரைசெய் திரேன்யான்.
15. மலைத்துப் போயினர் மாற்றம் உரையார்,
இல்லையா யிற்றே சொல்அவர் களுக்கு.
16. பேச்சிலர் நிறுத்தினர் பேசமாட் டார்கள்;
இனியும் காத்துநான் இருக்க வேண்டுமோ?
17. எனது மாற்றம் இயம்புவன் இனிமேல்;
நான்என் வாய்மொழி நவில்வன்இப் போது.
18. நிறைந்தன சொற்கள் என்னுள் நிரம்பி
நெஞ்சு முட்டும் நெட்டுயிர்ப் பாலே.
19. வாயின்றி அடைத்த மதுப்போலும் என்நெஞ்சு
புதுமதுச் சித்தைபோல் வெடிக்கநிற் பதுவே.
20. பேசினல் அன்றிஎன் நெஞ்சுஆ றுது;
செப்ப வேண்டும்வாய் திறந்துநான் மறுமொழி.

---

11. முழுவதும்—சீரியா மொழிபெயர்ப்பை ஒட்டியது; மூலம், "உங்கள் நியாயங்கள்." கும்ரான் சுவடி, "நீங்கள் (பேசி) முடிக்கும் (வரை)."

சொல் ஆய்ந்து தொடுத்த அப்போது—AB, "while you tested words"; RSV, "while you searched out what to say."

13. RSV. (தி. ப.) " 'கண்டுகொண்டோம் ஞானம்; அவரை மேற்கொளக்கூடியவர் கடவுளே, மனிதன் அல்லன்' என்று நீங்கள் கூறவேண்டாம்!"

14. AB குறிப்பில் கண்டுள்ளபடி செய்த மொழிபெயர்ப்பு.

AB, RSV: "என்னோடு சொல்லாட வில்லை அவர்க்குநான்
உங்கள் சொல்லால் உரைசெய மாட்டேன்."

17. வாய்மொழி—AB, 'speech'; RSV, 'opinion.' இங்கும் 37:16 இரண்டாமடியிலும் AB விளக்கத்தை வைத்து மொழிபெயர்த்துள்ளேன்.

18. நெஞ்சு—AB, 'belly'. நெட்டுயிர்ப்பு—AB, காற்று. RSV, 'the spirit within me constrains me.'

19. சித்தையில் காற்றுப் புக முடியாதபடி அடைத்த திராட்சை மது அதை உடைத்து விடும், சித்தை புதிதாக இருந்தாலும். மத். 9:17; எரே. 20:9 காண்க.

21\. யார்புற மாகவும் சாயநான் வேண்டாம்;
பேர்பல விளித்துப் பசப்பவும் வேண்டாம்.
22\. பசப்பிப் புகழவும் அறியேன்; இல்லையேல்
படைத்தவர் விரைந்தெனை எடுத்திடு வாரே.

---

21\. பேர் பல விளித்து—மூலத்திலுள்ள வினைச் சொல்லுக்குச் "சிறப்புப் பெயர்கள் கொடுத்து" என்பது பொருளாம்; இசை. 44:5, 45:4 காண்க (AB). 'நெடுமொழி சொல்லி' என்பது பொருத்தமான தமிழாக்கமாகும்.

22\. எடுத்திடுவார்—"dispatch me" (AB), "put an end to me" (RSV) ஆகியவற்றைக் காட்டிலும் இந்தத் தமிழ் வழக்கு "lift me up" என்ற எபிரேய மூலத்துக்கு இசைவாக உள்ளது. பொருள் ஒன்றே.

# 33

# எவ்வழியேனும் கடவுள் உணர்த்தலாம்

**33:** [எலியூ யோவைப் பார்த்து, தாமும் அவரைப் போல் ஒரு மனிதரே, கடவுள் அல்லர் என்று குறிப்பிடுகின்றார் (1–7). அடுத்து, யோவின் வாதங்களை எலியூ சுருக்கமாகத் தொகுத்துரைத்துக் கொள்கின்றார் (8–11). கடவுள் பேசாமல் இருப்பதில்லை; பல வழிகளில் உணர்த்துகின்றார்; சிறப்பாக அவர் கனவில் உணர்த்துவது உண்டு; ஒருவனை நோயினால் வருத்தியும் அவர் உணர்த்தித் திருத்தலாம் (12–22). நோயுற்றவன் தன் குற்றம் உணர்ந்து திருந்தினால் அவனுக்காக வானவன் ஒருவன் கடவுளிடம் பரிந்து பேசி அவனுக்கு மீண்டும் நல்வாழ்வு கிட்டுமாறு செய்யக்கூடும்; யோவு போன்றார்க்குக் கடவுள் இவ்வாறு எண்ணற்ற தடவை அருள் புரிகின்றார் (23–30). இதற்கெல்லாம் யோவு பதில் சொல்ல முடியாவிட்டால் பேசாமல் இருந்து இன்னும் பல அறிவுரைகளைக் கேட்கட்டும் என்று எலியூ வேண்டிக் கொள்கின்றார் (31–33).]

*33:1.* "இனி—யோவு, நீங்கள் கேட்க வேண்டும்
என்—ஒவ்வொரு சொல்லையும் உன்னிப் பாக.
*2.* வாய்திறந் தனன்யான் காண்க; வார்த்தைகள்
ஆக்குதற்கு எனதுநா அண்ணம் தொட்டது.
*3.* கள்ளம் இல்லா உள்ளமே என்சொல்;
அறிந்ததை அறிந்தவாறு அறையும் என்வாய்.

---

*1.* யோவு, நீங்கள்—யோவின் நண்பர்கள் மூவரும் அவரைப் பெயர் சொல்லி விளித்தது இல்லை. எலியூ மட்டும் இங்கு அவ்வாறு அழைப்பது காண்க.

கேட்க வேண்டும்—'எனது பேச்சை' என்பது செயப்படுபொருள்; சுருக்கம் கருதி விடப்பட்டது, தமிழாக்கத்தில்.

*3.* கள்ளம் இல்லா உள்ளமே என் சொல்—மூல பாடத்தில் உள்ளபடி; AB, "என்னுடைய சொற்கள் நேரிய உள்ளத்திலிருந்து வருபவை"; RSV, "என்னுடைய சொற்கள் எனது உள்ளத்தின் நேர்மையை அறிவிக்கும்."

JB *(2–3)*: "நான்இனி வாய்திறந்து அண்ணம் தொட்டு
நாவினில் மொழிகள் உருவாக் குகையில்,
கள்ளம் இல்லா உள்ளம் பேசும்
உள்ளதை உள்ளவாறு உரைக்கும் இதழ்கள்."

4. என்னைப் படைத்தது இறைவனின் ஆவி;
எனக்குஉயிர் அளித்தது இணையிலான் மூச்சு.
5. இயலுமேல் என்மொழிக்கு எதிர்மொழி கூறுக;
ஏற்பாடு ஆகுக எதிர்த்துஎனை நிற்க.
6. கடவுளே!—உங்களைப் போன்ற ஒருவனே நானும்
மண்ணினிற் கிள்ளி எடுத்தவன் தானே.
7. எனைக்கண்டு அஞ்சிக் கலங்குதல் வேண்டாம்;
நெருக்கி அமுக்கி உறுக்கிடேன் உங்களை.

8. என்காது கேட்க நீங்கள்சொன் னீர்கள்,
சொன்னசொல் ஓசை என்செவி கேட்டன:
9. கறையிலேன், தீதிலேன், களங்கம் இல்லேன்,
எனைத்துக் குற்றமும் இல்லேன், ஆயினும்
10. என்மேல் சாக்குப் போக்குகள் பார்க்கிறார்,
என்னைப் பகைவனாய் எண்ணி யிருக்கிறார்,
11. என்றன் கால்களில் விலங்குகள் இடுகிறார்,
கண்கா ணிக்கிறார் காலடி யெல்லாம்'—என.

---

4. இணையிலான்—ஷடாய்.
JB (5, 6, 4):—"இயலுமேல் காட்டுக என்சொல் தவறென;
என்னை எதிர்க்கும் நியாயம் காண்க.
நானும் உங்களைப் போன்ற ஒருவனே,
தெய்வம் அல்லேன், காண்க; நானும்
உங்களைப் போலவே மண்ணால் ஆனவன்;
என்னைப் படைத்ததும் இறைவன் ஆவியே;
எனக்குயிர் அளிப்பதும் இணையிலான் மூச்சே."

6. கடவுளே!—'அட கடவுளே' என்ற பேச்சு வழக்கைப் போன்றது. முழு விளக்கம் AB குறிப்பில் காண்க. JB, "தெய்வம் அல்லேன்". RSV, "கடவுளுக்கு நானும் உங்களைப் போலவே".

கிள்ளி—மூலத்திலுள்ள வினைச்சொல்; படைப்புத் தொழிலைக் குறிக்கப் பழைய கில்காமிஷ் புராணத்திலும் இச்சொல் பயன்பட்டுள்ளதாம் (AB).

7. யோவு கடவுளால் கலங்குவதுபோல் தமக்குமுன் நடுங்கவேண்டாம் என்கிறார் எலியூ; தாமும் அவரைப் போல் மனிதரே என்கிறார். காண்க, 9:34; 13:21.

9. ஆயினும்—அடுத்த கண்ணியின் முதலில் வரவேண்டியதைச் செய்யுள் கருதி இங்கு மாற்றியுள்ளேன்.

யோவு தம்மிடம் குற்றங் குறைகளே இல்லை என்று சொன்னவர் அல்லர்; தமது அறநெறி ஒழுக்கத்துக்கு இந்தத் துன்பத் துயரங்கள் முறை அல்லவே என்பதுதான் அவர் கேள்வி. ஆகவே, எலியூ இங்கு யோவின் முறையீட்டைத் திரித்துக் கூறுகிறார் (காண்க 9:21; 10:7; 16:17; 23:10; 27:5–6; 31ஆம் அதி.; 7:21; 13:26).

10. காண்க 13:24; 19:6, 11.

11. காண்க 13;27.

12. சரியன்று இது,நான் சாற்றுவேன் உங்கட்கு;
கடவுள் மனிதன் கணக்கினுள் அடைபடார்.
13. அவர்க்குளதி ராக வழக்கிட வேண்டுமா
சொல்லுவது எதற்கும் சொல்லார் விடைஎன?
14. ஒருவழி மறுவழி எவ்வழி யேனும்
கடவுள் பேசலாம், காண்பார் இலேயே.
15. கனவினில், கங்குல் வேளைக் காட்சியில்,
மாந்தர் அயர்ந்து தூங்கும் வேளையில்,
படுக்கையில் அவர்கள் உறங்கும் பொழுதினில்,
16. அப்போது அவர்கள் காதினைத் திறப்பார்,
எச்சரித் திடுவார், நடுக்குற வைப்பார்,
17. மனிதன் தனது வினையை நீக்கவும்,
அவனுக்கு ஆணவம் தன்னை மறைக்கவும்,
18. அவனது ஆன்மா குழிவிழா திருக்கவும்,
கால்வாய் அவன்உயிர் கடவாது காக்கவும்.

---

12. எலியூ இங்கு குறிக்கும் உண்மையை யோவு ஏற்கெனவே அழகாக எடுத்துரைத் திருக்கின்றார் (காண்க 9:1–13; 12:13–25; 9:14–20, 32; 13:13–16).

கடவுள் . . . அடைபடார்—JB; AB, ''மனிதரைக் காட்டிலும் கடவுள் பெரியவர்.''

14, JB—''முதலில் ஒருவழி மொழிவார் கடவுள்
பின்னர் ஒருவழி பேசுவார், யாரும்
உன்னிப் பாக உணருவ தில்லையே.''

15. கடவுள் மாந்தர்க்குக் கனவில் உணர்த்துவது பற்றிக் காணத் தக்கவை ஆதி. 41:11,12; எண். 12:6; நீதி. 7:13,15; தானி. 2; 4; 7; ஆதி. 20:3; 31:24; 41:1; மத். 2:13; 27:19.

கனவுகளையும் கனவு காண்போர்களையும் கண்ணை மூடிக்கொண்டு நம்பிவிடக் கூடாது என்பதனை உபா. 13:1–5, எரே. 23:28 பகுதிகளில் காண்க.

16. காதினைத் திறப்பார்—முக்கியமாகக் கவனிக்க வேண்டிய செய்தியைத் தெரி விக்கும்போது 'காதினைத் திறத்தல்' என்ற சொல் பயன்பட்டுள்ளது (காண்க 1 சாமு. 9:15; 20:2; 22:8,17; ரூத் 4:4 முதலியன).

எச்சரிக்கையால் நடுக்குற வைப்பார்—RSV, AB; மூலம், ''அவர்கள் தண்டனை உறுதி செய்வார்.''

17. மூலத்தில் உள்ளபடி; RSV காண்க.

AB, (JB)—''மனிதன் தீய ஒழுக்கம் நீங்கவும்,
ஆணவம் தனில்அவன் வீழாது காக்கவும்.''

18. கால்வாய்—பாதலத்து ஆறு. AB-யைப் பின்பற்றிய மொழிபெயர்ப்பு. RSV, ''அவன்உயிர் வாளால் அழியாது காக்கிறார்.''

19. அதுவே அன்றியும்
படுத்த படுக்கையாய் வருந்தியும் திருந்தலாம்:
எலும்பெலாம் நடுக்கி இடையருது உளையும்;
20. உணவைக் கண்டால் உயிரெலாம் வெறுக்கும்;
அருஞ்சுவைப் பண்டமும் பசிஅரு வருக்கும்;
21. காணும் தசைகள் கரைந்து மறையும்;
காணு எலும்புகள் கண்முன் தெரியும்;
22. அவனது ஆன்மா குழியினை அணுகும்;
அவனுயிர் வௌவுவார் தம்மை நெருங்கும்;
23. அப்போது ஆங்குஅவன் அருகில்ஓர் வானவன்,
ஆயிரம் பேர்களில் ஒருவன், பாங்கன்,
அவனது செம்மையை ஆய்ந்து பேசுவான்
24. இரங்கி, 'இவனைக் குழியினுள் இறங்க
விடுதல் வேண்டாம்; மீட்புத் தொகைநான்
கண்டுகொண் டேன்' எனக் கழறுவ னுயின்,
25. பால னென மேனி திரண்டிட
இளமைப் பருவம் எய்துவான் மீண்டு;

---

19. படுத்த படுக்கையாய் வருந்தி—மூலம், "with pain upon his bed."
எலும்பெலாம் . . . உளையும்—ஒரு எபிரேயச் சுவடி, "while the *multitude* of his bones are firm;" AB, "with *ceaseless agony* in his bones;" RSV, "with continual *strife* in his bones." மூன்றிலும் குறித்த கருத்துக்கள் இங்கு தமிழாக்கத்தில் அமையக் காண்க.

20. பசி—ஆவி/உயிர் என்றும் மொழிபெயர்க்கலாம்.

21. காணும்—சேர்த்த சொல், பொருத்தம் கருதி; கருத்து மூலத்தில் உள்ளதே. காண்க RSV, AB.

22. வௌவுவார்—மூலம், killers (எமதூதர்?); RSV, "those who bring death;" AB, "அவன் உயிர் சாக்காட்டு அலைகளை/நீரினை நெருங்கும்." (சாக்காட்டு அலைகள் பாதலத்தைக் குறிக்கும்).

23. ஒவ்வொருவனுக்கும் ஒவ்வொரு வானதூதன் உளன். அவனவன் செம்மையை, குணங்களை, எடுத்துரைத்துப் பரிந்து பேசுதல் காவல் தூதனின் பண்பு; ஒன்றைப் பத்தாக்கிப் பொய்க் குற்றம் சாட்டுவது அலகையின் வேலை.
பாங்கன்—AB, spokesman; RSV, mediator.
'பாங்கன்' முதலாகவும் 'ஆயிரம் பேர்களில் ஒருவன்' பின்னதாகவும் மூலத்தில் (AB, RSV, JB) அமைந்துள்ளதை ஓசை கருதி மாற்றியுள்ளேன்.
மாற்று: "பக்கச்சொல் லாளி, ஆயிரத்தில் ஒருவன்."
மூன்றுமடி RSV, JB-யில் வேறு: "கடமை மனிதனுக்கு இதுவெனக் காட்டு வான்." இங்கு நான் பின்பற்றியது AB.

24. மீட்புத் தொகை—எவனும் தனக்குத் தானே மீட்பாக இருக்க முடியாது: காண்க சங். 48:7–9; மத். 16:26; 20:28; 1 தீமோ. 2:6; திருவெளி. 5:9.

26. வேண்டுவான் கடவுளை; ஏற்பார் அவரும்;
காண்குவான் அவர்முகம் களிப்புடன் வருவான்;
தான்மீட்பு அடைந்ததை நாலுபேர்க்கு உரைப்பான்;
27. மாந்தர்முன் னிலையில் மகிழ்ந்து பாடுவான்:
'நல்லவை கெடுத்துத் தகாதன புரிந்தனேன் பாவி;
வல்லவாறு எனக்குத் தண்டனை வழங்கினான் அல்லன்;
28. செல்லும்என் ஆன்மம் சேற்றினில் வீழ்ந்திடா வண்ணம்
கல்லனேன் தன்னைக் காத்தனன் ஒளிஉயிர் காண.'

29. கடவுள்இவ் வளவும் செய்தருள் கின்றார்,
ஒருவ னோடுஅவர் இருமுறை மும்முறை,
30. வீழ்குழி தனிலிருந்து அவன்உயிர் மீட்கவும்,
வாழ்வொளி தனில்அவன் வயங்கிப் பொலியவும்.
31. நான்—சொல்வதைக் கேளுங்கள், யோவு, நீங்கள்;
பேசா திருங்கள், பேசுவன் இன்னும்.
32. சொல்வதற்கு உண்டெனில் சொல்லுக என்னிடம்;
பேசுக; உங்கள் நேர்மைஎன் மகிழ்ச்சியாம்.
33. இன்றெனில் எனக்குச் செவிசாய்த் திருங்கள்;
பேசா திருங்கள்; உணர்த்துவன் ஞானம்.''

---

27. மகிழ்ந்து—சேர்த்த சொல் எனினும் கருத்தில் உள்ளது, தொக்கி நிற்பது. AB குறிப்பு காண்க.

27,28. 'நல்லவை . . . காண'—கலித்துறைப் பாட்டாக இயற்றியுள்ளேன்; மூலத்தில் இல்லாத கருத்து எதுவும் சேர்த்திலேன். கல்லனேன் தன்னை = தீயவனாகிய என்னை; இக் கருத்து 27 இரண்டாமடியில் வருவதேயாகும். சேற்றினில்—குழியினில் என்பது மூலம்; பொருள் பாதலம் என்பதே. வல்லவாறு—AB, "(did not) fully (requite me);" RSV, "it was not requited to me."

அகவலாக அமைப்பதானால்,

"தீவினை புரிந்து கெடுத்துத் திரிந்தேன்
தக்கவாறு அவன்எனைத் தண்டித் தான்அலன்
குழிபுகா வண்ணம்என் ஆன்மம் காத்தனன்
ஒளிகாண் கின்றதுஎன் உயிரது தானே."

33. இன்றெனில்—சொல்வதற்கு உங்களிடம் ஒன்றும் இல்லை எனில்.

# 34
# மனிதர் செயல்களைக் கடவுள் அறிவார்

34: [யோவு கடவுள் செயலைப் பகடி பண்ணுகிறார் (1-9); கடவுள் அநீதி செய்யவே மாட்டார் (10–12); உலகம் யாவும் அவர் படைத்தளித்து ஆண்டுவருவதே (13–17); மக்களின் நடத்தையை அவர் உள்ளவாறு அறிந்து அதற்குத் தக்கவாறு அவர்களுக்கு அளக்கிறார் (18–32); இவற்றையெல்லாம் எண்ணாமல் யோவு பேசியதில் பொருள் இல்லை; கடவுள் நீதியுள்ளவர் என்ற அடிப்படை உண்மையை யோவு எதிர்ப்பது அடங்காமை என்னும் பெரும் பழிக்கும் ஆளாவதாகும் (33–37) என்கிறார் எலியூ.]

34:1. தொடர்ந்து எலியூ கூறினார்:

2. ''ஞானி களேநீர், என்சொற் கேளீர்;
அறிஞர் களேநீர், செவிசாய்த் தருளீர்.
3. நாவுக்கு உறைக்கும் உணவு;
காதுக்கு உறைக்கும் கட்டுரை.
4. நேர்மை எதுவென நாமே தேர்வோம்;
நன்மை எதுவென நமக்குள் முடிப்போம்.
5. யோவுசொன் னார்கள்: 'யோக்கியன், கறையிலேன்;
கடவுள்என் உரிமையைக் கவர்ந்து கொண்டார்.
6. என்வழக்கு இதனில்நான் பொய்யாய்ப் போனேன்,
எனைப்புண் ணாக்கினார், எனினும் தீதிலேன்.'

---

3. காண்க 12:11. உணவின் தன்மையை நாக்கு உணர்வதுபோல், பேச்சின் தன்மையைச் செவிப்புலன் உணரும், ஆகவே கேட்டுத் தெளிக என்பது கருத்துப் போலும்.

மூலத்தில் உள்ள அடிகளை முன்பின்னாக மாற்றியுள்ளேன் தெளிவுக்காக.

4. துன்பம் ஏன் என்பதற்குப் பண்டைய ஞானிகள் வழிவரும் கருத்து சரியா, அல்லது யோவு கூறுவது சரியா என்று நாம் ஆராய்ந்து தெளிவோம் என்கிறார் எலியூ.

6. பொய்யாய்ப் போனேன்—RSV, ''நான் சொல்வது நியாயமாயிருந்தும் என்னைப் பொய்யனாக எண்ணுகிறார்கள்.'' ஆனால் பொய்யன் என்று மொழிபெயர்ப்பதற்கு மூலத்தில் இடமே இல்லை என்கிறது AB குறிப்பு.

'என் வழக்கைப் பொறுத்தமட்டில் அவர் பொய் சொல்கிறார்' என்பது AB மொழிபெயர்ப்பு. கிரேக்கமும் இதுவே.

எனைப் புண்ணாக்கினார்—AB, ''புண்பட்டேன் அவர் கணைகளால்.'' எபிரேயத்தில் 'என் கணைகளால்' என்றுள்ளது. RSV, ''எனது புண் ஆறாது.''

''என்னுடைய வழக்கில் நான் சொல்வதை நம்பாமல் அது பொய் என்கிறார்கள்; அவர் என்னைப் புண்ணாக்கிவிட்டார். இருந்தாலும் நான் தீமை புரிந்தவன் அல்லேன்'' என்பது யோவின் கூற்றாக எலியூ எடுத்துரைத்து, இவ்வாறு யோவு பேசுவது கடவுளைப் பகடி பண்ணுவதாகும் என்று கூறுகிறார் (அடுத்த கண்ணி காண்க).

7. யோவைப் போல ஒருவர் உண்டோ?
பகடிப் பேச்சுஇவர் பருகும் தண்ணீர்.
8. தீயோ ரோடு தோழமை கொள்வார்;
கொடியோ ரோடு குலாவி நடப்பார்;
9. 'கடவுளுக்கு இனியனுய் நடக்கும் ஒருவன்
கண்ட பயன்ஒன்று இல்லை' என்பார்.

10. அறிவுடை யீர்நீர், என்சொற் கேளீர்;
கடவுளா தீயவர்? கருதவே வேண்டாம்;
ஐயனு பிழைசெயல்? அந்நினைப்பு அகலுக.
11. அவனவன் செய்கைக்கு ஏற்ப அளக்கிருர்;
அவனவன் வழிப்படி அறிய வைக்கிருர்.
12. தீமையைக் கடவுள் செய்யவே மாட்டார்;
நீதியைப் பரமன் புரட்டவும் மாட்டான்.
13. பாரகம் அவர்க்கு யார்ஒப் படைத்தது?
ஆர்அவர் உலகெலாம் அவர்பொறுப்பு ஆக்கினுர்?
14. தாமே அளித்த ஆவியை, மூச்சினைத்
திரும்ப வாங்கிடத் திருவுளம் கொள்வரேல்,
15. ஊனுடம்பு எல்லாம் ஒருங்கே அழியும்,
மானுடன் மீண்டும் மண்ணு வானே.

---

7. இரண்டாமடி, 'நீரைப் போன்று இவர் பகடியைப் பருகுவார்' என்பது பொருள் தெளிவுபடாது என்பதனுல் 'பகடிப் பேச்சு இவர் பருகும் தண்ணீர்' என ஆக்கினேன்.

8. காண்க 11:11; 22:15; 31:5; சங். 1:1.

9. காண்க 9:22; 10:3; 21:7; மலாக். 3:13–15.
என்பார்—AB; RSV, 'என்ருர்'; கிரேக்கம் 'என்று நீங்கள் சொல்லக்கூடாது.'

10. காண்க 8:3; ஆதி. 18:25.

11. அவனவன் வழிப்படி அறிய வைக்கிருர்—மூலம், "And according to the path of a man he makes him find it." AB, "Brings home a man's conduct to him." RSV, "and according to his ways he will make it befall him."

13. கடவுள் உலகம் முழுவதையும் ஆண்டு நடத்தும் தனிமுதல்; இது பற்றி அவர் யாருக்கும் கணக்குக் கொடுக்க வேண்டியவர் அல்லர்—என்பது எலிகூவின் வாதம். யோவும் இதனை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்துள்ளார் (காண்க 9:12). ஆனுல் கடவுள் பொதுமையின்றித் தனிமுதல் ஆனதால், உலகில் காணும் தீமைக்கும் பொறுப்பாவார் என்பது யோவின் வாதம் (9:24).

14,15. காண்க ஆதி. 2:7; 3:19; இசை. 42:5; சங். 103:29; சங்கத். 12:7.
ஊனுடம்பு—AB, RSV, "all flesh."

16. அறிவுடை யீரெனில் இதனைக் கேட்பீர்,
செவிமடுப் பீர்என் சொல்லின் ஓசை.
17. நீதியைப் பகைப்போன் ஆளுதல் ஒல்லுமோ?
நீதியான் வல்லான் அவனைப் பழிப்பிரோ?
18. வேந்தனை நோக்கி 'வீணன்' என்பமா?
மேன்மக் களைப்'பழி காரா' என்பமா?
19. அவர்—அரச குமாரர்என்று அஞ்ச மாட்டார்,
ஏழையை விடுத்துச் செல்வரை விரும்பார்;
அனைவரும் ஒன்றுபோல் அவர்கைப் படைப்பே.
20. மடிவர் அன்னார் நொடியில், நள்ளிரா
குடிப்பிறந் தார்கள் நடுக்குற்று மறைவர்;
வல்லார் நீங்குவர் வாங்குகை இன்றியே.
21. மனிதனின் நடத்தைமேல் மன்னியது அவர்கண்;
அவன்அடித் தடமெலாம் அவர்தம் பார்வை.
22. இருட்டும் இல்லை இருண்டதோர் நிழலும் இல்லை
மருள்புரி வோர்களை மறைத்திடத் தக்கது.

---

17. Dahood: ''நீதியைப் பகைப்போன் வழக்கு ஆய்வானா? நீதியான் தொல்லோன் அவனைக் குற்றவாளி என்பீரோ?''

18. வீணன்—AB, கயவன்; மூலம், ''worthlessness,'' a term applied, according to AB, to various kinds of base conduct, such as greed (Deut. 15:9), sexual perversion (Judges 19:22), perjury (I Kings 21:10). கீழ்மை/ கயமை என்பது பொருத்தமாகும்; காண்க ''கொல்லப் பயன்படும் கீழ்.'' (குறள் 1078).

RSV, JB—''காவலன் தன்னையும் 'கயவா' என்பார்,
குடிப்பிறந் தாரையும் 'கொடியோய்' என்பார்.''

எலியூ இங்கு எடுத்துரைக்கும் வாதமும் பழங் கஞ்சியே; காண்க 12:21.

19. கடவுள் நடுவுநிலை பிறழ்ந்து யார் பக்கமும் சாயமாட்டார்; காண்க உபா. 10:17; பழ. 22:2; 2 நாள். 19:7; ஞானா. 6:8; அப்.நட. 10:34,35; உரோ. 2:11; எபேசி. 6:9; கொலோ. 3:25; 1 இராயப். 1:17.

20. நள்ளிரா—AB-யில் இது முதலடியிலும், RSV-யில் இரண்டாவது வாக்கியத்தின் தொடக்கத்திலும் உள்ளது; எனவே, சொல்லின் இறுதியில் புள்ளி எதுவும் வைக்காமல் அதனை இரண்டு வாக்கியங்களோடும் இணைத்துப் பொருள் காணுமாறு செய்துள்ளேன்.

குடிப்பிறந்தார்கள்—மூலம், ''மக்கள்;'' இதற்கு 12:2இல் கொண்ட அதே பொருளை AB இங்கும் கொண்டு இவ்வாறு gentry என மொழி பெயர்த்துள்ளது.

வாங்கு கை இன்றியே—AB, without hand: RSV, by no human hand. காண்க புலம். 4:6; தானி. 2:34, 8:25; இசை. 40:23,24.

21. காண்க 24:23; 14:16.

22. காண்க சங். 138:11,12; எரே. 23:24; ஆமோ. 9:2,3; மத். 6:4.

இருண்டதோர்—தெளிவுக்காகச் சேர்த்தது; வெறுமனே ''நிழல்'' என்றால் குளிர்ச்சியையே சிறப்பாக உணர்த்தும்.

23. நரன்எவ னுக்கும் நாள்குறித் திடவிலை
கடவுள்முன் வந்து கணக்கு வழக்கிட.
24. வல்லார் தமைஅவர் நொறுக்குவார், கேளார்;
அன்னார் இடத்தில் அமர்த்துவார் பிறரை.
25. அவர்களின் செயல்களை அறிவார் ஆதலால்
வீழ்த்துவார், இரவே மிதிபடு வார்கள்;
26. தண்டக் குற்ற வாளிகள் நடுவே
அடித்து வீழ்த்துவார் அம்பலந் தன்னில்.
27. ஏனெனில் அவர்கள் அவரைவிட்டு அகன்றனர்,
அவர்தம் நெறிஎதும் மதித்தனர் அல்லர்,
28. ஏழை அழுகுரல் அவர்செவிக்கு ஏற்றிலர்
அழுந்துவோர் புலம்பல் அவர்கேட்கு மாறு.
29. அசைந்திலர் என்னில் அவரைப் பழிப்பதா?
அவர்முகம் மறைந்தால் காண்கவல் லார்யார்?
நாடோ, மனிதனோ, நடப்பது ஒன்றே;

---

23. கணக்கு வழக்கிட—AB, RSV, "in judgement." அடுத்த அடியில் "கேளார்" (without inquiry) என வருவது கொண்டு இங்கு "கணக்கு வழக்கிட" பொருத்த மாகவும் தெளிவாகவும் வைக்கப்பட்டது.

24,25. கடவுள் தமது வழக்கை நியாயமாகக் கேட்டுத் தீர்ப்பிட வேண்டுமென யோபு கூறியதற்கு விடையாக எலியூ இவ்வாறு கூறுகிறார்; மனிதனைக் கடவுள் விசாரிக்கத் தேவையில்லை, அவருக்கு அவனது நடத்தை அனைத்தும் தெரியும், அவனவன் நடத்தைக்கு ஏற்ற வெகுமதி கிட்டும் என்பது எலியூவின் இடித்துரை.

மிதிபடுவார்கள்—JB; AB, RSV, "are crushed."

26. தண்டக் குற்றவாளிகள் நடுவே—மூலத்திலுள்ள சொல்படி; குற்றவாளிகளாக (AB); RSV, "அவர்களுடைய தீமைக்காக."

JB—"அவர்கள் தீமையால் அவர்களை வீழ்த்தி
அனைவரும் காணச் சிறையில் அடைப்பார்."

அம்பலம் தன்னில்—மூலம், "in the place of spectators."

27. அவரை விட்டகன்றனர்—மூலம், "from after him," i.e. "from following him" (RSV); AB, "turned away from him."

28–33. இக் கண்ணிகள் பொருள் விளங்கக் கடினமானவை; எழுபதின்மரின் கிரேக்க மொழிபெயர்ப்பில் இவை இல்லை; தற்கால மொழிபெயர்ப்புக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை. (பக்கம் 143 பார்க்க.)

29. என்ன முறையிட்டாலும் இறைவன் கேளாதவர்போல் இருக்கிறார் என்பதற்காக அவரைப் பழிக்க மனிதனுக்கு உரிமை இல்லை என்பது முதலடியின் பொருள் எனத் தோன்றுகிறது.

நாடோ மனிதனோ—"நாட்டையும் மனிதனையும் அவர் நோக்குகின்றார்" என்பது ஒரு மொழிபெயர்ப்பு.

30. பக்தியற் றவனின் ஆட்சி நீங்கவும்,
மக்களை மாட்டும் வலைகள் நீங்கவும்,
31. கடவுளை நோக்கிக் கரைந்துரு கினனு
'பிழைபட் டேன்,இனி வருத்தம் தாரேன்;
32. காணுமாறு எனக்குக் கற்பித் தருள்வீர்;
தீதுசெய் திருந்தால் இனிச்செய மாட்டேன்'—என?
33. அவனுக்கு உங்கள் முறைப்படி யோஅவர்
அளப்பார், அன்றெனில் தடுப்பீர் என்றே?
அவர்திரு வுளமா, உங்கள் விருப்பமா?
அறிந்தது என்ன, அறைக, நீங்கள்?

34. நல்லறி வுடையோர் சொல்லுவர், ஞானம்
உள்ளவர் எனின்என் உரைகேட் போரே:
35. 'அறிந்து பேசுவார் அல்லர் யோவு;
சிறிதும் பொருளொடு செல்லாது அவர்சொல்.
36. குறைவறச் சோதித்து எடுக்க வேண்டும்
கொடியோர் போன்று கூறிய யோவை.

---

30. நீங்கவும்—மூலம், "from the ruling of an impious man;" from என்பதை ஐந்தாம் வேற்றுமையில் நீங்கல் பொருளாகக் கொண்டு 'நீங்கவும்,' என வினையாக்கியுள்ளேன். இரண்டாமடியிலும் இப்படியே. வாக்கியம் அடுத்த கண்ணியில் வினைமுற்றுப் பெறுகிறது.

31. கரைந்து உருகினனு—"சொன்னனு" என்பது நேர் மொழிபெயர்ப்பாகும்; ஆனல் இடம் நோக்கிப் பொருள் தெளிவு கருதி இவ்வாறு அமைத்துள்ளேன்.

32. காணுமாறு—யோவு தாம் செய்த குற்றம் என்ன என்று தமக்குக் காட்டுமாறு கடவுளையும் நண்பர்களையும் அறைகூவிப் பேசினுர் அல்லவா? அதற்கு எலியூ கூறும் விடை, குற்றத்தை முதலில் ஒப்புக்கொண்டால் அது விளங்கும் என்பதாகும். நண்பர்கள் கூறியதும் இதுவே.

33. மூலத்தில் மூன்று அடிகளாய் இருக்கிறது. உங்கள் முறைப்படியோ—மூலம் "உங்களோடு இருந்தோ/ சேர்ந்தோ,"

34. நல்லறிவுடையோர்—காண்க 10ஆம் கண்ணி.

35. காண்க 35:16; 38:2; 42:3. உண்மையில் யோவு தமக்குத் தமது கேள்விக்குரிய விடை தெரியும் என்று பேசவில்லை; பழைய விடை தமது கேள்விக்குப் பொருந்தவில்லை என்பதே அவர் வாதமெல்லாம். ஆகவே அவர் பேச்சு அறிந்தவர் ஒருவர் அறிவுறுத்தும் விளக்கம் போன்றது அன்று என்பது மெய்யே.

36. கொடியோர் போன்று—காண்க 22:15. யோவு கேட்கும் கேள்விகளை வைத்து அவரும் கொடியவர்களில் ஒருவரே என்று கூறுதல் தகாது.

37. பாவத் தோடுஒரு பழியும் கூட்டுவார்,
அப்படி யாளன அறைவார் நம்மிடை;
கடவுளை எதிர்க்கும் அவர்சொல் கணக்கிலே.' ''

---

37. பழியும் கூட்டுவார்—மூலத்தில் ''transgression'' என்று உள்ள சொல் முதலடியில் வருகிறது; அதை AB இரண்டாமடியில் அமைத்துள்ளது.

RSV. ''For he adds rebellion to his sin;
he claps his hands among us, . . .''

AB. ''For he adds to his sin,
Denies his transgression among us . . .

JB: ''நீங்கள் சொல்லலாம் 'இறைவனை அவர்கள்
(27–33) பெரிதும் மறந்தனர், அவர்தம் நெறியினைப்
புறக்கணித்து ஒதுக்கினர்; பொறுக்காது ஏழைகள்
இறைவனை நோக்கி முறையிட்டு அழுதனர்;
தாழ்ந்தோர் புலம்பல் தாக்கியது அவர்செவி;
ஆயினும் அவர்தாம் அசைந்தார் இல்லை;
ஒன்றும் அவரை உறுத்துவ தில்லை;
முகத்தை மறைத்துக் கொள்வார்; எவரும்
அவரைக் காண முடியாது' எனவே.
இருந்த போதிலும் இரக்கமே அவர்செயல்
நாடுக ளிடத்தும் மாந்தரிடத்தும்;
கடுந்துயர் வலையின் கண்ணியி னின்று
பக்தியற் றோனையும் விடுவிப் பாரே.
அப்படிப் பட்ட ஒருவன் இப்படிக்
கடவுளை நோக்கிக் கழறுவ னுனல்—
'மயங்கி மோசம் போனேன்; மற்றுநான்
இனிமேல் பாவம் புரியேன்; தவறு
செய்தேன் என்னில் தெரிவிப் பீர்அதை;
இதுவரை அநீதனுய் இருந்திருந் தாலும்
இனிமேல் அப்படி இருக்கமாட்டேன்' என—
அந்நிலை தன்னில் அவனை ஒறுப்பதே
அவர்க்குக் கடனென நினைக்கின் றீர்களோ,
அவர்தம் முடிபினை எடுத்தெறி வோரே!
அப்படிக் கூறத் துணிபவன் நானலன்,
நீங்கள் தாமே ஆதலால் அனைவரும்
அறியச் சொல்லுக நீங்கள் அறிந்ததை.''

RSV மொழி பெயர்ப்பு அது இன்னொரு வகை.

# 35

## கள்ளக் கூக்குரல் கடவுள் கேளார்

**35:** [பக்தியாயினும் பழியாயினும் கடவுள் பார்ப்பதாகத் தெரியவில்லை என்ற யோவின் கூற்றுக்கு மாற்றம் உரைக்கின்றார் எலியூ (1–4). மனிதன் செய்யும் நன்மையும் தீமையும் கடவுளைப் பாதிக்க மாட்டா; ஆயினும் அவர் நன்மைக்கு நற்பலனும் தீமைக்குத் தண்டனையும் வழங்காமல் இல்லை. மனிதனுடைய முறையீடு அவர் காதில் விழவில்லை எனில், அதற்குக் காரணம் அம்முறையீடு உண்மையானது அன்று என்பதாகும் (5–13). கடவுள் தீயோரைப் பொருட்படுத்தாமல் இருக்கிறார் என்ற யோவின் பேச்சு அறியாமை, வீண் பேச்சு (14–16).]

*35:1. பின்னும் எலியூ பேசுவார்:*

*2. ''நீதியே இதுவென நினைக்கின் றீர்களோ*
*'ஈதுஎனக்கு அவரிடம் உரிமை'என் பீர்களே?*
*3. 'தீதுநான் செய்து பெறும்பலன் யாது?*
*யாதுஉமக்கு அதனால் ஆவது?'என் பீர்களே?*
*4. இதற்குநான் உங்களுக்கு இயம்புவேன் என்விடை,*
*உங்களோடு உங்கள் நண்பர்க்கும் தானே.*
*5. அண்ணாந்து நோக்குக வானம், தலைக்குமேல்*
*எம்மா உயரம் எழிலிகள், காண்க!*

---

*2. ஈது எனக்கு அவரிடம் உரிமை—27:2இல் யோவு கூறியதைக் குறிப்பது போலும், அவர்—மூலம், ''கடவுள்.''*

*3. அடிகளை முன் பின்னாக மாற்றியது தெளிவுக்காக. மொழிபெயர்ப்பு* ABயைப் *பின்பற்றியது.* 'உமக்கு' என்பது RSV–யில் 'எனக்கு' என உளது. ஆனால் *7:20 காண்க.*

*தீது . . . யாது?—'தீது செய்து பெறக்கூடியதைவிடத் தீது செய்யாமல் நான் பெற்ற பலன் என்ன பெரிது?'* (RSV) — என்பதே வழக்கமான மொழிபெயர்ப்பு.

*தீது செய்து என்ன, செய்யாது இருந்தென்ன, நீதிதான் உலகில் இல்லையே என்ற நினைப்பும் யோவின் கூற்றுகளிலே இல்லாமல் இல்லை.*

*இவற்றையெல்லாம் நினைவில் கொண்டு எலியூ இங்கு பேசுகிறார்.*

*5. காண்க 11:7–9.* ஆனால், கடவுள் எனைத்தையும் கடந்தவர் என்னும் உண்மையை யோவு இதைவிட அழகாக எடுத்துரைத்துள்ளார் *(காண்க 9:8–11).*

*தலைக்கு மேல்—மூலம், ''உங்கள் தலைக்குமேல்.''*

6. தீதுசெய் வீர்களேல் யாதே அவர்க்கு?
உங்கள் பழிபல ஓங்கினும் அவர்க்குஎன்?
7. நீங்கள் நேர்மையேல் ஆங்குஅவர்க்கு அளிப்பதுஎன்?
உங்கள் கையினுல் ஒன்றுஅவர் பெறுவதுஎன்?
8. உங்கள் கொடுமைநும் போன்றமா னிடற்கே;
உங்கள் நேர்மையும் உலகவர் தமக்கே.
9. கொடுமைகள் குவியக் கூக்குர லிடுவர்;
வலியார் கைமுன் தாம்துணை வேண்டுவர்;
10. எவரும் சொல்லார், 'எங்கே கடவுள்,
என்னைப் படைத்தவர், இரவில் காப்பவர்,
11. கானக விலங்கினுல் கற்பித் தருள்பவர்,
வானகப் புட்களால் மதிசொலித் தருபவர்?'—என.
12. கூக்குர லிடுவர், அவரோ கேளார்,
தீய மனிதரின் செருக்கி ஞலே.
13. கள்ளக் கூக்குரல் கடவுள் கேளார்,
எள்ளள வும்அதை இணையிலி பாரார்.

---

6,7. காண்க 22:2–4. இந்தக் கருத்தை யோவும் கூறியிருக்கின்ருர் (7:20). காண்க ஊக். 17:10; உரோ. 11:35.
ஓங்கினும்—''உங்களுடைய பழிகள் பலவாகப் பெருகினும்'' (RSV).

8. மனிதனுடைய நல்லொழுக்கமும் தீயொழுக்கமும், அறிவும் மடமையும் மனிதர் களைப் பாதிக்குமே அன்றிக் கடவுளைப் பாதிக்க முடியாது (பழ. 9:12).
உலகவர்—மனிதர்.

9. கொடுமைகள்—மக்களை மக்கள் வாட்டும் அநீதிகளால், அடக்கு முறைகளால் உண்டாகும் கொடுமைகள். இது பற்றி யோவு ஏற்கெனவே விரிவாகப் பேசியுள்ளதை 24:2–17இல் காணலாம்.

10. காப்பவர்—AB குறிப்பின்படி.

11. 'காட்டு விலங்குகளைக் காட்டிலும் அதிகமாகக் கற்பிப்பார், வானத்துப் பறவை களைப் பார்க்கிலும் நம்மை ஞானம் மிக்கவர்கள் ஆக்குவார்'—என்பது RSV.
இயற்கையெல்லாம் இறைவனது புகழ் பாடி மனிதனுக்கு ஞானம் உணர்த்தும் என்ற கருத்து பழைய ஏற்பாட்டில் பல இடங்களிலும் காணக் கிடப்பதை ஆதார மாகக் கொண்டு AB செய்த மொழிபெயர்ப்பை நானும் இங்கு அமைத்துள்ளேன்.

JB—''காட்டு விலங்குகள் தம்மைக் காட்டிலும்
திறமை சாலிக ளாகவும், வானத்துப்
பறவைகள் தம்மைப் பார்க்கிலும் அறிவு
நுட்பம் உடையோ ராகவும் நம்மை
ஆக்கும் அவர்தாம் எங்கே? என்று.''

13. கள்ளக் கூக்குரல்—AB, deceit; RSV, empty cry.

14. பார்க்க முடியாது அவரைஎன் பீர்கள்;
வழக்குஅவர் முன்னது, பொறுத்திருப் பீர்களே.
15. அவர்சினம் தண்டனை அளிப்பதா யிலைஎன,
பழியினை நன்குஅவர் பார்ப்பதும் இலைஎன
16. யோவுதம் வாயால் விரிப்பது வெற்றுரை,
அடுக்கும் மொழிகளும் அறியா மைதான்.''

---

*14.* யோவு தமது நிலையை வழக்கறிஞர் போல் எடுத்துப் பேசியுள்ளார் (13:18; 23:4). வழக்கு இனி இறைவனுடைய தீர்ப்புக்குக் காத்திருக்க வேண்டும் என்கிறார் எலியூ.

RSV—''அவரைக் காணேன் எனவும், அவர்முன்
வழக்கினை வைத்துக் காத்திருக் கின்றேன்
எனவும் கூறும் உங்கள்சொல் கேட்பரோ?''

*15.* என—'என்று' என்னும் பொருளிலும், 'என்பதால்' என்னும் பொருளிலும் கொள்ளலாம். AB, RSV, JB காண்க.

# 36

## அல்லலுற்றோரை அல்லலால் காப்பார்

**36:** [கடவுள் நீதி காரணர். அவர் இணையில்லா ஆற்றல் உள்ளவர். அவருடைய கண்காணிப்புக்கு அரசர்களும் தப்ப முடியாது (1–7). தீமை செய்தவன், திமிர் பிடித்தவன் தம் பாவத்துக்கு மனம் வருந்தினால் பிழைப்பான், நல்வாழ்வு பெறுவான்; திருந்தானாயினால், அறிவற்றவனாய் இறந்துமடிவான் (8–14). ஆகவே துன்பம் ஒருவனுக்கு விடுதலை அளிக்கும் கருவியாக அமையலாம். இதனை யோவு நினைத்துப் பார்த்துத் திருந்திக்கொள்ளட்டும் (15–21). கடவுளின் ஆற்றல் கணக்கிட முடியாதது; அவரைப் போல் அறிவுறுத்தக் கூடியவர் யாரும் இல்லை. மனிதனுக்கு அவர் அளிக்கும் ஆதரவை அளவிட முடியாது (22–33) என்கின்றார் எலியூ.]

*36:1.* மீண்டும் எலியூ பேச லானார்:

2. ''சற்றே இருங்கள்; காட்டுவேன் உங்கட்கு
இறைவன் சார்பாய் இயம்ப இனும்உள.
3. அப்பா லிருந்துஉரை கொணர்வேன், என்னை
ஆக்கினோன் நீதி காரணன் என்பேன்.
4. மெய்யே என்சொல் பொய்யே அன்று;
வாய்மையுள் ளவனே உங்களோ டுள்ளவன்.
5. காண்க, ஆற்றல் சான்றவர் கடவுள்;
ஆயின் இகழார், அகத்தில் தூயனை.

---

2. இருங்கள்—'ஒருவரைச் சுற்றிக் கூட்டம் கூடுதல்,' 'பொறுத்திருத்தல்' என்னும் இரு பொருள்களிலும் வரும் ஒரு சொல் மூலத்தில் உளது. 'இரு' என்பது அதற்கு ஒத்து வருவது காண்க.

இறைவன் சார்பாய்—'இறைவனிடமிருந்து' என்றும் மொழிபெயர்க்கலாம்.

3. அப்பாலிருந்து—கடவுளிடமிருந்து என்பது கருத்துப் போலும். எலியூ தமது கருத்து கடவுள் கருத்து எனக் கூறுகிறார் எனலாம்.

நீதி காரணன்—எலியூவின் இந்த இறுதியுரையில் முதன்மையாக உள்ள கருத்து இது. ''என்னைப் படைத்தவரிடமிருந்து உண்மையை உணர்ந்து தெரிவிப்பேன்'' எனவும் இந்த அடியை மொழிபெயர்த்துள்ளனர்.

4. வாய்மையுள்ளவனே—காண்க 37:16 குறிப்பு. AB, ''one perfect in *utterance*''; RSV, ''one who is perfect in *knowledge*.'' இவ்விரு கருத்துக்களையும் ''வாய்மை'' ஒருசேரக் குறிக்கக் காணலாம். AB குறிப்பும் காண்க.

தன்னைப் பொய் சொல்லாதவன் என்கிறார் எலியூ.

5. AB மொழிபெயர்ப்பு. எபிரேயம்: ''காண்க, வல்லவர் கடவுள்; (யாரையும்—RSV) இகழார்; அறிவின் ஆற்றல் சான்றவர் அவர்.''

6. வாழ விடார்அவர் தீயோர் தம்மை;
வாட்டமுற் ருேர்க்கு வழங்குவார் நீதி.
7. நேர்மையோர் மீதுஅவர் பார்வைநீங் காது;
அரியணை அரசரோடு அவர்களை அமர்த்துவார்,
என்றும் அவர்கள் ஏற்றம்உற் றிருப்பர்.

8. ஆயின் அன்னுர் கட்டுண் டார்எனின்,
அல்லல் தளைகளில் அகப்பட் டார்எனின்,
9. அவர்கள் செயலை, அளவு மீறலை,
அவர்கள் திமிரை அவர்களுக்கு உரைப்பார்;
10. கண்டிப்பு அடையக் காதினைத் திறப்பார்,
கட்டளை யிடுவார் தீமையை விட்டிட.
11. அவர்சொல் கேட்டுப் பணிந்து நடந்தால்,
வளமாய் முடியும் அவர்தம் வாழ்நாள்,
கழியும் இன்பமாய் அவர்தம் காலம்.
12. கேட்டு நடந்திலர்? கால்வாய் கடப்பர்,
அறியா வண்ணம் அழிந்து மடிவர்.

---

6. யோபின் கூற்றிற்கு எலியூ மறுப்பு, முதலடி. காண்க 21:7.

7. மூலம் ஈரடிகளாக உள்ளது.

8–11. துன்பம் ஒருவனைக் கண்டித்துத் திருத்த உதவும் என்பதை எலியூ வற்புறுத்துகிறுர். ஏன் துன்பம் என்ற தடைக்கு அவர் தரும் முக்கியமான ஒரு விடை இது. ஏலிப்பாசும் இதனைக் குறிக்காமல் இல்லை (காண்க 5:17).

JB (7–8): ''நல்லவன் உரிமையை ஆதரித் தளிப்பார்;
அரசரை அரியணை அவரே ஏற்ற
முடிவிலா ஆட்சிகண்டு அடைகுவர் செருக்குஎனின்
அப்போது அவர்கட்கு விலங்கு மாட்டுவார்,
அடிமைத் தளையாம் அல்லலிற் பூட்டுவார்.''

8. கட்டுண்டார் எனின்—விலங்கிடப்பட்டுக் கட்டுண்டார் எனின் (AB, RSV).

10. காதினைத் திறத்தல் என்பது பழைய ஏற்பாட்டில் முக்கியமான செய்தியை அறிவுறுத்தும்போது வழங்கப்படும் சொல். அதனுல்தான் போலும் JB மொழிபெயர்ப்பு—''செய்திஒன்று அவர்தம் செவியில் ஓதுவார்,
அவர்கள் திருந்துமாறு ஆர்வம் தூண்டுவார்.''

11. இன்பம்—AB; RSV, இனிமை. JB: ''கடைசிக் காலம் கவலேயே இராது.'' இன்பம் என்பதே பொருத்தம் என AB குறிப்பிலிருந்து புலனுகிறது. ''இன்ப வனம்'' (Eden) என்ற சொல்லும் இங்கு கும்ரான் ஏட்டில் காணும் சொல்லும் ஒன்று போல் உள்ளன என்பது AB குறிப்பு.

12. கால்வாய் கடப்பர்—காண்க 33:18. ''வாளால் வீழ்வர்'' என்பதே கும்ரான் ஏடு குறிக்கும் கருத்து. ஆனுல் 'வீழ்வர்' அன்று 'கடப்பர்' என்பதே மூலச் சொல்லின் கருத்து என AB குறிப்பிடுகிறது. கால்வாய் என்பது பாதலத்து ஆற்றைக் குறிக்கும். கால்வாய் கடந்தவர் மீளார். தண்ணீரைக் கடந்தவனைக் கூப்பிடக் கூடாது என்று ஒரு பழக்கம் நமது நாட்டில் உளது காண்க.

13. அஞ்சுவது அறியார் வெஞ்சினம் பேணுவர்,
தம்குறை இரந்துஅழார் தமைஅவர் கடியுநாள்.
14. அவர்கள் ஆன்மா இளமையில் மடியும்,
அவர்கள் வாழ்வு காமுக ரோடுபோம்.

15. அல்லலுற் றோரை அல்லலாற் காப்பார்,
வேதனை யால்அவர் காதினைத் திறப்பார்.
16. இடுக்கண் வாயினின்று உங்களை ஈர்த்தார்,
நெருக்கடிப் படாதவாறு அகலிடம் வைத்தார்;
கொழுத்து வடிந்தன உங்கள் பந்தி.
17. நீங்களோ—தீய தீர்ப்பினுல் நிறைவடைந் தீர்கள்;
நீதியும் தீர்ப்பும் நிரைத்துப் பிடித்தன.

---

13. அஞ்சுவது அறியார்—"impious of heart" என்பது மூலம். எபிரேயத்தில் பக்தி என்பதற்கு உரிய சொல் (கடவுளுக்கு) அஞ்சுதல் என்பதும், heart என்பது அறிவின் உறைவையும் குறிக்கும் என்பதும் தெரிந்தவையே. ஈண்டு, "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்" என்ற குறளும் இசைந்து வருவது காண்க.

'தம் குறை இரந்து'—இது AB-யில் இல்லை; ஆனுல் RSV (JB) "(cry) for help" என்று குறிப்பிட்டுள்ளது.

கண்டிக்கையில்—மூலம், RSV, "கட்டிப் போடுகையில்". கட்டி வைத்துக் கண்டிக்கும் வழக்கம் உண்டு அன்றோ?

14. காமுகர்—சோதோம் கொமோரா மக்களிடை நிலவிய பழக்கம் குறிப்பிடப் படுகிறது.

15. எலியூவின் முதலாவது உரை இந்த ஈரடிகளில் அடங்கும் (காண்க 33:16–30). முன்னை முன்னால் எடுக்கும் தத்துவம் அவர் இங்கு குறிப்பிடுவது.

16 முதல் 20 வரையுள்ள கண்ணிகள் திட்பமாக மொழிபெயர்க்க மிகவும் கடினமானவை (AB குறிப்பு காண்க).

17. "செல்வர்களுக்குச் சாதகமாகத் தீய தீர்ப்புகள் வழங்கி அவர்கள் கொடுக்கும் கைக்கூலியால் நிறைவு கொண்டீர்கள். இப்பொழுது தப்பாத நீதியும் தவறுத தீர்ப்பும் கிடுகு முடைவதுபோல் பின்னி நிரைதலாகி உங்களைக் கிடுக்கிப் பிடித்தன" என்பது விளக்கமாகும்.

மூலத்தில் காண்பதன்படி சொல்லுக்குச் சொல் மொழிபெயர்த்தால்,—"தீய தீர்ப்புகள் நிறைந்துள் ளீர்கள், தீர்ப்பும் நீதியும் சிக்கெனப் பிடித்தன." RSV இதனையே பின்பற்றியுள்ளது.

JB: "ஆயின் நீங்கள் ஞாயப் படிக்குத்
தீயோர் தம்மைத் தெறுக்க வில்லை;
திக்கில் லாத சிறுர்க்குஅவர் உரிமைகள்
வாய்க்கவொட் டாமல் வஞ்சித் தீர்கள்."

ABயும் கிட்டத்தட்ட இவ்வாறே.

ஆனுல் மூலத்தில் சிலேடை ஒன்று உள்ளது எனக் கண்டு ஒரு சொல்லை முதலடியில் உணவு என்றும் இரண்டாமடியில் தீர்ப்பு என்றும் பெயர்த்து வழங்கியுள்ளார் Guillaume:

"நீங்களோ—செல்வனின் உணவால் நிறைந்துள் ளீர்கள்;
தீர்ப்பும் நீதியும் உங்களைப் பிடித்தன." "நிறைவு," "நிரைத்து" என்னும் சொற்களால் இந்த அழகை ஓரளவு சுட்டிக்காட்ட முயன்றுள்ளேன்.

18. வளங்கண்டு மயங்கி உளங்கெடல் வேண்டாம்;
நிறைகைக் கூலியால் நெறிகெடல் வேண்டாம்.
19. உற்றபோது உங்கள் உடைப்பெருஞ் செல்வம்
செல்லுமோ அவரிடம், செல்வச் செருக்கெலாம்?
20. துடிக்கா தீர்கள் இரவினை அடைய,
இருந்த இடந்தனில் இனங்களே மாய்கையில்.
21. மீண்டும் தீமை வேண்டாம், ஆமாம்;
வேதனை யான சோதனை இதற்கே.

22. காண்க, ஆற்றலிற் கடவுள் தனிமுதல்;
அவர்க்கு நிகர்ஓர் ஆசிரியர் உளரோ?
23. அவர்செலும் ஆறுஅவர்க்கு ஆரே விதித்தார்?
'தவறினீர் வழி'எனச் சாற்றவல் லவர்யார்?

---

8. AB மொழிபெயர்ப்பை ஒட்டியது.
RSV—''சினம்கண்டு மயங்கிச் சிரித்திடல் வேண்டாம்;
நெறிகெடல் வேண்டாம் இலஞ்சப் பெருமையால்.''
JB—''இனிச் சரிக்கையா யிருங்கள்; செல்வம்
மதியினை மயக்க வழிகெடல் வேண்டாம்,
நிறைகைக் கூலியால் கறைபடல் வேண்டாம்.''

19. AB மொழிபெயர்ப்பு. இது மூலத்தின் பொருளை மாற்றவில்லை என அது குறிக்கிறது. ஆயினும் அறிஞர்களுக்கு மிகுந்த இடர்ப்பாடு விளைக்கும் கண்ணி இது என்றும் அது தெரிவிக்கிறது. மூலத்திலுள்ள ஒரே ஒரு சொல்லைத்தான் அது திருத்தி இவ்வாறு மொழிபெயர்த்துள்ளது; அதையும் திருத்தாதுவிட்டால் அமைவது—
''உற்றபோது உங்கள் உடைப்பெருஞ் செல்வம்
செல்லாது, உங்கள் செல்வச் செருக்கெலாம்.''
நீதியுள்ள இறைவனைக் கைக்கூலி கொடுத்து வசமாக்க முடியாது என்பது கருத்து.

20. இரவினை அடைய—பெருங் கேடுகளின் காலம் இரவு (காண்க 34:20,25; தானி. 5:30; லூக். 12:20). தீர்ப்பு வேண்டி இறைவன் திருமுன் செல்ல யோவு ஆர்வம் கொள்ள வேண்டாம் என்பது கருத்து.
மாய்கையில்—மூலச் சொல் ''மேலே (தூசிபோல்) போகையில்''.
இருந்த இடந்தனில்—அதாவது முன்னறிவிப்பின்றித் திடீரென்று. ''நெருநல் உளன் ஒருவன் . . .'' என்ற குறள் வழக்கையும் ஒப்பிடுக.

21. வேதனை ஆன சோதனை இதற்கே—ஆன என்பதற்குப் பதில் ''விளைத்த, தந்த'' என வைக்கலாம். இது AB மொழிபெயர்ப்பு. RSV, மூலத்தைச் சொல்லுக்குச் சொல் பின்பற்றிய வகையில், ''வேதனையை விட்டு இதனை (தீமையை) விரும்பினீர்கள்.''
JB: ''தீங்கு செய்யும் நோக்கினை விலக்குக; அதுதான் மெய்யாய் உங்கள், சோதனைக் கெல்லாம் காரணமாகும்.''

23. ஆறு=வழி; ''அவருக்கு ஆற்றல் அளந்தவர் அவர்யார்?'' என்றும் மொழி பெயர்க்கலாம்.

24. நினைக்க அவரது படைப்பினைப் புகழ;
எடுத்துப் பாடலாய் இசைத்துளர் பலரும்.
25. பாரில் யாவரும் பார்க்கும் பொருள்அது;
தூரத் திருந்தே நோக்குவன் மனிதன்.
26. காண்க, கடவுள்தம் பெருமைநாம் அறியோம்;
அவர்தம் ஆண்டுகள் கணக்கில கருத்தும் கடந்தன.
27. நிறுத்துவார் பிடித்து நீரின் துளிகளை
நிலத்துஅடி ஊற்றின் வடித்தெடு முகிலாய்;
28. துளித்துளி யாகப் பொசிந்து 'சோ'வெனப்
புவிமிசை ஓங்கிப் பொழிவன முகில்கள்.
29. அறிவார் யாரே பரவும் முகில்களை,
அவர்மணிப் பந்தரின் ஆர்ப்பரிப் பதனை?
30. காண்க, இறைவன் கதிரொளி பரப்புவார்;

---

26. கணக்கில—AB (reading missappēr, 'innumerable,' for MT mispār, 'few,' as in 16:22; 15:20உம் காண்க). சங். 101:26, 27 காண்க.

RSV, ''அவர்தம் ஆண்டுகளின் தொகை ஆராய்ந்தறிய முடியாதவை.''

27. நிலத்தடி ஊற்றின்—ABயைப் பின்பற்றியது. மழைக்கு முன்னர் ஈரப் பதம் தந்தது நிலத்தடியிலுள்ள நீராகும் (காண்க ஆதி. 2:6). இவ்வடியை,

''பெயல்தனை மஞ்சினில் கரைத்து/வடித்து வைப்பவர்'' என JB/RSV பெயர்த்தது பிழை என்பது AB குறிப்பு.

முகிலாய்—மழையாய்/பெயலாய் என்பது AB. அடுத்த கண்ணி காண்க.

27–30. ''நிலத்தின் கீழ் உள்ள ஊற்று அவருக்குப் பணியும்; கடலடியிலும் அவரே அரசு வீற்றிருப்பவர்; அவர் மேக வாகனனுகவும் வருபவர்; யாவும் அவருடையனவே'' என்ற குறிப்புகள் இக்கண்ணிகளில் புலப்படுகின்றன.

28. புவிமிசை—AB குறிப்பின்படி. [Dahood . . . has shown that 'ādām here and in several other instances—Zech. 9:1, 13:5, Prov. 30:14, Jer. 22:20—has the same meaning as 'ādāmāh, ''ground.'' (AB Notes)].

RSV, ''மழையினை வானம் சொரியும் மனிதனின் மேலே வாரிக் கொட்டும்.''

JB, ''அவ்வாறு அவர் செய்யாவிடில் (27 காண்க), மக்கள் குலத்தின் மேலெலாம் முகில்கள், வெள்ளமாய்ச் சிந்தி விடுமே.''

29. ஆர்ப்பரிப்பு—closer to the original than ''thunderings'' of AB, RSV. (காண்க AB குறிப்பு).

மணிப் பந்தர்—AB, RSV, ''pavilion.'' ''Covert, booth,'' sukkāh, as in Ps. 17:11. இருண்ட மேகங்கள் என்ற குறிப்பாலும், இறைவன் வேந்தன் என்பதாலும் ''மணிப் பந்தர்'' என்றேன்.

30. ABயைப் பின்பற்றியது. கதிரொளி—AB; RSV, மின்னல்; 'அவரது ஒளி' என்பது மூலம்.

இறைவன்—''அதன் மேல்'' என்பதை AB, ஆதாரத்துடன், இவ்வாறு மொழி பெயர்த்துள்ளது.

ஆழ்கடல் தளம்அவர்க்கு அரசு கட்டிலாம்.
31. இவற்றல் நாடுகள் ஊட்டி வளர்ப்பார்;
அவற்றுக்கு உணவினை அள்ளிக் கொடுப்பார்;
32. கதிர்க்கும் மின்னலைக் கைக்குள் அடக்குவார்,
இலக்கினை நோக்கி எறிவார் அதனை.
33. தனைஅது உணர்த்தும் சடசட சடவென;
வருபுய லதனை மாடும் உணரும்.''

---

JB: ''மஞ்சினை உதறி விரிப்பார், தம்மைச்
சுற்றிப் போர்த்துவார், மலைத்தலை மறைப்பார்.'' ஆனல் ''அவரது ஒளி'' என்பதை மஞ்சு என்றும் (LXX), அதற்கேற்பக் ''கடலடியை'' மலைத்தலை என்றும் மாற்றியது தவறு என்கிறது AB.

இரண்டாமடி—RSV, ''கடலடித் தளம்அவர் மூடி மறைப்பார்.''

ஆழ்கடல் தளம்—''roots of the sea'' (AB, RSV).

31. இந்த அடி இங்கு பொருத்தமாக இல்லை என்று கருதி இதனை AB, JB இரண்டும் 28ஆம் கண்ணியை அடுத்து வைத்துள்ளன. ''இவற்றல்'' என்பது AB, JB கருத்துப்படி மழை முகில்களைக் குறிக்கும். அவ்வாறு அன்றி, இந்த அடியை இந்த இடத்திலேயே வைத்து, ''இவற்றல்'' என்பதற்கு மேற்சொன்ன நீர், நிலம், ஒளி, கடல் ஆகியவை பொருளர்கும் எனக் கொண்டால் என்ன?

32, மூலத்தினை ஒட்டி மொழிபெயர்த்தது (தி. ப.). அதனைத் திருத்திய AB கூறுவது: ''அவர்தம் உள்ளங் கைகளில் மின்னல், குதிக்கும், எறிவார் குறி தவருமல்.''

JB: ''மின்னலைக் கைகளிற் சேர்த்துப் பிடிப்பார்,
இலக்குஅதற்கு எதுவெனத் தேர்ந்து குறிப்பார்.''

RSV: ''மின்னலால் தமது கைகளை மறைக்கிருர்,
இலக்கினைத் தாக்க இடுகிருர் ஆணை.''

33. மொழிபெயர்ப்பாளரின் விழி பிதுங்க வைக்கும் பேர்போன கண்ணி இது எனக் குறிக்கிறது AB. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே, இதற்கு முப்பது விளக்கங்கள் கூறியுள்ளனராம். இங்கு நான் கொண்ட மொழிபெயர்ப்பு ''Jewish Publication Society of America: The Holy Scriptures, 1917'' கொடுத்தது; According to AB, ''it is as literal as possible''—viz. ''The noise thereof telleth concerning it,/The cattle also concerning the storm that cometh up.'' வரு புயலதனை மாடும் உணரும், மனிதன் உணரவில்லையே என்பது குறிப்புப் போலும்.

AB: ''இடி முழக்கத்தோடு இறைவன் பேசுவார், எழும் அவர் வெகுளி தீமையை எதிர்த்தே.'' RSV, தி. ப.: ''அக்கிரமத்திற்கு எதிராகக் கடுஞ் சினத்துடன் வெகுண்டு எழுபவரைப் பற்றி இடிமுழக்கம் அறிவிக்கிறது.''

# 37

## உயரிய நீதியர்; ஒடுக்குவார் அல்லர்

**37:** [இடியும் மின்னலும் புயலும் மழையும் பனியும் எல்லாம் உண்டாக்குபவர் அவரே; அவை யாவும் அவர் ஆணைப்படி நடக்கின்றன (1–13). இவற்றை யெல்லாம் முற்றும் உணர்ந்தறிய யோபினால் முடியுமா? அவர் வாதாடு வதை நிறுத்திவிட்டுக் கடவுளுடைய புதுமைகளைக் கருதிப் பார்க்க வேண்டும். அவருடைய மேன்மையும் அறிவாற்றலும் நமக்கு எட்டாத அருமை உடையன. அவர் வல்லவரே எனினும் நீதியுள்ளவர், அடக்கி ஒடுக்கும் கொடியவர் அல்லர்; ஆகவே மக்கள் அவருக்கு அஞ்சுதல் அழகாகும்; 'எல்லாம் தெரியும்' என்று இறுமாப்புடன் நடப்பவனை அவர் மதிக்க மாட்டார்(14–24) என்று எலியூவின் உரை முற்றுப் பெறுகிறது.]

*37:1.* "இதுகண்டு நடுங்கும் எனது நெஞ்சம்
தனதுஇடம் பெயர்ந்து தாவிக் குதிக்கும்.
*2.* கேளுங்கள் அவரது குரலின் முழக்கம்,
அவர்தம் வாயின் அதிரும் ஓசை.
*3.* விசும்பின் கீழே வீசுவார் யாண்டும்
மின்னலை மண்ணகத்து எல்லைக ளெல்லாம்.
*4.* அடுத்துவந்து உரறுமே அவர்தம் குரலொலி,
இடித்து முழக்கும் ஏந்திய பேரொலி;
கேட்டதும் அவர்குரல் நில்லார் மாந்தர்.
*5.* அருமையே அருமை கடவுள் குரல்இடித்து உரைப்பது;
பெரியவே அவர்தம் செயல்கள்நம் அறிவினுக்கு எட்டா.
*6.* 'உறைபனி, உலகில் வீழ்க' என்பார்;
'அடைமழை, உறைத்துப் பெய்க' என்பார்;

---

*1.* இடியோசை கடவுளின் குரலொலி; காண்க சங். 17:13, 76:17–18.

*3.* *வீசுவார்*—AB; RSV, lets it go. (AB குறிப்பு காண்க).

*மின்னலை*—"தமது மின்னலை" என்பதில் 'தமது' விடப்பட்டது.

*4.* *நில்லார்*—AB (காண்க AB குறிப்பு). உரறும்=ஒலி பல அடுத்தடுத்து வந்து உரசுவது போன்று ஒலிக்கும்.

*ஏந்திய*=மேன்மையான.

*6:* 'உறைபனியைப் பார்த்து', 'அடைமழையை நோக்கி' என்னும் AB, RSV.

*அடைமழை*—AB, எபிரேயம், "downpour of rain(s)." AB notes that the word here rendered "downpour" refers to the prolonged heavy rain of the Syrian–Palestinian winter. எனவே, அடைமழை.

7. எல்லோர் கையையும் இல்லத்து அடைப்பார்,
அவரது கைத்திறன் அனைவரும் அறியவே.
8. காட்டு விலங்குதன் முழையினை அடையும்;
ஆங்குஅது குகையினுள் படுத்துக் கொள்ளும்.
9. அரங்கத் திருந்து புயல்வரும்; கறங்கி
அடிக்கும் காற்று கொடுக்கும் கூதல்.
10. ஊதுவார் கடவுள், உறைபனி வந்திடும்,
பரந்த நீர்நிலை உறைந்து போகும்.
11. எறிவார் மின்னல் எழிலியி லிருந்து;
தெறிக்கும் அவர்ஒளி முகில்களி லிருந்து.
12. அஃதுஅவர் திருவுளப் படியே ஆடும்,
அவர்இடும் ஆணைகள் அனைத்தையும் செய்யும்,
மாந்தர் உறைதகு மண்ணுல கெல்லாம்.
13. கண்டிப் பதுவோ, கடைக்கண் நோக்கோ,
இரக்கமோ எய்தும் இலக்குஅதற்கு உண்டு.

---

7. முதலடி: எபிரேயம், "With the hand of every man he seals." (AB குறிப்பு காண்க). RSV, "He seals up the hand of every man." இங்குள்ள வினைச் சொல் "shut" என்ற பொருளிலும் வரும் என்பதற்கு AB ஆதி. 7:16ஐச் சான்று காட்டுகிறது. AB மொழிபெயர்ப்பு, "Every man he shuts in." அவ்வாறே "மக்களெல்லோரையும் மனைக்குள் முடக்குவார்" என அமைப்பது பொருந்தும். எனினும் இங்கும் 'கை' வருமாறு அமைத்தது, RSVயை (மூலத்தை), ஒட்டி.

இல்லம்—தெளிவுக்காகச் சேர்த்தது.

இரண்டாமடியை, "அவர்தாம் படைத்த மக்கள் எல்லோரும் அதனை அறியவே" என்று JPS மொழிபெயர்த்துள்ளது, எபிரேயச் சொல் பிறழாமல்.

9. அரங்கம்—AB, "the Chamber"; RSV, "its chamber"; JB, தெற்குக் களஞ்சியம் (காண்க 9:9).

10. ஊதுவார் கடவுள்—கடவுளின் மூச்சு (AB, RSV); காற்றைக் குறிக்கக் கவிஞர்கள் கையாளும் சொல்.

11. AB மொழிபெயர்ப்பு. RSV "தடித்த எழிலிக்கு ஈரத்தைப் பாரமாக்குகிறார்; அம்முகில்கள் அவரது மின்னல் தெறிக்கின்றன."

12. அஃது அவர் . . . ஆடும்—AB, "It changes direction as he wills";
RSV, "They turn round and round by his guidance."

'அவன் சொன்னபடியெல்லாம் இவன் ஆடுகிறான்' என்ற பேச்சு வழக்கும் காண்க.

13. கடைக்கண் நோக்கு—ABயைப் பின்பற்றியது (AB குறிப்பு காண்க); RSV, "அவரது நிலம்."

இலக்கு—AB; RSV, "he causes it to happen."

இடியும் மின்னலும் இறைவனுடைய நோக்கத்தை நிறைவேற்றும்; அந்நோக்கம் மக்களைக் கண்டிப்பதாகவோ, அருள்கூர்ந்து அவர்களுக்கு இரக்கம் காட்டுவதாகவோ இருக்கலாம். 1 கொரிந். 4:21 காண்க.

14. காது கொடுக்க வேண்டும், யோவு;
கடவுளின் புதுமைகள் கருதுக நின்று.
15. அவற்றினை எப்படி ஆள்கிறுர் கடவுள்,
எழிலிகள் மின்னுவது எவன்,அறி வீர்களோ?
16. முகில்களைத் தூக்கி நிறுத்தத் தெரியுமோ—
முழுமையும் உணர்ந்தவர் புதுமைகள் அலவோ? —
17. தென்திசைக் காற்றினுல் மண்ணகம் அடங்கவும்
உடுத்திய உடைசுடப் புழுங்கும் உங்களால்?
18. திண்ணிய வார்ப்படக் கண்ணு டியோஎனும்
விண்ணினை அவரொடு விரிக்கவல் வீர்களோ?
19. ஏதுநாம் அவர்க்கே இயம்புதல்? கூறுக;
வாதுநாம் இருளில் வைத்துப் புரியவோ?
20. 'அவாவினேன் பேச'என்று அவரிடம் சொல்லவா?
அகப்பட்டு அழிய ஆசையா நமக்கு?

---

15. ஆள்கிறுர்—AB.' 'commands''; literally "puts upon them" i.e. ''lays charge upon them.'' RSV, ''lays his command upon them.'' 'இடுதல்' என்பதும் கட்டளையிடுதல் என்ற கருத்தில் வருவது தமிழிலும் உண்டு; காலால் இட்டதைத் தலையால் செய்வேன் என்னும் பேச்சு வழக்கு காண்க.

மின்னுவது எவன்?—எழிலிகளில் மின்னலை எப்படித் தோற்றுவிக்கின்றுர்? (AB); தமது மேகத்தின் மின்னலை எப்படி மின்னச் செய்கின்றுர்? (RSV).

16. முழுமையும் உணர்ந்தவர்—AB, RSV, ''one perfect in knowledge.'' ஆயின் இதே சொற்றெடரை 36:4இல் AB ''one perfect in utterance'' என்றது.

அ(ல்)லவோ—தமிழில் சேர்த்தது.

17. பாலத்தீனத்தில் பாலை நிலத்திலிருந்து அனற்காற்று எழும்பொழுது, உடுத்தியிருக்கும் உடை கொதிக்கும் என்பதை W. M. Thomson (The Land and the Book, new ed., 1913, p. 536) தெளிவாகக் கூறியுள்ளார். ஆகவே, உடை சுடும் என்பது உயர்வு நவிற்சி அன்று. அது மட்டுமன்று. பறவைகள் மரங்களின் நிழலுள் ஒடுங்கும்; கோழிகள் மனைகளுக்குள் இறக்கைகளைத் தொங்கப்போட்டுக்கொண்டு வாயைத் திறந்தவண்ணம் திணறும்; ஆடுமாடுகள் குகைகளை அடையும்; பாட்டாளிகள் வேலையை விட்டு வீடுகளை அடைந்து வாயில்களையும் சன்னல்களையும் அடைத்துக்கொண்டு பேசாதிருப்பர். சத்தம் என்பதே இராது. காற்றும் அசையாது என்கிறுர் அவர் (AB). எனவே, ''அடங்கும்.''

18. வெண்கலத்தை வழவழப்பாகத் தேய்த்துக் கண்ணுடியாக்கினர் பழங்காலத்தில் (காண்க யாத். 38:8). வானம் ஒரு வில் மண்டபக் கூரையாகக் கருதப்பட்டது (ஆதி. 1:6). வறட்சிக் காலத்தில் வானம் வெண்கலத்துக்கு ஒப்பிடப்பட்டது (உபா. 28:23).

அவரொடு—AB; RSV, அவரைப்போல்.

19. நாம் அறியாமை உடையவர்கள் ஆதலால் நமது வழக்கினை முறைப்படி எடுத்துச் சொல்ல நம்மால் இயலாது.

புரியவோ—''புரிய முடியாது'' என்பது மூலம்.

20. கடவுளோடு வழக்காட விரும்புவது மடமை என்று யோவுக்கு எலியூ இடித்துரைக்கிறுர். அவ்வாறு விரும்புவது தற்கொலை ஆகும் என்கிறுர்.

அகப்பட்டு அழிய—AB, ''to be devoured''; RSV, ''be swallowed up.''

21. காற்று வீசிக் கலைத்துப் போனபின்
வானின் வயங்குஒளி நோக்கஒண் ணுதே,
ஆங்குஅது கதிர்க்கும் பாங்கது பெரிதே.
22. வடமலை யின்வரும் மாண்புஅவிர் பொன்ஒளி;
கடவுளைச் சூழவும் காண்பரும் மாட்சி.
23. இணையிலி அவரைநாம் எட்டஒண் ணுது;
தலைமைய அவர்தம் வலிமையும் தீர்ப்பும்;
உயரிய நீதியர், ஒடுக்குவார் அல்லர்.
24. ஆதலால் அவர்க்குநாம் அஞ்சுதல் அழகாம்;
மதியுடை யோர்என யாரையும் பாரார்.''

---

21. இந்த அடிகளை AB 18ஆம் கண்ணியை அடுத்து வைத்துள்ளது. இதில் வரும் ஒளி என்பது கதிரவனைக் குறிக்கும் என்று கொண்டு, அனற்காற்றின்போது அதனை மறைத்து வானத்தை உருக்கிய கண்ணுடிபோல் தோன்றச் செய்த தூசிப் படலங்களைக் காற்று கலைத்துப் போன பின்பு கதிரவனைப் பார்த்தால் கண் கூசும் என விளக்கியுள்ளது AB. (காண்க சீராக். 43:2–4). ஆனால், அதற்காக இக்கண்ணியை இடம் மாற்றத் தேவையில்லை. அடுத்த கண்ணியோடு சேர்த்து நோக்கினுல் ஆசிரியரின் கருத்து விளங்கும். கதிரவனையே நம்மால் காண முடியவில்லையே, கடவுளைக் கண்டு நிற்க முடியுமா என்பதே கருத்தாகக் கொள்க.

22. வடமலை—Zaphon என்னும் மலை; 26:7 குறிப்பும் காண்க.
மாண்பவிர் பொன்னொளி—golden splendour (RSV); ஆனுல் மூலம், 'பொன்' (gold) என்பதே. RSV, வடமலையை வடதிசை என்று மொழிபெயர்த்துள்ளது. AB, ஸபோன் மலை உகாரித் புராணங்களில் வரும் புண்ணிய மலை எனக் குறிப்பிட்டு, பாகால் தெய்வத்துக்கு அதில் தங்கமும் வெள்ளியும் நீலக்கல்லும் இழைத்த ஒளிமயமான கோயில் அமைத்த கதையைச் சுட்டிக் காட்டுகிறது. கடவுளைச் சூழவும் அவர் மாட்சி பேரொளியாக அமைந்துள்ளது என்பதை வலியுறுத்த, 21ஆம் கண்ணியின் கதிரவன் வருணனையும், இங்கு வடமலைப் புராணக் கருத்தும் அமைந்தன எனலாம்.

23. இணையிலி—ஷடாய். எட்டவொண்ணுது—AB; RSV, 'cannot find.'
தலைமைய—AB, pre-eminent; RSV, great.
உயரிய நீதியர், ஒடுக்குவார் அல்லர்—AB; RSV, 'and abundant righteousness he will not violate.'
கடவுள் நீதி நிறைந்தவர், எனினும் அடக்கி ஒடுக்கும் கொடியவரல்லர் என்பது கருத்து. இது யோவு 9:20–22இல் கூறியவற்றுக்கு மறுப்பாகும்.

24. மதியுடையார் . . . பாரார்—மூலத்தின் சொற்களைத் தழுவி ஆக்கியது. இறுமாப்பு உடையோர் எவரையும் கருதார், மதியார் என்பது கருத்து. RSV, ''மதியுடையோம் என்பார்கள் தம்மை அவர் கருதார்.''
அழகாம்—AB, should (fear him); RSV (men) fear (him). பணிந்து நடப்பதே ஒருவன் பண்பினை ஆக்கும் ஆதலால் அழகாம்.

## IV. கடவுள் காட்சியும் யோவின் பணிவும்

# 38

# சில கேள்விகள்

38: [யோவு சிக்கிய துன்பதுயரச் சூறுவளியின் நடுவணிருந்து கடவுள் யோவிடம் பேசுகின்றார். அறியாமையால் பேசும் யோவு யார்? மண்ணுலகின் தோற்றத்தைப் பற்றி அவருக்கு என்ன தெரியும்? குமுறும் கடலினை அடக்கிவைத்திருப்பதும், பொழுது விடிவதும் யோவின் கட்டளைகளினாலா? (1–15). பாதாளத்தின் ஆழமும், நிலவுலகின் நீள அகலங்களும், ஒளி, இருள் ஆகியவை இருக்கும் இடங்களும், பனிக்கட்டிகளின் களஞ்சியங்களும், விண்மீன் கூட்டங்கள் இயங்கும் முறையும், மழை பெய்யும் ஒழுங்குகளும் குறித்து யோவு அறிந்ததென்ன? (16–38). சிங்கத்துக்கும் அண்டங் காக்கைக்கும் உணவு அளித்து அவற்றைக் காப்பாற்ற யோவினால் முடியுமா? (39–41).]

*38:1. யோவுக்கு அதன்பின் யாவே மறுமொழி*
*புகன்றார் அந்தப் புயலிடை யிருந்து:*

*2. ''எண்ணிய எண்ணம் இருளுறும் வண்ணம்*
*அறிவிலா உரைகளால் மறைப்பவன் எவன்இவன்?*
*3. இடையினை இறுக்கிக் கட்டிநில் வீரனாய்;*

---

1. *யாவே—கடவுளைக் குறிக்க யூத மதாசாரியர் பயன்படுத்திய இச்சொல் இந்நூலில் முன்னுரையிலும் 40, 42ஆம் அதிகாரங்களிலும் வருகின்றது; உரையாடற் பகுதியிலும் எலியூவின் பேச்சிலும் இல்லை. யாவே என்பதை உச்சரிக்க மாட்டார்கள்; அச்சொல்லை ஆண்டவர் என்றே பேச்சில் வழங்குவர். எனவே இங்கு* RSV, "the Lord" *எனவும், தி. ப. ''ஆண்டவர்'' எனவும் மொழிபெயர்த்துள்ளன. அதன்படி அமைப்பதானால் முதலடிக்கு மாற்று: ''அதன்பின் யோவுக்கு ஆண்டவர் மறுமொழி.''*

*புயலிடை—கடவுள் காட்சி கொடுக்கும் இடங்களில் இடி, மழை, புயல் முதலியன உடன் நிகழ்வதைப் பழைய ஏற்பாட்டில் பல விடங்களில் காணலாம் (சங். 17:8–16, 49:3, 67:8–9, 14; அபாக். 3:6; நாகும். 1:3; எசே. 1:4; சக்கரி. 9:14; யாத்திரா. 13:22, 19:16).*

*இரண்டாம் அடி—காண்க 40:6 குறிப்பு.*

3. *வீரனாய்*—AB; RSV, *ஆண் மகன்போல். ஆயின், ஆண்மகன் என்றால் வீரன்தான். நில்—தமிழில் இங்கு சேர்த்தது, எனினும் பொருள் தெளிவு பெற உதவும்.*

*இடையை இறுக்கிக் கட்டுவது மெய் வருத்தம் தரும் பெரு முயற்சிக்கு ஆயத்தமாவதாகும். (யாத்திரா. 12:11; 1 அரச. 18:46; இசை. 11:5; எரே. 1:17).*

விடைஎனக்கு இறுப்பாய், வினவுவேன் உன்னிடம்.
4. ஞாலம் தனக்குநான் கால்கோள் செய்தநாள்
யாங்குநீ இருந்தாய்? சொல்,அறி வுடையையேல்.
5. அதற்குஅளவு அறுத்தவர் யார்?அறி வாயே?
அதன்மேல் நூல்பிடித்து அளந்தவர் அவர்யார்?
6. அதன்தூண் அடிகளை இறக்கியது எதன்மேல்,
அதன்தலைக் கல்லினை அமைத்தவர் அவர்யார்,
7. ஒன்றுபோல் வைகறை உடுக்கள் பாடவும்
கடவுள் மக்கள் எலாம்களித்து ஆர்த்தநாள்?
8. கடலினைக் கதவிட்டு அடைத்தவர் அவர்யார்,
அடிவயிற் றிருந்துஅது பொங்கிப் பொழிந்தநாள்,
9. முகிலினை ஆடையாய்க் கரிய மஞ்சினை
அதற்குநான் பொதிதுணி ஆக்கிய அந்நாள்,
10. அதற்கு வரையறை எல்லைகள் குறித்துக்
கதவினைத் தாழிட்டு இறுக்கிய அந்நாள்,
11. 'இதுவரை வருவாய், இதற்குமேல் அன்று;இவண்
நிற்கஉன் மூர்க்க நெடுந்திரை' என்றநாள்?

---

விடை . . . உன்னிடம்—கடவுளிடம் வழக்காடி அவரை வாதுக்கு அழைத்தார் யோவு. ஆனல் அது இப்படி நிகழும் என்று அவர் நினைக்கவில்லை. இயற்கையின் அதிசயங்களைப் பற்றியும் உலகையும் அதன் உயிரினங்களையும் ஆண்டு நடத்துவது பற்றியும் யோவு பதில் சொல்ல முடியாத கேள்விகளை இறைவன் அவர் உள்ளத்திலே எழுப்புகின்றார்; அதன் நோக்கம், திணறடிப்பதன்று; கடவுளுடைய பேரறிவிற்கும் நீதிக்கும் மறுப்பும் தடையும் இளப்பல் மடமை என்று உணர்த்துவதாகும்.

4. இத்தகைய கேள்விகளை ஏலிப்பாசும் (15:7,8), எலியூவும் (37:18) கேட்டுள்ளனர். ஆயினும், எல்லாம் அறியும் இறைவனிடம் கேட்டுணர்வதுபோல் ஆகாது, நம்மை ஒத்த மனிதரிடம் கேட்டு அறிவது.

அறிவுடையையேல்—AB, "if you know so much"; RSV, "if you have understanding;" எபிரேயம், "if you know understanding;" கும்ரான் ஏடு 'if you know wisdom.' பூமியை இறைவன் படைத்தபோது, ஞானமும் உணர்வும் அவருக்கு வெளியே இல்லை, அவரோடிருந்தன என்பது குறிப்பு.

5. அறிவாயே?—ஏகாரம் வினுச் சுட்டு; "Surely you know?" என்பது AB, RSV; and AB notes "the emphatic [ஏ] kī with postposition of the verb is employed . . ." [அடைப்பினுள் நான் ஏகாரம் வைத்தது ஒப்பு நோக்குவதற்கு.]

7. கால்கோள் செய்யும் நாள் இசை விருந்தொடு களிக்கத் தக்க ஒரு விழாவாகும்.
கடவுள் மக்கள்—RSV; AB, gods; வானவர்களைக் குறிக்கும்.

8. அடி வயிறு—AB, RSV, கருப்பை; அண்டமனைத்திற்குமுரிய அதளபாதளம் என்பர்.

11. நிற்க—AB, RSV; முறிக எனவும் மொழிபெயர்க்கலாம் (AB குறிப்பு).

12. ஆயுளில் ஒருமுறை யாகிலும் உண்டோ
காலைப் பொழுதைநீ கட்டளை யிட்டதும்,
வைகறை தனதுஇடம் அறிய வைத்ததும்,
13. புவிகவி கங்குலின் தொங்கலை இழுத்துப்
பொல்லா தவர்களை உதறித் தள்ளவே,
14. சாயம் ஏற்றிய ஆடை போலவும்,
பொரிமண் போலவும் பூமி மாறக்
15. கொடியோ ருடைய ஒளியினைப் பறித்தும்,
அடிக்க ஓங்கிய கையினை முறித்தும்?

16. கடலடி ஊற்றுகள் இடைநுழைந் தனையோ,
ஆழியின் புழைகளில் அவண்நடந் தனையோ?
17. காட்டி னர்களோ சாவின் வாயில்கள்,
கண்டனை யோநீ கரும்கடை வாயில்கள்?
18. அவனியின் பரப்பெலாம் ஆய்ந்துஅறிந் தனையோ?
அறைகுவாய், ஈதெலாம் அறிந்தனை யாயின்.
19. ஒளியின் உறைவிடம் தனக்கு வழிஎது,
இருளின் இருப்பிடம் அதுவும் எதுவே,
20. அதனுடை எல்லைக்கு அழைத்துப் போகவும்,
அதன்உறை விடத்துக்கு ஆம்வழி காட்டவும்?
21. அறிந்தனை, நீயும் அன்றே பிறந்தவன்;
ஆண்டுகள் உனக்கும் ஆமாம் மிகவே!

---

12. ஈரடிகளை மூவடிகளாக விரித்திருக்கிறேன்; எனினும் மூலத்தை ஒட்டியதே.

13. தொங்கல்—NEB; AB, RSV, "skirts".

பூமியை இரவு ஆடைபோல் மூடிப் போர்த்தியிருக்க அதனுள் தீயோர் தம் பொல்லாத செயல்களைப் புரிகின்றனர்; வைகறை அப்போர்வையை இழுத்து உதறிவிடுகிறது என்பது கற்பனை.

14. பொரி மண்—terra sigillata (AB குறிப்பு); வைகறை ஒளியில் மண்ணகம் செந்நிறம் பாய்கிறது.

15. கொடியோரின் "ஒளி" காரிருளே (காண்க 24:13–17).
அடிக்க—விளக்கம் கருதிச் சேர்த்த சொல்.

12–15. கண்ணிகளை ஒரு வாக்கியமாக அமைத்தது JBயைப் பின்பற்றி.

16. 28:11 காண்க.

17. காண்க சங். 9:13, 106:18; இசை. 38:10; ஞாஞ. 16:13.

21. நையாண்டி. 15:7உம் காண்க.

22,23 கண்ணிகளை முன்பின்னாக மாற்றியது தெளிவும் கருத்தோட்டமும் கருதி.

23. இடர்ப்படு நாள்களுக்கு எனநான் குறித்த,
அடுபோர்க் காலம் அதற்கென வைத்த
22. உறைபனிக் கிடங்கின் உட்புகுந் ததனையோ?
கல்மழைக் களஞ்சியம் கண்டதும் உண்டோ?
24. ஒளியின் அனலைப் பிரித்ததுஎவ் வாற்றால்?
கிழக்குஎழுந்து அவனிமேல் பரவல்எவ் வாற்றால்?
25. கொட்டும் மழைக்கு வாய்க்கால் வெட்டி
இடியொடு பொழியத் தடம்அமைத் தவர்யார்,
26. மனிதர் வாழா மண்ணிலும், மாந்தர்
குடியிராப் பாலை நிலத்திலும் பெய்து,

---

23. காண்க சீராக். 39:35; யாத். 9:22–26; யோசு. 10:11; இசை. 28:17 30:30; எசேக். 13:13; ஆகாய். 2:18.

24. எவ்வாற்றால்—மூலத்தில் உள்ள சொல் 'வழி' (=ஆறு), 'ஆற்றல்' என இரு பொருளில் வரக்கூடியது; எனவே ''எப்படி (எவ்வாறு, எவ்வாற்றால்)'', ''எந்த ஆற்றலால்'' என இரு பொருள்கள் கொள்ளலாம். இரு பொருள்களுமே ஆசிரியர் கருத்தில் இருந்திருக்கலாம் என்கிறது AB. 'எவ்வாற்றால்' என்பதில் ஆற்றல் ஒலி ஓரளவு கேட்கும் என எண்ணி 'எவ்வாறு' என்னுமல் இவ்வாறு வைத்துளேன்.

இக்கண்ணி பலவாறான மொழிபெயர்ப்புகளுக்கு இடம் தந்துள்ளது. முதலடியில் வரும் ''ஒளி'' என்பதை AB வெள்ளம் (=அண்டத்து நீர்நிலை; காண்க 36:27) எனத் திருத்தியுள்ளது; கிரேக்கமும் 'ஒளி' எனக் கொள்ளவில்லை; NEB 'அனல்' எனக் கொண்டுள்ளது. அடுத்த அடியில் கிழக்கு என்ற சொல் கிழக்கு எழும் (அனற்) காற்றைக் குறிப்பதாகவே பலரும் மொழிபெயர்த்துள்ளனர். முதலடியிலுள்ள வினைச்சொல்லைப் ''பிரித்தல்'' என்பாரும், ''தோற்றுவித்தல்'' என் பாரும், ''பிரித்து வழங்கல்'' என்பாரும், ''பரப்பல்'' என்பாரும் ஆகப் பலவாறு பொருள் படுத்தியுள்ளனர். எபிரேய மூலத்தில் காண்பது ''ஒளி''; கிரேக்க எழுபதின்மர் மொழிபெயர்ப்பில் உள்ள சொல் ''உறைபனி வெண்திரை''யையும் குறிக்கும், புகையையும் குறிக்கும்; ஒளியும் வெம்மையும் ஒன்றாய்க் கிழக்கில் உதிப்பவை, அனற் காற்றும் கிழக்கு எழுவது; யாவும் உலகம் முழுதும் பரவுபவை; ஆகையால், இஃதை யெல்லாம் கருத்தில்கொண்டு ''ஒளியின் அனலைப் பிரித்தது எவ்வாற்றால்? கிழக் கெழுந்தவனிமேல் பரவல் எவ்வாற்றால்?'' என ஊகமாக அமைத்துள்ளேன். JBயின் ஊகம்:

''நீணிலம் மீதினில் தீப்பொறி சிதற
வெடித்திடும் மின்னல் கவர்த்திடும் வழிஎது?''

25. இடியொடு பொழிய—AB. 28:26 காண்க. இரண்டு இடங்களிலும் இரண்டாம் அடி ஒன்றுபோல் உளது என்று AB தெரிவிக்கிறது.

26–27. உலகில் மனிதனுக்கு மட்டுமன்று, மற்ற உயிரினங்களுக்கும் கடவுள் கருணை காட்டி வருகின்றார் என்பதை இவ்வடிகள் அறிவுறுத்துகின்றன. ''கல்லினுள் தேரைக்கும் கருப்பையுள் உயிர்க்கும்'' என்பதும் நினைவுகூரத் தக்கது. மனிதன் தன்னைப் பற்றி மட்டுமே நினைக்கலாகாது என்பது குறிப்பு.

27. வறிதுள பாழ்ங்காடு அதன்தகை அடக்கவும்,
பொட்டல் தரையினில் புல்முளைப் பிக்கவும்?
28. மழைக்குத் தந்தை உண்டோ? மற்றும்
பனியின் துளிகளைப் பெற்றெடுப் பவர்யார்?
29. உறைபனி தோன்றும் வயிறுஎது, வானத்து
உறைபனி மூட்டம் உருவாம் சூல்எது,
30. கல்லைப் போல்புனல் கட்டியாய் இறுகக்
கடலும் பொருக்கெனக் கரந்து படுநாள்?

31. கார்த்திகை மீனுக்குக் கால்விலங்கு இடவும்,
மார்கழி மீன்தளை அவிழ்க்கவும் வல்லையோ?
32. குறித்த பொழுதினில் விடிமீன் கொணரவும்,
குருளைசேர் வடமீன் செலுத்தவும் வல்லையோ?
33. விண்வெளி விதிமுறை பிடிபட் டதுவோ?
மண்ணகந் தனில்அது நடத்திவைப் பாயோ?
34. உன்குரல் முகில்வரை எட்டுமோ, முகிலின்
தண்ணீர்ப் பெருக்கு தலைக்குமேற் போகவே?
35. மின்னலைப் பொடுபொடு எனவர விடுப்பையோ?
உன்முன் அதுவும்வந்து 'என்னை?' என்னுமோ?

---

27. பொட்டல்—எபிரேயம், motsa (=place of issue, of coming forth) 28:1இல் smelter என மொழிபெயர்க்கப்பட்டுள்ளது; அதன் வேர்ச்சொல் "clean" எனப் பொருள்படும் என்பது AB கருத்து. ஆகவே, காய்ந்த தரை, ஒன்றும் முளைத்திராமல் துடைத்துத் துப்புரவானதுபோல் கிடக்கும் "பொட்டல்" பொருந்தும்.

புல்—RSV; AB, verdure.

30. கடலும் . . . நாள்—மேற்பரப்பு பனிக்கட்டிப் படலமாயிருப்பது பொருக்குப் போலவும் அதனடியில் கடல்நீர் அகப்பட்டுள்ளது ஒளிந்திருப்பதுபோலவும் கருதப் பட்டன. இது எபிரேய மூலத்தை ஒட்டிய வருணனை. AB : "ஆழ்கடற் பரப்பும் சிறைப்படும் காலை."

32. விடிமீன்—மூலச் சொல் Mazzārôth என்பது எதனைக் குறிக்கும் எனத் திட்பமாக விளங்கவில்லை. ஆகவே AB, RSV போன்றவை அச்சொல்லை மொழிபெயர்க்காமலே அமைத்துள. விடிவெள்ளி என்பது சிலரது ஊகமே. "நட்சத்திரக் கூட்டங்கள்" என்பதற்கான எபிரேயச் சொல்லுக்கும் இங்குள்ள சொல்லுக்கும் மிக்க ஒற்றுமை உண்டு; அது mazzālôth. ரகரத்துக்கு லகரம் மாற்றாக வருவது உண்டு. ஆகவே, "உடுக் கணம்" இங்கு குறித்த பொருளாக இருக்கலாம் என்பது AB.

குருளை சேர் வடமீன்—இதுவும் ஊகமே.

33. RSVயைப் பின்பற்றியது.

34. 22:11இன் இரண்டாமடியும் இக்கண்ணியின் இரண்டாமடியும் மூலத்தில் ஒன்றுபோல் உள்ளன (AB குறிப்பு).

35. அது—மூலம், பன்மை (AB, RSV). என்னை = என்ன.

36. குருகுக்கு அறிவு கொடுத்தவர் அவர்யார்?
கோழிக்கு உணர்திறன் அளித்தவர் அவர்யார்?
37. எழிலிகள் எண்ணும் ஞானம் எவரது,
வானக நீர்க்குடம் சாய்ப்பவர் எவர்அவர்,
38. புழுதி சேர்ந்து கட்டிக ளாகிக்
கட்டிகள் ஒட்டிஒன் றாகிடும் காலம்?

39. பெண்சிங் கத்துக்கு இரைதே டுவையோ,
அரிமாக் குருளைகள் பசியாற் றுவையோ,
40. குகைகளில் அவைதாம் குறுகி யிருக்கையில்,
கன்முழை களில்அவை பதுங்கி யிருக்கையில்?
41. அண்டங் காக்கைக்கு இரைஅளிப் பவர்யார்,
குஞ்சுகள் உணவிலாது அலந்து பறந்து
கடவுளை நோக்கிக் கரையுங் காலை?''

---

36. இதுவும் ஊகமாக மொழிபெயர்க்கப்படுவதே. குருகு என்பது Thoth என்றும், கோழி என்பது sekwi என்றும் மூலத்தில் உள்ளன. இவை இரண்டும் Mercury என்ற தெய்வத்தைக் குறிக்கும் என்பார் உளர் (AB குறிப்பு காண்க). இக்கண்ணிக்கு TEV மொழிபெயர்ப்பு:

''நைல்நதி பெருகுமென்று நாரைக்கு உரைப்பதார்?
மழை வரப்போகுதென்று சேவலுக்கு உரைப்பதார்?''

37–38. ABயைப் பின்பற்றியது. JB வருமாறு:

''முகில்ஒவ் வொன்றையும் திட்ப நுட்பமாய்
வரையறை செய்துவான் குடங்களைச் சாய்த்து
மண்ணெலாம் இறுகவும் இறுகிய கட்டிகள்
சேர்ந்துஒன் றாகவும் செய்திறன் யார்திறன்?''

வானக நீர்க்குடம்—Water jars (AB), waterskins (RSV) of heaven; காண்க சங். 32:7.

39. காண்க சங். 103:21.

41. காண்க சங். 146:9.

# 39

# மேலும் சில கேள்விகள்

**39:** [மலையாடுகள், மான்கள் எவ்வாறு பல்கிப் பெருகுகின்றன? (1–4). காட்டுக் கழுதையின் பழக்க வழக்கங்களைப் பார்த்ததுண்டா? (5–8). வலிமை மிக்க காட்டு எருமையை நம்பிக் களத்து வேலையை அதனிடம் விட முடியுமா? (9–12). மதிகெட்ட தீக்கோழியின் பழக்க வழக்கங்களைப் பற்றி நினைத்ததுண்டா? (13–18). போர்க் குதிரைக்கு இருக்கும் வலுவும் துணிவும் யோவு வழங்கியவையா? (19–25). வல்லூறும் கழுகும் பறந்து செல்வதும் நெடுந் தொலைவிலிருந்தே இரையினை நோக்கிப் பாய்ந்துவந்து பற்றுவதும் யோவின் கட்டளையினலா? (26–30).]

*39:1.* "வரையாடு ஈனும் பருவம் தெரியுமா?
மான்கன்று ஈனுதல் பார்த்தது உண்டா?
2. எண்ணினை யா,இவை நிறையும் மாதம்?
கணித்தனை யா,இவை ஈனும் காலம்?
3. தாழப் பம்மும், பிதுக்கித் தள்ளும்;
குட்டி வெளியே வந்து வீழும்.
4. வெட்டை வெளியில் குட்டிகள் வளரும்
விட்டுப் பிரியும் மீளவா ராவே.

5. காட்டுக் கழுதை கட்டற்றுத் திரியக்
கனைக்கும் அதனின் கட்டுஅவிழ்த் தவர்யார்?
6. வெறும்பாழ் நிலம்அதன் வீடென வைத்தேன்;
உவர்மண் வெளிஅதன் உறைவிடம் ஆக்கினேன்.
7. நகர்எழும் அமளியைச் சீயென வெறுக்கும்;
அதட்டலும் ஓட்டுவோன் கூச்சலும் அதற்குஇலை.

---

*1.* வரையாடு=மலை ஆடு, AB; RSV, mountain goats. தாவீது காலத்தில் இருந்ததுபோல் (காண்க 1 சாமுவே. 24:1–3) இன்றும் எங்காதி என்ற இடத்தருகே மலையாடுகள் வாழ்கின்றன (AB). மனிதன் ஏறமுடியாத பாறை உச்சிகளில் அவை வாழ்கின்றன; கடவுளுடைய கருணைக் கண் அங்கும் அவற்றைக் காக்கின்றது.

மான்கள் பாலத்தீனத்தில் சென்ற நூற்றுண்டு வரை ஏராளமாக இருந்தன; இந்நூற்றுண்டில் காடுகள் பெரிதும் அழிந்ததால் அவை அருகிவிட்டன (AB).

**1–4.** காட்டிலும் மேட்டிலும், கவனிப்பு இன்றி, எளிதாய்ப் பிறந்து வளர்ந்து திரியும் மலையாடுகளையும் மான்களையும் கடவுள் போற்றி வருகின்ருர்.

**6.** வெறும் பாழ்நிலம்—AB, wilderness; RSV, steppe.

**7.** அதட்டலும் . . . கூச்சலும்—the shouts of the driver (AB, RSV).

8. பொற்றைகள் சுற்றித் திரியும் மேயப்
பச்சைஎங்கு உளதெனப் பார்த்துத் தேடி.

9. கானக எருமைஉன் கட்டளை கேட்குமா?
தான்உன் தொழுமருங்கு ஓர்இராத் தங்குமா?
10. கயிற்றினுல் சாலினில் கட்டிவைத் திடுவையா?
வயலிலே பரம்படித்து உன்பின் வருமா?
11. சாலவும் வலிதுளன அதனைநீ நம்பிஉன்
வேலையை அதனிடம் விட்டிட முடியுமா?
12. திரும்பி வருமெனா இருக்கவும் இயலுமா
களத்துத் தானியம் கைவரு மாறே?

13. நெருப்புக் கோழி பெருமையாய் அடிக்கும்
இறக்கையில் இருப்பதோ எட்டுணைத் தூவல்.
14. தன்னுடை முட்டைகள் தரையினில் இட்டிடும்;
மண்ணின் வெம்மையில் கிடக்க விட்டிடும்;

---

8. பொற்றை—குன்று, மலை. AB, hills; RSV, mountains.

5–8. காட்டுக் கழுதை கட்டற்றுத் திரியும்படி வைத்துள்ளதும் கடவுளின் திட்டத்தையே காட்டும்.

9. கானக எருமை—AB; RSV, ''காட்டு எருது உனக்குப் பணி செய விரும்புமா?'' (உபா. 33:17 காண்க).

AB குறிப்புப்படி, இவ்விலங்கினம் விஞ்ஞானத்தில் Bos primigenius என்பதாகும். பழங்காலத்தில் சீரியா காடுகளில் இது திரிந்தது. ஆபத்தான இம் முரட்டு விலங்கை மன்னர்கள் வேட்டையாடினர். இம் மிருகம் ஒற்றைக் கொம்புக் காண்டா மிருகம் அன்று என AB உபா. 33:17ஐச் சான்றுகாட்டி வலியுறுத்துகிறது.

10. கயிற்றுல் ஏரில் கட்டி உழுவதைத்தான் கவிதை நயம்பட இவ்வாறு கூறுகின்றுர் போலும்.

வயலில்—''பள்ளத்தாக்கில்'' (AB, RSV, தி.ப.); மாற்று: காட்டில். பரம்படிப்பவர் அக்காலத்தில் அந்நாட்டில் முன்னே நடந்து தம் பின்ஞக மாட்டை இழுத்துச் செல்வார் போலும்.

12. ABயைத் தழுவியது.

9–12. மாடுகள் இன்றி வேளாண்மை பெருகாது என்பதைப் பழ. 14:4 குறிப்பிடக் காணலாம். காட்டு எருமை மிகுந்த வலிமை படைத்திருப்பதால் அது இவ்வாறு உதவுமா?

13. நெருப்புக் கோழி—மூலத்தில் குறிக்கப்பெறுவது பெட்டைத் தீக்கோழி (AB). இக்கண்ணி இரண்டு நூற்றுண்டுகளுக்கு முன்பே இருபது வகையாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளதாம். இங்கு எடுத்தாண்டது AB மொழிபெயர்ப்பு.

JB: ''இறக்கை அழகினில் நாரை, பருந்தொடு
நெருப்புக் கோழி நிகர்என முடியுமா?''

பெருமையாய் அடிக்கும்—மூலச் சொல், 'களிகூரும்.'

15. காலடி பட்டு நசுங்கிட லாமே,
காட்டு விலங்கு சவட்டிட லாமே,
இந்நினை வெல்லாம் இல்லை அதற்கு.
16. கொடிதே, அதுதன் குஞ்சுகள் தள்ளும்;
பதறுது அதுதன் பாடுபா ழாயினும்.
17. அறிவில் லாததாய் அதனைப் படைத்துளார்,
அதற்குக் கடவுள் அளித்திலர் நன்மதி.
18. எழுந்துதன் சிறகினை விரிக்கும் போதிலோ
பரியொடு பரிஊர் வோனையும் சிரிக்குமே.

19. குதிரைக்கு வலிமை கொடுத்தவன் நீயோ?
பிடரியை முடியால் உடுத்தவன் நீயோ?

---

15. மூலத்தில் ஈரடிகளாக உள்ளது: "கவலையே படாது, கால் நசுக்கிடலாம், காட்டு விலங்குகள் சவட்டிடலாம் என."

16. ABயைத் தழுவியது; எனினும், இரண்டாவது அடி மூலத்தின் சொல்லை ஒட்டியது.

JB, RSV: "தன்னுடைக் குஞ்சுகள் அல்ல போலும்
இரக்கம் இல்லை; கவலையே இல்லை
பட்ட பாடுகள் பாழா யிடினும்."

இரண்டாவது அடிக்கு Knox: "காரணமின்றிப் பதறி நம்பிக்கையனைத்தையும் இழந்துவிடுகிறது."

17. அறிவில்லாததாய்—RSV, "ஞானத்தை மறந்ததாய்."
நன்மதி—RSV, "understanding."
படைத்துளார், அளித்திலர்—படைத்துளேன், அளித்திலேன் என்று தன்மை இடத்திற்குப் பதில் படர்க்கை இடம் வந்துளது. எபிரேயர் செய்யுளில் இது இயற்கை.

தீக்கோழியின் பெட்டை ஒருதடவைக்கு இருபது முட்டைகளுக்கு மேல் இடும். இவற்றை மூன்று பாகமாக்கும். ஒரு பாகத்தை மணல் இட்டு மூடிக் குஞ்சு பொரிக்க விடும்; குஞ்சுகள் வெளிவந்ததும் அவற்றுக்கு உணவாகக் கொடுக்க மற்ற இரு பாகங் களும் உதவும். முட்டைகளை நன்கு மறைக்கும்படி மூடி வைக்காததால் நரி முதலிய விலங்குகள் எளிதில் கண்டு தின்றுவிடும். வைத்த முட்டைகளைப் பிற விலங்குகள் பார்த்துவிட்டன என்று தீக்கோழி கண்டால், அது தானே தன் முட்டைகளை மிதித்து அழித்துவிடும். தலையை மணலுள் புதைத்துக்கொண்டு உடம்பு முழுவதையும் மறைத்துக்கொண்டதாக எண்ணும் அதன் மடமையைப் பிளினி என்பார் குறிப் பிட்டுள்ளார். ஆனால் அது மடமையன்று, ஏனெனில் தன் உடலில் வலுவற்ற பகுதி யாகிய தலையைக் காக்கவே அது இப்படிச் செய்கிறது என்றார் தியோதோருஸ் ஸிக்குலுஸ். எனினும் மடமைக்கு மறுபெயர் தீக்கோழி என்பது உண்மை. "தீக் கோழியைவிட மடையனாய் இருக்கிறான்" என்பது அரேபியர் பழமொழி.

18. "தீக்கோழியைவிட வேகமாக" என்பதும் அரேபியர் முதுமொழி.

13–18. விநோதப் பறவை தீக்கோழி எவ்வளவு மடத்தனமாக இருந்தாலும் அதையும் கடவுள் காப்பாற்றுகின்றார், குதிரையைவிட வேகமுள்ளதாக்குகின்றார்.

19. (பிடரியை) முடியால்—பிடரி மயிர் என்பதற்கு மாறாக இடி என்றும், வலிமை என்றும் மொழிபெயர்ப்பார் உளர்.

20. தத்துக் கிளிபோல் தாவவைத் தனையோ?
நடுக்கிடும் வீறுகொள் கனைப்புவைத் தனையோ?
21. வலுவாய்ப் பிறுண்டும், மகிழ்ச்சி துள்ளும்,
அமர்எதிர் கொள்ள அற்றுப் பிடுங்கும்.
22. அச்சம் கண்டுஅசை யாது, நகைக்கும்;
வாள்வீச் சின்முன் தான்மிர ளாது.
23. மேலே தூணி சரசர வென்னும்,
வேலும் வாளும் பளபள வென்னும்;
24. துடிக்கும், பொங்கும், தொலைவினை விழுங்கும்;
தரிக்காது ஊதுகொம்பு ஓசை கேட்க.
25. எக்கா ளத்தொனி எழ'ஐஇ' என்னும்,
அப்பால் சமரும் இப்பால் மோக்கும்,
தலைவரின் இடியேற்று ஓசையும் கூச்சலும்.

26. வல்லூறு நின்றன் சொல்லாறு கேட்டோ
தென்திசை கிளம்பச் செட்டையை விரிக்கும்?
27. உச்சியில் கூடு கட்டவே கழுகும்
உயரப் பறப்பது உன்கட் டளையோ?

---

21. வலுவாய்—AB; RSV, "பள்ளத்தாக்கில்."
JB: "மகிழ்ச்சி பொங்க மண்ணைப் பிறுண்டும்,
அற்றுப் பிடுங்கும், செருக்குடன் பாயும்,
மோதும் ஆயுதம் எதிர்கொளத் துடிக்கும்."

23. மேலே—RSV, JB; AB, சுற்றிலும். தூணி=அம்புகள் வைத்திருக்கும் புட்டில். வாள்—AB.

24. தொலைவினை விழுங்கும்—மூலம், "தரையை விழுங்கும்," அதாவது விரைந்து ஓடும்.

துடிக்கும், பொங்கும்—RSVயைத் தழுவியது; AB, "இரைச்சல், முழக்கம் இவற்றுக்கு இடையே பறக்கும்."

தரிக்காது—நிற்காது (RSV); மூலச் சொல் "நம்புதல்" (believe); இது இந்த இடத்தில் பொருந்தாது என்று AB கூறுவது பொருந்தாது; நம்புதல் என்பது பற்றுதல், பற்றுறுதி கொள்ளல்; எனவே உறுதியாய் நிற்றல். எனவே 'தரிக்காது' எபிரேய வழக்கிற்கு மிகவும் ஒத்தது. ஏனெனில் நம்பவில்லையேல் தரித்தல் இல்லை என்று தமிழிலும் சொல்லலாம்.

25. ஐ—மூலம், he'āh, மகிழ்ச்சிக் கூச்சல்; சிறுவர்கள் மிக மகிழ்ந்து "ஐயா" என ஐகாரத்தை அழுத்தி, நீட்டித்துக் கூறுவது காண்க; அவ்வாறே ஐ என நீட்டிப்பதும் (அதுவே அளபெடை 'ஐஇ').

26. சொல்லாறு—சொற்படி; AB, RSV, "wisdom."
தென்திசை—திசையையும் குறிக்கலாம், தென்திசைக் காற்றையும் குறிக்கலாம்.

27. RSVயைப் பின்பற்றியது.

28. தங்கலும் உறைதலும் தான்கொடும் பாறை,
ஓங்கி நிமிர்நெடும் பாறை அதன்அரண்.
29. ஆங்கிருந் தேஅஃது ஆய்ந்துஇரை பார்த்திடும்;
தூங்கருந் தொலைவும் காண்குறும் அதன்கண்.
30. குருதியை உறிஞ்சும் அதனுடைக் குஞ்சுகள்;
கொலையுண் டார்எவண் அவண்அது கூடும்.''

---

28. காண்க எரே. 49:16.

30. காண்க பழமொழி 30:17.

இரண்டாவது அடி ஒரு பழமொழியாக வழங்குவது; காண்க மத்தேயு 24:28; லூக். 17:37.

# 40

# வெகிமோத்து

**40:** [பதில் சொல் என்கின்றார் கடவுள். யோவு தம் சிறுமையை ஒப்புக்கொண்டு மேல் பேச மாட்டேன் என உறுதி கூறுகின்றார் (1–5). மீண்டும் சூறுவளி நடுவேயிருந்து கடவுள் தோன்றி, யோவு தமக்குத் தெய்வீக ஆற்றல் இருக்குமானால் அதனைக் காட்டட்டும் என்கின்றார். ஆணவம் பிடித்தவர்களையும் தீயவர்களையும் யோவு இடி முழக்கமாகப் பேசி அடக்கி ஒடுக்கித் தாழ்த்தி வீழ்த்திட முடியுமானால் வீழ்த்தட்டும்; அப்போது அவர் தம்மைத் தாமே காப்பாற்றிக் கொள்ளக் கூடியவர் எனக் கடவுள் ஒப்புக் கொள்வார் (6–14). அடுத்து, வெகிமோத்து என்னும் (புராண ஒப்பனைப்பட்ட அரக்க) உயிரினத்தை எண்ணிப் பார்க்குமாறு யோவிடம் கடவுள் கூறுகிறார் (15–24).]

*40:1. யோவைப் பார்த்து யாவே கூறினர்:*

*2. ''குற்றம் பார்ப்பவனு*
*வரம்பிலான் தன்னெடு வழக்கா டுவனே?*
*கடவுளொடு வாதம் புரிபவன் கழறுக.''*

*3. யாவேக்கு யோவு கூறிய மறுமொழி:*

*4. ''சிறியேன் எளியேன் செப்பலும் உண்டோ?*
*கையால் வாயைப் பொத்திக் கொள்வேன்.*

---

*1. யாவே—38:1 குறிப்பு காண்க. இங்கும் இச் சொல்லை மாற்ற விரும்பினுல், மாற்று மொழியமைப்பு: ''ஆண்டவர் யோவைப் பார்த்துக் கூறுவார்:''*

*2. குற்றம் பார்ப்பவன்—மூலத்தில் உள்ளபடி; குற்றம் பார்ப்பதையே தொழிலாக உடையவன்,* Professional fault finder or disciplinarian (AB)*. இதற்கு முந்திய அதிகாரத்தில் எடுத்துக் காட்டப்பெற்றுள்ள உயிரினங்களின் வருணனைகளில் அதனதன் குற்றம் குறைகள் சுட்டப்பட்டதை நினைவுகூர்ந்தால், இச் சொல்லின்—இக் கேள்வியின்—சிறப்பு துலங்கும். ''குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை'' என்பதும் இங்கு நினைவுகூரத் தக்கது. எனினும், இக்கண்ணியில் சில மாற்றங்களைச் செய்து, அவ்வாறு மாற்றுதல் பலவேறு மொழிபெயர்ப்புக்களின் கருத்துக்களுக்குப் பொருத்த மாகும் என்று விளக்கி* AB *அமைத்துள்ள மொழிபெயர்ப்பு: ''பரமனெடு மல்லுக்கு நிற்பவன் பணிவனு? கடவுளைத் திட்டுவான் அதன் பொறுப்பு ஏற்க.''*

*3. மாற்ற வேண்டினுல், ''ஆண்டவர்க்கு யோவு கூறிய மறுமொழி:''*

*4. சிறியேன், எளியேன்*—AB, ''small;'' RSV, ''of small account.''

5. ஒருமுறை பேசினேன்; மறுசொல் சொல்லேன்;
இருமுறை பேசினேன் இனிப்பே சேனே.''

6. யோவுக்கு அதன்பின் யாவே மறுமொழி
சொன்னார் சூறு வளியி லிருந்து:

7. ''இடையினை இறுக்கிக் கட்டிநில் வீரனாய்;
விடைஎனக்கு இறுப்பாய், வினவுவேன் உன்னிடம்.
8. நான்தீர்த் ததனைத் தான்கிழிப் பாயோ?
தனைச்சரி என்ன எனைப்பழிப் பாயோ?
9. கடவுள்போல் உனக்கொரு கையும் உண்டோ?
உன்குரல் அவர்போல் உரக்க இடிக்குமோ?
10. மேன்மையும் மாட்சியும் மேலெலாம் பூண்பாய்;
சீரும் சிறப்பும் திகழ்தர அணிவாய்.
11. சிதறி வெடிக்கட்டும் சீறும்உன் வெகுளி;
நோக்குவாய், செருக்குற் றோரெலாம் தாழ்த்துவாய்;
12. நோக்குவாய், செருக்குற் றோரெலாம் குன்றவை;
அரைத்திடு காலால் தீயோர் அவண்அவண்;
13. அத்தனை பேரையும் ஆழப் புதைத்திடு;
மறைவிடத்து அவர்களைக் கட்டிப் போட்டிடு.

---

5. காண்க 33:14; சங். 61:11.

6. 38:1இல் புயலுக்குமுன் குறிப்பிட்டுக் காட்டும் ''அந்த'' என்னும் சுட்டு இடைச் சொல் உள்ளது; இங்கு அது இல்லை; மற்றப்படி 38:1 கண்ணியும் இக்கண்ணியும் ஒன்றே (AB).

7. 38:3இல் உள்ளபடியே.

8. JB: ''சரிஎன, நான் தீர்த் ததனைத் தலைகீ ழாக்கி
நீசொல் வதுதான் நேர்எனக் காட்ட
என்னைத் தவறெனக் காட்டு வாயோ?
மெய்யா கவேநீ விரும்புவ திதுவோ?''

9. கை = வலிமை.

10. கடவுளுக்குரிய இடத்தில் அமர்ந்து ஆட்சி செய்யுமாறு யோவுக்கு ஆண்டவர் விடுக்கும் அழைப்பு, அறைகூவல் இது.

JB: ''(கடவுள்போல் ஆற்றல்) உண்டெனின் கொள்க உன் சீரும் பதவியும்,
மாட்சியும் சுடரொளிக் காட்சியும் பூணுக.''

13. ஆழப் புதைத்திடு—மூலச் சொல், 'மண்ணில் புதைத்திடு;' ஆயின் மண் என்பது பாதாளத்தைக் குறிக்கும். (காண்க 10:9; ஆதி. 3:19; இசை. 29:4).

மறைவிடம்—பாதாளத்துக்கு மற்றொரு பெயர்; மூலத்தில் உள்ளபடி அமைந்த சொல்.

கட்டிப்போட்டிடு—''மறைத்துப் போட்டிடு'' என்றும் மொழிபெயர்க்கலாம்.

JB: ''அத்தனை பேரையும் மண்ணில் புதைத்திடு;
பாதலம் தன்னில் ஊமை முகத்தராய்க்
கிடக்க அவர்களை அடைத்துப் போட்டிடு.''

14. உனக்குநான் அப்போது ஒப்புக் கொள்வேன்
உன்வலக் கையே உனேக்காப் பதுவென.

15. வெகிமோத்து அதனேக் காண்க இனிநீ;
உன்னேடு அதனேயும் உளதாக் கினன்யான்.
காளேயைப் போல்அது தழைகுழை தின்னும்;
16. அரையினில் அதற்குள ஆற்றலேக் காணுய்;
பார்அதன் பருத்த வயிற்றுள வலிமை;
17. தடித்து விறைத்தவால் தேவ தாருபோல்;
இறுக்கிப் பின்னிய தொடைத்தசை நார்கள்;
18. முதுகுத் தண்டுகள் வெண்கலக் குழாய்கள்;
குருத்துள லும்புகள் இரும்புத் தண்டுகள்.
19. கடவுள் படைப்பின் அடிநாள் படைப்புஅது;
படைத்தவர் அதனே ஒடுக்கவும் வல்லவர்.

---

14. உ(ன்)னேக் காப்பது—AB (காண்க நீதிபதி. 7:2; இசை. 59:16); RSV: ''உன் வலக்கையே உனக்கு வெற்றி தரும் என.''

15. வெகிமோத்து—நீர் யானே என்று சொல்வார் உளர். இதேபோல், அடுத்து (41இல்) வரும் லெவியத்தானேயும் முதலே என்பார் பலர். இது பொருந்தாது. நீர் யானேயையும் முதலேயையும் எகிப்தியர் வேட்டையாடிப் பிடித்திருக்கின்றனர்; லெவியத்தானேயோ யாரும் தொட முடியாது, கடவுளுக்கு அன்றி அது வேறு யாருக்கும் அடங்காது என்று இங்கு காண்கிறேம். மேலும் பல கண்ணிகளுக்குக் கஜகர்ணம் போட்டு வலிந்து பொருள் கொண்டாலும் நீர்யானேயையும் முதலேயையும் அவற்றில் காண்பது அரிது. மண்ணேரும் விண்ணேரும் வீடுபேறு அடைய முடியாத வாறு தடுக்கின்ற பகைமைச் சக்திகளின் உருவகங்களே வெகிமோத்தும், லெவியத்தானுமாகும் என்பது அறிஞர் பலரது துணிபு. இசுரவேல் மக்களின் புராணங்கள் சிலவற்றிலும் இவை வருகின்றன; இவர்கள் காலத்துக்கு முற்பட்ட பண்டைய மேற்கு ஆசியப் புராணங்களிலும் வெகிமோத்து, லெவியத்தான் ஆகியவற்றின் வடிவங்களேக் காணலாம்.

வெகிமா என்ருல், மூலமொழியில், மாட்டை/மிருகத்தைக் குறிக்கும்; வெகிமோத்து என்ருல் அதன் பன்மை=மாடுகள், மிருகங்கள். ஆனல் இங்கு இது மரியாதைப் பன்மை போன்று, ஒருமையிலேயே வந்துளது (இப்பகுதியில் வெகிமோத்தை அடுத்து வரும் வினேச் சொற்களெல்லாம் படர்க்கை ஒருமையாகவே உள்ளன).

16–17. பகைமைச் சக்தியாகிய காம வெறியினே இந்தக் கண்ணிகளில் புனிதர் அக்குவின் தோமையார், பெரிய ஆல்பர்ட்டு ஆகியோர் காண்கின்றனர். முன்னவர் வெகிமோத்தை யானே எனக் கருதினுர் எனினும் அதனுல் குறிக்கப்படும் பொருள் அலகைச் சக்தியே எனக் கொண்டார்.

18. முதுகுத் தண்டுகள்—JB. குருத்தெலும்புகள்—AB.

19. படைத்தவர் அதனே ஒடுக்கவும் வல்லவர்—யூத மதாசாரியர்களின் விளக்கத்தை வைத்து அமைத்த மொழிபெயர்ப்பு; AB, ''படைத்தவர் அதற்கு வாள் கொணரவும் வல்லவர்''; RSV, ''படைத்தவர், அதற்குவாள் எடுத்து வருக''; JB, ''படைத்தவர் வாளால் அதனே அச்சுறுத்தித் (தடுத்து வைத்துள்ளார்)'',

20. கானக விலங்கெலாம் களித்துவிளை யாடும்
மேன்மலை விட்டது தான்வரும் அதனிடம்.
21. தாமரைக் கடியில் தான்படுத் திருக்கும்
நாணல் மறைவிலும் சதுப்பு நிலத்திலும்.
22. தாமரை அதற்குத் தண்நிழல் அளிக்கும்;
ஓடை மரங்கள் ஒசிந்து கவியும்.
23. ஆறே பெருகினும் அதுகலங் காது,
வெள்ளம் வாய்க்குள் ஏறினும் விலகாது.
24. கண்களைப் பொத்திப் பிடித்திடப் போவதோ?
கொக்கியால் மூக்கினைத் துளைக்கப் போவதோ?''

---

20. ''கானக விலங்கெலாம் களித்துவிளையாடும் மலைநில விளைவினை அதனிடம் கொணர்வர்'' என்பது பெரும்பாலோர் மொழிபெயர்ப்பு (காண்க RSV.)

AB: ''கானக விலங்குகள் கவலாது கிடக்கும், ஆங்கே காட்டுயிரெல்லாம் களித்து விளையாடும்.'' JB: ''தடுத்து வைத்துள்ளார், காட்டு விலங்குகள் களித்துத் திரியும் குறிஞ்சி நிலத்துள் அது கூடாது எனவே.''

இங்கு மூலத்தில் வந்து இடர்ப்படுத்தும் சொல் bûl இசை. 44:19இல் மரத்தோடு சேர்ந்து வருவதாம்; அதனை yebûl (produce) என மாற்றுவதுதான் வழக்கம். மாற்றாமல் செய்தது இங்குள்ளது.

22. தாமரை—நீரில் வளரும் தாமரை அன்று, நிலத்தில் வளரும் தாமரை எனும் முட்செடி என்பது AB குறிப்பு; zizyphus lotus: இது கலிலேயாக் கடலைச் சுற்றி ஏராளமாம்.

தண் (நிழல்)—'தண்' சேர்த்தது, வெகிமோத்தின் நீர்நிலை விருப்புக்கு ஒத்தது ஆதலால். 'தன் நிழல்' என மாற்றிக்கொள்ளலாம்.

23. ஆறே—யோர்தான் ஆற்றைக் குறிப்பதாகக் கொள்ள இடமில்லை என்று AB விளக்குகிறது. கவிஞர் அந்த ஆற்றையும் அதன் தலைப் பகுதியில் சகதியில் உகளும் எருமை மாடுகளையும் நினைவில் கொண்டு எழுதியிருந்தாலும் வியப்பதற் கில்லை. எருமை தன் மூக்கு மட்டும் வெளியே தெரிய நீர்நிலைகளில் கிடப்பது வழக்கமே. புராணப் படைப்பினைப் புனைந்துரைக்கும் போதும் கவிஞன் தனக்குத் தெரிந்த நனவுலகப் படைப்புகளைத்தானே பயன்படுத்த வேண்டும்?

24. பெரிய மீனையும் அதன் கண்களை இறுக்கிப் பிடித்தால் எளிதில் அடக்கிவிடலாம் என்று AB ஆசிரியர் மார்வின் எச். போப் அனுபவத்தால் கூறுகிறார். அதன்படி அமைந்த மொழிபெயர்ப்பு. எளிதில் பொருள் விளங்காத கண்ணி இது.

AB-யின் மாற்று மொழிபெயர்ப்பு: ''ஈட்டியால் அதன்கண் எறிந்தழிப் பாயோ?
கொக்கியால் மூக்கினைக் குத்திடு வாயோ?''

ஆராயத்தக்க மற்றொரு அமைப்பு: ''சுருக்காங் கண்ணியால் பிடித்திடு வாயோ?
மூக்கணாங் கயிறு மாட்டிடு வாயோ?''

# 41

# லெவியத்தான்

**41:** [அடுத்து லெவியத்தான் (என்னும் கடல்வாழ் உயிரினம், திமிங்கிலமோ முதலேயோ அன்று, புராண வருணனை பெற்ற அரக்கத் தன்மையுடைய ஓர் உயிரினம்) வருணிக்கப்படுகின்றது. யாராலும் அடக்கிவிட முடியாத அந்த ஆணவ சக்தியை யோவு அடக்கி வைக்க முடியுமா என்று கடவுள் வினவுகின்றார் (1–34).]

*41:1.* *"தூண்டிலால் லெவியத்தான் தூக்கிடு வாயோ?*
*நாக்கினை நாரினுல் தைத்திடு வாயோ?*
*2.* *மூக்கணாங் கயிறுதான் கோக்க முடியுமோ?*
*தாடையைக் கொக்கியால் தமரிட் டிடுவையோ?*
*3.* *பன்னிப் பன்னிப் பணிந்து வேண்டுமோ?*
*இன்சொற் பேசி இரந்து கெஞ்சுமோ?*

---

*1.* *லெவியத்தான்—உகாரித் புராணங்கள் லோத்தன் என்னும் கடல்வாழ் இராட்சசப் பிராணியைக் குறிப்பிடுகின்றன; ஏழு தலையுள்ள பறவை நாகம் எனவும் பிடி கொடாமல் வளைந்து நெளிந்து நழுவிவிடுவது எனவும் அதனை அவை வருணிக்கின்றன. இசை. 27:1 கண்ணியிலும் அக் குறிப்புகளைக் காணலாம். சங். 73:12–14 குறிப்பிடும் வருணனையும் ஒப்பு நோக்கத் தக்கது. லெவியத்தானைக் குறிக்கும் எபிரேயச் சொல் ஒன்று 'நாகாஸ்' (=நாகம்). அது கடல்வாழ் உயிரினம் என்பதை இம்மேற்கோள்களும் சங். 103:26உம் காட்டும். சங். 103:26இல் வரும் லெவியத்தான் திமிங்கிலமாகத்தான் இருக்க வேண்டும் என்பார் உளர்.*

*லெவியத்தான் உறைவிடம் சாதாரணக் கடல் அன்று; அண்டத்தின் ஆதாரக் கடல். லெவியத்தான் பலதலை நாகம். ஆயிரம் நாவு படைத்த ஆதிசேடன் இவ்விடத்தில் நினைவுக்கு வருகிறது; இரண்டும் ஒன்று என்பது கருத்து அன்று.*

*நாக்கினை நாரினுல் தைத்திடு வாயோ?*—Qumran Targum *மொழிபெயர்ப்பைப் பின்பற்றி யமைத்தது.* AB, RSV, JB *"கயிற்றால் அதன்நா அமுக்கி வைக்க/கட்ட முடியுமோ?" லெவியத்தான் மயக்கும் மாய மொழிகளைப் பேசும் நாவன்மை படைத்தது (கீழே 12ஆம் கண்ணி காண்க); அதன் நாவைத் தைத்து வைப்பது இயலாது என்பது கருத்து.*

*2.* *மூக்கணாங் கயிறு மாட்டுவதும், மூக்கில் வளையம் கோப்பதும் அடிமையாக்குவதைக் குறிக்கும்.*

*3.* *கும்ரான் ஏட்டில் இந்த அடிகள் முன்பின்னாக மாறியுள்ளன; பொருள் ஒன்றே. லெவியத்தான் கெஞ்சாது; ஆணவ உருவகம் அது; காண்க கடைசிக் கண்ணி,*

4. உன்னோடு ஒப்பந்தம் பண்ணிக் கொள்ளுமோ
என்றென் றைக்கும்நீ ஏவல் கொள்ளவே?
5. பறவைபோல் வைத்துநீ விளையா டுவையோ?
மகளிர்க்கு அதனைத் தளைந்து தருவையோ?
6. பேரம் பேசுவ ரோபெரு வணிகர்?
கூறுபோ டுவரோ சில்லறை வணிகர்?
7. எறிபடை யால்அதன் தோல்அரிப் பாயோ?
மீன்எறி வேல்களால் தலைதுளைப் பாயோ?
8. கைவை அதன்மேல்; கனவிலும் மறவாய்
பட்ட பாட்டினை; மீண்டும் தலைப்படாய்.
9. ஆசை யிருப்பின் அதுவீ ணுகும்;
கண்டதும் தேவர்கள் கவிழ்ந்துஇறங் கிலரோ?

---

4. ஒப்பந்தம்—தோற்ற மன்னர் வென்று அடிப்படுத்திய வேந்தனோடு செய்து கொள்ளும் ஒப்பந்தம் இது.
என்றென்றைக்கும் ஏவல்—காண்க உபா. 15:17; 1 சாமு. 27:12.

5. கிளி, புறு போன்ற பறவைகளை வீட்டில் பிள்ளைகளுக்கு விளையாட்டுச் செல்லப் பிராணிகளாகக் கொடுப்பது வழக்கம். அதேபோல் நாயைத் தோல்வாரினால் கட்டி வைத்துச் செல்லமாக வளர்ப்பதும், அந்தத் தளையினால் அதனைக் கையில் பிடித்துக்கொண்டு நடந்து செல்வதும் தெரிந்ததே.

6. லெவியத்தானைப் பெரிய வியாபாரிகள் மொத்தமாக விலை பேசுவதும் இல்லை, சிறிய வியாபாரிகள் கூறுபோட்டு விற்பதும் இல்லை.
சில்லறை வணிகர்—மூலம், கனானியர்; பொருள் 'வியாபாரிகள்.' செக்கச் சிவந்த புகழ்பெற்ற சாயத் துணிகளை விற்றவர்களைக் கனானியர் என்ற சொல் முதலில் குறித்தது. பின்னர் அது பொதுப்படையாக வணிகர்களுக்கு ஆகி வந்தது.
JB: ''கூறுவரோ அதை மீனவர் ஏலம்?
கூறுபோ டுவரோ சில்லறை வணிகர்?''

7. ''இலவங்கம் அழுத்துவை யோஅதன் உடலில், ஈருள் ளிகள்அதன் தலைசெறிப் பாயோ?'' என்று ஒருவர் மீன்கறி படைத்துள்ளார், இக்கண்ணி மொழி பெயர்ப்பில்.

8. கனவிலும் மறவாய்—AB, ''நினைப்பாய்''; RSV, ''கருதிப் பார் நீ.''
மீண்டும் தலைப்படாய்—மீண்டும் தலைப்பட மாட்டாய் (RSV), மீண்டும் தலைப்பட வேண்டாம் (AB) என்று இருவகையாகவும் பொருள்படும்.

1–8 கண்ணிகள் எபிரேய நூலில் 40ஆம் அதிகாரத்து 25–32 கண்ணிகளாக உள; 9ஆம் கண்ணி அதில் 41ஆம் அதிகாரத்து 1ஆம் கண்ணியாகும்.

9–12 கண்ணிகள் பொருள் விளங்கக் கடினமானவை என்றும், புறவினத்தாரின் புராணக் குறிப்புக்களை மறைக்க வேண்டிச் சிதைவடைந்துள்ளன என்றும் AB குறிப்பிடுகிறது.

9. ஆசை—லெவியத்தானைப் பிடித்து அடக்கும் ஆசை.
கண்டதும் . . . கவிழ்ந்திறங்கிலரோ—AB-யைப் பின்பற்றி ஆக்கியது. இந்த அடி உகாரித் புராணக் குறிப்பு ஒன்றைப் பெரிதும் ஒத்துள்ளது (AB காண்க).
JB: ''கண்டா லேதலை கறங்கும் உனக்கு.''

10. மூர்க்கமா காதோ மூட்டிவிட் டால்அது?
ஆர்அதன் முன்னே நிற்றல் ஆற்றுவார்?
11. போவரோ புண்படாது எதிர்த்துவிட்டு எவரும்?
அகன்ற வையகம் அனைத்திலும் யாரே?
12. அதன்வீண் பெருமையும் ஆணவப் பேச்சும்
மயக்கும் மந்திர மாயமும் சொல்லவா?
13. யார்உரி வார்அதன் மேல்இடு சட்டை?
எவர்துளைப் பார்அதன் இரட்டைக் கவசம்?
14. பயங்கர நச்சுப் பற்கள் சூழும்
திண்முகக் கபாடம் திறக்கவல் லார்எவர்?
15. அதன்முதுகு அடுக்கிய கேடய வரிசைகள்
நெக்கு விடாதுகல் ஒக்க நெருக்கம்.
16. ஒன்றோடு ஒன்றுஅவை ஒட்டிய வகையே
ஒருசிறு மூச்சும் இடைநுழை யாதே.
17. ஒன்றுமற் றொன்றொடு தழுவித் துன்னின,
அரவணைத் திருப்பன பிரியா இணையென.

---

10. அதன் முனனே—பல சுவடிகளில் உள்ளபடி AB அமைத்தது; RSV, ''என் முன்னே.''

11. மூல எபிரேய ஏட்டில் உள்ளதன் பொருள் விளங்கவில்லை என்ற அடிக் குறிப்புடன் RSV தருவது: ''எனக்களித்தவன் எவன், அவனுக்கு நான் வெகுமதி அளிக்க? அகன்ற வானம் அனைத்தின் கீழும் உள்ளதெல்லாம் எனதே.'' புனிதர் சின்னப்பர் உரோமை 11:35இல் எடுத்தாள்வதும் இக்கருத்துப்படவே. ஆனால் கிரேக்க மொழிபெயர்ப்பு வேறுபடுகிறது. அதை ஒட்டிய மொழிபெயர்ப்பே இங்கு AB தந்தது. ''அதனை அணுகத் துணிந்தார்க்கு அளிப்பேன் பரிசு, அவனுக்கே யாம் வானின் கீழுளதெல்லாம்'' என்றும் மொழிபெயர்த்துள்ளனர்.

12. ''Would I keep silence concerning his boastings, Or his proud talk, or his fair array of words?'' என்பதே மூலத்தை மிகவும் ஒட்டிய பெயர்ப்பு (JPS). அதனை AB ''அதன்வீண் பெருமையை அடக்கினேன் அல்லனோ, ஹாயின் மொழிந்த மந்திர சக்தியால்'' எனத் தந்துளது; காரணங்களை அதன் குறிப்பில் விரிவாகக் காணலாம். ஹாயின் என்பவன் (hyn) உகாரித் புராணங்களில் மந்திர சக்தி வாய்ந்த அஸ்திரங்களை இயற்றிக் கொடுப்பவன் (மயன் போலும்). இச் சொல் (ḥyn என்ற சிறு மாற்றத்துடன்) உபா. 1:41இல் வருவதையும் குறிப்பிட்டு, இசுரவேலர் மந்திர தந்திரங்களை நம்பிப் போருக்குக் கிளம்பியதால்தான் கடவுள் அவர்களைக் கடிந்துகொண்டார் என்பது சாலப் பொருத்தமாகும் என்கிறது AB. JPS, AB இரண்டையும் இணைத்து ஆக்கியது இங்குள்ள மொழிபெயர்ப்பு.

14. திண்—பொருத்தம் கருதிச் சேர்த்தது; உள்ளது, 'அதன்.'

15, 16, 17இல் வருணிக்கப்படுபவை வரிசை வரிசையாக உள்ள 'செதிள்கள்.'

16. ஒரு சிறு மூச்சும்—மூலம், காற்று.

17. முதலடியைக் கும்ரான் சுவடியைத் தழுவி மொழிபெயர்த்தால், ''தோழிகளாயவை தோள்கோத் துள்ளன.''

18. தும்மினல் அதுமினும் சுடர்கதிர்க் கும்மே;
கண்கள் வைகறை இமைபோ லும்மே.
19. அதன்வாய் வெளிவரும் தீப்பந் தம்மே;
ஆங்கிருந்து எரிதீப் பொறிபறக் கும்மே.
20. நாசிகள் வழியே புகைகக் கும்மே;
கொழுந்துவிட்டு எரியும் தீஅழ லும்மே.
21. தொண்டையிற் கங்கு கனன்றுஎரி யும்மே;
வாயினிற் கிளம்பி வரும்தீப் பிழம்பே.
22. ஆற்றல் கழுத்தினில் அமைந்துஉறை கின்றது;
மூர்க்கம் அதற்கு முன்செலும் துள்ளி.
23. அழுத்திப் பதிந்தன அதன்தசை மடிப்புகள்
அசையா வண்ணம் அதன்மிசை இறுக.
24. நெஞ்சுக் குலையோ பாறைத் திண்ணம்,
அரைக்கும் திரிகையின் அடிக்கல் போன்றே.
25. எழுந்து கலக்கிடின் இமையவர் அஞ்சுவர்,
குலைந்து நடுங்கிக் குப்புற விழுவர்.

---

18. லெவியத்தானின் வாயும் பார்வையும் தீயுமிழ்வன.

கும்ரான் சுவடியிலுள்ள இரண்டாம் அடி மொழிபெயர்ப்பு, AB கருததுப்படி, 'கண்கள்' என்னுமல் 'நெற்றி' என்று குறிப்பதாகும்.

20. கொழுந்துவிட் . . . அழலும்மே—AB (Third Edition); RSV, "கொதிக்கும் சட்டியும் எரியும் நாணலும்போல்."

22. பெரிய மிருகங்கள் பாய்வதற்கு வேண்டிய தாக்கும் வலு அவற்றின் கழுத்தினுடைய வலுவாகும்.

மூர்க்கம்—AB; JB, RSV, "அச்சம்."

லெவியத்தான் உடலுரமும் கொடிய வெறியும் உடையது என்ற கருத்து.

23. கும்ரான் சுவடியின்படி, இரண்டாம் அடி: "இரும்புபோல் இறுகி."

24. நெஞ்சுக் குலை—இருதயம். உருகாத, அசையாத நெஞ்சம் கல். (காண்க எசேக். 11:19; 36:26).

லெவியத்தான் ஈவிரக்கம் இல்லாதது.

25. எழுந்து கலக்கிடின்—AB, "at his terror"; RSV, "when he raises himself up."

இமையவர்—AB, "gods"; RSV, "mighty ones"; Vulgate, "வான தூதர்"; JB, "waves."

லெவியத்தானின் திகில் தேவர்களையும் கதி கலங்க வைக்கும்.

குலைந்து நடுங்கி—இதற்குரிய மூலச் சொல்லைக் "கடலின் அலைகள்" எனவும் விளக்கியுள்ளனர்; ஆனல் அது குறிப்பிடும் "உடைந்து சிதறுதல்" அலைகளை அன்று, அச்சத்தால் வரும் குலை நடுக்கத்தையே குறிக்கும் என AB சுட்டிக் காட்டுகிறது.

குப்புற விழுவர்—மூலச் சொல்லின் வழக்கமான பொருள் "தங்களைத் தூய்மை யாக்கிக் கொள்வர்." ஆனல் அது குப்புற விழுந்து வணங்குவதால் அடையும் பலனாகும்.

இரண்டாவதடி ABயைப் பின்பற்றியது; மேலே சுட்டியபடி இது மூலத்தின் சொற்களுக்கு மிக நெருங்கி அவற்றை ஒத்திருப்பது காணலாம்.

26. தாக்குவர் வாளே தான்செல் லாதே,
ஈட்டியே வேலே எறிபடை ஏதே?
27. இரும்பா, அதற்குத் துரும்பே யாகும்;
வெண்கலம் உளுத்த மரம்போ லாகும்.
28. எய்வோன் அம்புக்கு எடுக்காது ஓட்டம்;
கவண்எறி கல்லும் அதன்மேல் பதரே.
29. குண்டாந் தடியா, சிம்புஎன உறைக்கும்;
ஒய்யெனப் பறக்கும் வேல்கண்டு சிரிக்கும்.
30. உடல்அடி கூரிய ஓட்டுச் சல்லிகள்;
அளற்றில் பரம்புக் கட்டையாய் உகளும்.
31. கொப்பரை யெனக்கடல் கொதிக்கும் அதனால்,
தைலம் காய்ச்சும் தட்டமாம் ஆழி.
32. கடந்து சென்ற தடமோ மினுங்கும்
ஆழியோ நரைமூ தாண்மையோ என்ன.
33. இல்லை அதற்குநேர் இணைஇம் மண்ணில்;
அச்சம் என்பது படைத்திலது அதுவே.
34. மேலாம் எவற்றையும் நேர்விழி நோக்கும்,
ஆணவ மாக்கட் கெல்லாம் அரசே.''

---

28. எய்வோன் அம்பு—மூலம், ''வில்லின் மகன்.''

27–30. எவ்வகையாலும் மனிதன் வலியத்தானை அடக்க இயலாது; அது அளற்றில்—பாதாளத்தில்—பதிந்து கிடப்பது; அதைப் பற்றியிருப்பது.

32. ஆழி—படைப்புக் காலப் பாதாள நீர்நிலை, சாதாரணக் கடல் அன்று (AB).

34. ஆணவ மாக்கள்—மூலம், ''sons of pride''; காண்க 28:8. படைப்புப் பொருள்களுக்கெல்லாம் ஆதாரமாய் அமைந்திருக்கும் ஆணவம், அணுத் தன்மை, குறை, vanity, வலியத்தானாக உருவகிக்கப்பட்டுள்ளது எனலாம். இந்தக் குறையிலிருந்து நீங்க முயல்கிறான், விழைகிறான் மனிதன்; ஆனால் அவனால் அது ஏலாது. இறைவனது திருவருள் ஒன்றே அவனுக்கு விடுதலை அளிக்கும், மெய்ஞ்ஞானத்தை நல்கி. ஆகவே, இறைவன் தன்னை வாதுக்கு இழுத்த யோபை அருள் வேட்குமாறு அழைக்கும் அழைப்பாக அமைந்துள்ளன 38 முதலான இவ்வதிகாரங்கள் என்பது பொருந்தும். இனி முடிவு யோபின் கையில் இருக்கின்றது.

## V. முடிவுரை

# 42

## யோவின் தவமும் வாழ்வும்

**42:** [யோவு, எல்லாம் வல்ல இறைவனின் பேராற்றலையும் தமது அறியாமையையும் ஒப்புக்கொண்டு, இதுவரை கடவுளைப் பற்றித் தாம் அறிந்திருந்தது கேள்வியறிவே என்றும் இப்போது அனுபவத்தால் உணர்ந்துகொண்டதாகவும் கூறி அமைகின்றார். அறியாது சொன்னவற்றுக்கு மனம் நொந்து வருந்துகின்றார் (1–6). யோவைப்போல் உண்மை பேசவில்லை என்று அவருடைய நண்பர்கள் மூவரையும் கடவுள் கடிந்துகொள்கின்றார்; அவர்கள் தண்டனைக்குத் தப்ப வேண்டின், பலி செலுத்தித் தங்களுக்காக மன்றாடும்படி யோவைக் கேட்டுக்கொள்ள வேண்டுமென்று பணிக்கின்றார். கடவுள் யோவுக்கு மீண்டும் நல்வாழ்வு அளிக்கின்றார். அவரது செல்வமும் சீரும் சிறப்பும் முன்னிலும் இருமடங்காகின்றன. ஏழு ஆண்மக்களும் மூன்று அழகிய பெண் மக்களும் பிறக்கின்றார்கள். யோவு நூற்று நாற்பது ஆண்டுகள் வாழ்ந்து நாலாவது தலைமுறை வரை கண்டு மகிழ்ந்து மன நிறைவோடு காலமாகிறார் (7–17).]

*42:1. யாவேக்கு அதன்பின் யோவின் மறுமொழி:*

*2. ''அனைத்தும்நீர் வல்லவர், அறிந்தேன் இதனை;*
*குலைத்தல்ஒல் லாதுநீர் நினைத்தது எதையும்.*
*3. எண்ணிய எண்ணம் இருளுறும் வண்ணம்*
*அறிவில் லாமல் மறைப்பவன் எவன்இவன்?*

---

*1. யாவேக்கு—காண்க 38:1 குறிப்பு.*

*2. அறிந்தேன் இதனை—*AB, RSV, *''என்பதை அறிவேன்.'' எனினும் அறிந்தேன் என்பது தமிழ் மரபுக்கு ஒத்ததாகத் தோன்றுகிறது.*

*3. எண்ணிய . . . எவன் இவன்?—காண்க 38:2; அதற்கும் இதற்கும் ஒரே ஒரு சொல்தான் வேறுபாடு. எடுத்து எழுதியவர்களின் தவறுதலால் இக்கண்ணி இங்கு இடம் பெற்றது என்பது பலர் கருத்து. எனினும், யோவு கடவுளின் அதே கேள்வியைத் தன்னைக் குறித்துக் கேட்டுக்கொள்கிறார் எனக் கொள்ளலாம். இவ்வாறும் சில அறிஞர்கள் பொருள் காண்கின்றனர். ''எண்ணிய . . . எவன்? இவன்'' என யோவு தம்மைத்தாமே சுட்டிக் காட்டிக்கொள்கிறார்.*

*இருளுறும் வண்ணம் மறைப்பவன்—கடவுள் தம் கருத்தினை நமக்குத் தெரிவித்தால் ஒழிய நாம் அறிய முடியாது; நாம் நமக்கு விளங்காத, நம் சிற்றறிவுக்கு எட்டாத புதுமைகளில் ஈடுபட்டுள்ளோம்; இச்சிக்கலுக்கு விடை தெரிய வேண்டு*

எனக்கு விளங்காப் பொருள்கள் பேசினேன்
என்னுடை அறிவுக்கு எட்டாப் புதுமைகள்.
4. கேட்க என்சொல், பேசுவன் யானே;
விடைஎனக்கு இறுப்பீர், வினவுவேன் உம்மிடம்.
5. காதால் இதுவரை கேள்விப் பட்டேன்;
கண்டேன் இன்றுநான் கண்ணால் உம்மை.
6. ஆகையால் என்சொல் வெறுத்தேன் விட்டேன்;
புழுதியும் சாம்பலும் பொறுத்தேன் தவமே.''

7. கடவுள் இவ்வளவும் யோபினிடம் பேசிய பின்னர், தேமா ஊர் ஏலிப்பாசை நோக்கி, ''உன்மீதும் உன் நண்பர் இருவர்மீதும் எனக்கு எரிச்சல்; என் அடியவன் யோபினைப் போல நீங்கள் என்னைப் பற்றி வாய்மை பேசவில்லை'' என்று கூறி மேலும்

---

மானால், ''வெள்ளிடை மலையாய் வந்து'' விளங்க வேண்டும், அதாவது இறைவன் தானே வெளிப்படுத்த வேண்டும். யோபினது ஆன்மீக அனுபவம் இவ்வாறு அவரை இறைவெளிப்பாட்டின் வாயிலருகே கொண்டு நிற்க வைத்துள்ளது.

4. இக்கண்ணியும் பிழையாக இங்கு நுழைந்தது என்பர். எனினும் யோபின் கூற்றுகப் பொருந்துமாறு விளக்கலாம். முதலடிக்கு, ''இப்போது நான் சொல்லப் போவதைக் கேட்க வேண்டும்; ஆம், முன்பு வாதுக்கு இழுத்த (காண்க 13:22) அதே யோபுதான் பேசுகிறேன்'' என்றும், இரண்டாமடிக்கு ''நீர் அருள்கூர்ந்து தெரிவிப்பதை அமைதியாகக் கேட்பேன், ஏற்பேன்'' என்றும் பொருள் கொள்ளத் தக்கவாறு அமைத்துள்ளேன். ஆனால் ''விடை எனக்கு இறுப்பாய், வினவுவேன் உன்னிடம்'' என்று 38:3இல் இருக்கும் அதே சொற்களே மூல பாடம். இறைவனை மரியாதைப் பன்மையில் விளிப்பதாக இதுவரை எழுதியதால் இங்கு ''உன்னிடம்'' ''உம்மிடம்'' என்றும் ''இறுப்பாய்'' ''இறுப்பீர்'' என்றும் மாறவேண்டியதாயிற்று. மாற்றாமல், முன்பு கடவுள் கூறியதை யோபு இங்கு நினைவுபடுத்திக் கொள்கிறார் எனக் கொள்வதே பெரும்பாலோர் கருத்து (எ. டு.—தி. ப.).

5. காதால்—மூலச் சொல், ''report of ear'' (=செவிவழிக் கேள்வி).

கண்டேன் . . . கண்ணால்—கடவுள் பிறருடைய வாய்மொழியாக அன்றி நேரில் பிரசன்னமாக யோபுக்கு விளங்கி, அவரது ஐயத்தை நீக்கியுள்ளார். இந்த ஆன்மீக அனுபவம் சற்றும் ஐயத்துக்கு இடமில்லாதது என வலியுறுத்த இவ்வாறு கூறினார் போலும். 19:23–27இல் யோபு எடுத்துக் கூறிய அவரது ஆவலை நினைவுகூர்க; இன்று கடவுளே நேரில் பேசியதால் அவரது பராமரிப்புப் பற்றி இனி யோபுக்கு ஐயம் இல்லை.

6. என் சொல்—மூலத்தில் தொக்கி நிற்கும் செயப்படு பொருள் (AB); என்னை (RSV). முன்பு யோபு சொல்லியவை என்பது பொருள்.

பொறுத்தேன்—பொருத்தம் என்று இங்கு தமிழில் சேர்த்த சொல். காண்க. 30:19.

7. வாய்மை—'சரியாக' என்பதே மூலச்சொல்லின் அடிப்படைப் பொருள். 'பாவத்தைக் கடவுள் எப்போதும் வேதனையால் தண்டிக்கிறார், வேதனைப் படுபவர் பாவம் செய்தவரே' என்ற கூற்று சரியானது அன்று. நண்பர்கள் துளைத் தெடுத்தபோதும் துவளாமல் யோபு தமது மாசின்மையை வலியுறுத்தியது சரியான பேச்சு. (காண்க 13;4, 7–11; 6:14–30).

சொன்னுர்: 8. ''ஆகவே ஏழு காளைகளும் ஏழு செம்மறிகளும் நீங்கள் என் அடியவன் யோவினிடம் கொண்டுபோய், உங்களுக்காக எரியூண்பலி செலுத்துங்கள்; என் அடியவன் யோவு உங்களுக்காக வேண்டிக்கொள்வான். அவனுடைய மன்றாட்டை நான் கேட்டருள்வேன்; என்னைப் பற்றி என் அடியவன் யோவு பேசியதுபோல் வாய்மை பேசாத உங்களுக்கு நான் ஆத்திரத்தில் ஏதும் செய்து விடாமல் இருப்பேன்.'' 9. அவ்வாறே தேமாஊர் ஏலிப்பாசும் சுவாஊர் வில்தாதும் நாமாஊர் சோப்பாரும் போய்க் கடவுளின் கட்டளைப்படி செய்தார்கள். கடவுள் யோவின் வேண்டுதலைக் கேட்டருளினுர்.

10. யோவு தம் நண்பர்களுக்காக மன்றுடியதும், கடவுள் அவருடைய செல்வங்களையெல்லாம் மீட்டுக்கொடுத்தார்; முன் இருந்ததைப்போல் இருமடங்காக்கினுர். 11. அவர் உடன்பிறந்தவர்கள் அனைவரும், அவருக்குத் தெரிந்தவர்கள் எல்லாரும் அவரைப் பார்த்துப்போக வந்தார்கள்; அவரோடு அவர் வீட்டில் விருந்தயர்ந்தார்கள்; கடவுளால் அவருக்கு நேர்ந்த பொல்லாங்குகளுக்கெல்லாம் அவரை ஆற்றித் தேற்றினுர்கள்; ஆளுக்கு ஒரு வெள்ளிக் காசும் ஒரு தங்க மோதிரமும் அவருக்கு வழங்கினுர்கள். 12. யோவினுடைய முன்னைய நாள்களைக் காட்டிலும் பின்னைய நாள்களைக் கடவுள் பெரிதும் வாழ்த்தியருளினுர்; யோவு இப்பொழுது பதினுலாயிரம் ஆடுகளும் ஆறுயிரம் ஒட்டகங்களும் ஓர் ஆயிரம் இணை எருதுகளும் ஓர் ஆயிரம் பெட்டைக் கழுதைகளும் உடையவரானுர். 13. ஏழு ஆண்மக்களும் மூன்று பெண்மக்களும் பிறந்தனர். 14. மூத்த மகளுக்கு மணிப்புறு என்றும், இரண்டாவது மகளுக்குப் பரிமளம் என்றும், மூன்ருவது மகளுக்கு அஞ்சனச் சிமிழ்

---

8. ஆத்திரத்தில்—AB; RSV, 'உங்கள் மதியீனத்துக்குத் தக்கவாறு.''
நண்பர்கள் தம் வாது வெல்லாததும் யோவை விட்டுப் போய்விட்டார்கள் எனத் தெரிகிறது.

8–9. பிறர் பழிக்கு இலக்கானவர் அவர்களுக்காக வேண்டி மன்றுடுவதைக் காண்க. ஏலிப்பாசு 22:30இல் சொன்னதும் இங்கு நினைந்து உருகத் தக்கது.

10. செல்வங்களை மீட்டு—ஓர் இனத்துக்காக அன்றி ஒரு தனி மனிதனுக்காக நல்வாழ்வை மீட்டுத் தருவது குறித்து இச்சொற்றெடர் எடுத்தாளப்படுவது இந்த ஓர் இடத்தில்தான் (AB). காண்க எரே. 29:14, 30:3; எசேக். 16:53, 39:25.

11. காண்க 19:13.
வெள்ளிக் காசு—மூலச் சொல் 'கிஸித்தா.' பிதாப் பிதாக்கள் காலத்தில் ஓரளவு நிலம் வாங்க நூறு கிஸித்தா வேண்டும் (காண்க யோசுவா 24:32). ஆகவே வெள்ளிக் காசு கொடுத்தது பெரும் பொருள் கொடுத்தது போன்றதாகும் (AB).

14. பெண் பிள்ளைகள் பெயர்கள் மட்டும் உள்ளன; ஆண் மக்களின் பெயர்கள் இல்லை. உகாரித் புராணங்களிலும் பாகால் (Baal) பிள்ளைகளில் புதல்வியர் பெயர்கள் மட்டுமே உள (AB).

என்றும் அவர் பெயர் சூட்டினார். 15. யோபின் புதல்வியரைப்போல் அழகுள்ள பெண்கள் அந்நாடு முழுவதிலும் வேறு ஒருவரும் இல்லை. அவர்களுடைய தந்தை அவர்களுடைய சகோதரர்களுக்குக் கொடுத்ததுபோல் அவர்களுக்கும் தமது சொத்தில் பங்கு கொடுத்தார். 16. இதன் பிறகு யோபு மேலும் நூற்று நாற்பது ஆண்டுகள் வாழ்ந்து தம் பிள்ளைகளையும் பேரப் பிள்ளைகளையும் நாலாவது தலைமுறை வரை பார்த்து மகிழ்ந்தார். 17. இவ்வாறாக யோபு நிறைவாழ்வு வாழ்ந்து பழுத்த வயதில் காலமானார்.

---

*15. சொத்தில் பங்கு—ஆண் வாரிசு இல்லாவிட்டால்தான் பெண் பிள்ளைகளுக்குச் சொத்துரிமை உண்டு என்பது இசுரயேலரிடை நிலவிய வழக்கம் (காண்க எண். 26:33; 27:1–8; 36:1–12). ஆகவே இங்கு குறிப்பிடப்படும் பழக்கம் பழைய ஏற்பாட்டு மக்களிடையே ஒரு சிறப்பாகும்.*

*16. நாலாவது தலைமுறை—பேரப் பிள்ளைகளைப் பார்ப்பது நிறைவாழ்வின் பெரு மகிழ்வாகும் (காண்க சங். 127:6; பழ. 17:6). 110 ஆண்டுகள் வாழ்ந்த சூசையும் மூன்று தலைமுறையே கண்டார் (காண்க ஆதி. 50:23).*

*17. காண்க ஆதி. 25:8; 35:29; 1 நாளா. 29:28.*

